# அவள் அழகி...அவள் பாண்ட்ஸ் உபயோகிக்கிருள்




## உங்கள் முக சருமத்திற்கு மினுமினுப்பும் இளமை வசீகரமும் அளிக்க எண்ணெய்ப்பசையற்ற உன்னத

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் முக சருமத்தை பூப்போல மென்மையாகவும், மினுமினுப்பாகவும், மனோகரமாகவும் வைக்கிறது. முகத்திலுள்ள சிறு பருக்கள் போன்றவை நீங்க வழி செய்கின்றது. இதைத் தடவி பவுடர் போட்டுக் கொண்டால் பவுடர் ஒரே சீராக மணிக்கணக்கில் படிந்திருக்கும். உங்கள் முக வனப்புக்கு மெருகூட்ட பாண்ட்ஸ் ஃபேஸ் பவுடர் உபயோகியுங்கள். அது சீராகப்படிகிறது, முகத்திலுள்ள சிறு குறைகளை மூடி மறைக்க உதவுகிறது.

**பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்:**



தினமும் இரவில் உங்கள் முகத்திலும், கழுத்திலும் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் தடவுங்கள். இரண்டு நிமிடங்களுக்குப் பிறகு அதிகப் படியான க்ரீமைத் துடைத்து விடுங்கள். ... சருமத்தில் அடைத்து கிடக்கும் அழுக்கு முதலியவைகளை அது வெளியேற்றும்.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

# கல்கி



பட விளக்கம் 43-ம் பக்கம் பார்க்க.

சோபகிருது, புரட்டாசி 13 ★ செப்டம்பர் 29



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

புகைபிடிக்கும் இங்கிதம்.

# பாத்திரமறிந்து சாம்பலிடு



சிகரெட்டுச் சாம்பலைச் சுற்றுமுற்றும் சிந்தாமலிருப்பது உங்கள் ஒழுக்கத்திற்கு உதவும். சாம்பல் படிக்கம் (ஆஷ் ட்ரே) தென்படவில்லையெனில் கேட்டுப் பெறுவதே மேல். அதை விட்டு, புகைத்த துணுக்குகளைத் தீப் பெட்டிக்குள்ளோ வேறு எதனுள்ளோ திணித்து வைப்பது ஆபத்தாக முடியலாம்.

உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

## பனாமா

Panama 20

CIGARETTES

இழுக்க
இழுக்க
இன்பம் —
இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 614 TAM. Greens' Advtg.



மலர் 23

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

இதழ் 9

# விமோசனத்துக்கு ஒரே வழி

காந்திஜியின் ஜன்மதினம் மகிழ்ச்சியுடன் கொண்டாட வேண்டிய நன்னாளாகும். ஆனால் இன்று மகிழ முடியவில்லை. வேதனை தலைதூக்குகிறது. 'நான் போன பின் என் குரலில் நேருஜி பேசுவார்' என்று அவர் நம்பியதற்கு நேர்மாறாக இன்று பிரதமர் நடக்கிறார். தியாகத்துக்காக அவருடைய ஆன்ம சக்தி படைத்த தொண்டர் படை இன்று சுயநலக் கும்பலாகிவிட்டது; ஆனால் மக்களை மயக்குகிற தந்திர உபாயங்களால் தனது தியாக பட்டயத்தை மட்டும் மீண்டும் புதுப்பித்துக் கொண்டிருக்கிறது. இதையெல்லாம் காணாது காந்திஜி மறைந்ததே அவரது பாக்கியம் என்று எண்ணத் தோன்றுகிறது.

காந்தி ஜயந்தியன்று அவரது உபதேச ஸாரத்தை மனத்தில் புதுப்பித்துக்கொள்வோமாக! இந்தப் பத்திரிகையில் மீண்டும் மீண்டும் எழுதி வரும் விஷயம்தான் இது. என்றாலும் இது யார் காதை எட்டவேண்டுமோ அவர்கள் காதை எட்டாத வரையில் திரும்பத் திரும்ப எடுத்துச் சொல்ல வேண்டிய விஷயமேயாகும். திடபுத்தி என்கிற பெயரில் மூர்க்கப் பிடிவாதம் பிடித்துவரும் ஆட்சியாளர்கள் இதற்குச் செவி சாய்க்கா விடினும், நாட்டின் ஆட்சியைத் தேர்ந்தெடுக்கும் மக்கள் காந்திஜியின் முக்கியமான உபதேசத்தைக் கிரகித்துக் கொள்ள வேண்டும்.

உயிரும் உணர்ச்சியும் கொண்ட தனி மனிதனையே காந்தியடிகள் நாட்டின் ஜீவ நாடியாகக் கருதினார். அரசாங்கம் என்ற உயிரற்ற இயந்திரம் எவ்வளவுக்குக் குறைவாகச் செயல்பட முடியுமோ அவ்வளவுக்கே செயல்பட வேண்டும் என்று வலியுறுத்திக் கூறினார். 'அரசாங்கத்தின் ஏகாதிபத்தியம் தனி மனிதர்களின் ஏகாதிபத்தியத்தைவிடக் கொடுமையானது. ஏனென்றால் தனி மனிதருக்கு இதயம் உண்டு; அரசாங்கமோ இதயமற்ற ஒரு கருவி' என்று மொழிந்திருக்கிறார்.

இன்று நாம் காண்பதென்ன? தனி மனிதன் தனது எல்லாச் சுதந்திரங்களையும் இழந்து நிற்கிறான். சொத்துக்களை அவன் வைத்துக்கொண்டு தனது என்று அனுபவிக்க முடியவில்லை. தான் விரும்பும் முறையில் தொழில் தொடங்க முடியவில்லை. தொடங்கிய தொழிலை வளர்த்துக் கொள்வதும் அவன் கையிலில்லை. எல்லாம் அரசாங்கம் என்ற பெரும் பூதத்தின் கையில் வசமாகி விட்டன. உணர்ச்சிகள் கொண்ட மக்கள் அரசாங்க இயந்திரத்தில் திருகும் மரையும் போல் உணர்ச்சியும் உயிருமற்ற அங்கங்களாகிவிட்டார்கள். காந்திஜி விரும்பிய தேச சுயராஜ்யம் கிட்டிவிட்டதெனினும், அவர் அதனினும் உயர்வாக மதித்த மக்கள் சுதந்திரம் அழிந்து வருகிறது.

தேச வாழ்வு என்பது தேச மக்கள் எல்லோருடைய முயற்சிகளின் கூட்டுத் தொகைதான். தேசியப் பிரச்னைகளில் பெரும்பாலானவை மக்களின் இல்லங்களிலேயே தீர்க்கப்பட வேண்டியவைதான். சட்டசபையிலோ, செக்ரிட்டேரியட்டிலோ, நிமிஷத்துக்கு ஒன்றாக முளைத்துக் கொண்டிருக்கும் நிபுணர் குழுக்களிலோ தேசத்துக்கு வேண்டிய பண்டங்களை சிருஷ்டி செய்துவிட முடியாது. தனிமனிதன், அவனது ஆசை அபிலாஷைகள், நோக்கம், மனப்பான்மை, மனச்சாட்சி, மனோசக்தி இவைதான் மக்களுக்கு வேண்டிய பண்டங்களை உண்டாக்கி, தேச சுபிட்சத்தைத் தேடித் தர முடியும். இவ்வாறு தனி மனிதன் தேச சுபிட்சத்துக்கு உதவ வேண்டும் என்றால் அவ

னுடைய உற்சாகத்தை ஊக்க வேண்டும். தன்னுடைய உழைப்பின் பயனைத்தான் அடைய முடியும்; அனுபவிக்க முடியும் என்ற உற்சாகத்தை அவன் பெறும் முறையில் அவனை ஊக்க வேண்டியதே அரசாங்கத்தின் கடமை. உற்சாகத்தை ஊக்குவதின் மூலம் செய்ய வேண்டியதை இன்று பலவந்தத்தின் மீது செய்ய முனைந்திருக்கிறது அரசாங்கம். நிர்ப்பந்தம் என்பது உபாதைதான் விளைவிக்கும்; உற்பத்தியை யல்ல. பலாத்காரமும் நிர்ப்பந்தமும் உற்பத்திக்கு உதவமாட்டா. இன்று சோஷலிஸ ஏகாதிபத்தியத்திலுள்ள நாடுகள், சுதந்திரப் பொருளாதாரம் நிலவும் நாடுகளிலிருந்து தங்களுக்கு அத்தியாவசியமான உணவுப் பண்டங்களைக்கூட வாங்குவதைக் காண்கிறோம். ருஷ்ய சர்க்கார் கனடா தேசத்திலிருந்து 110 லட்சம் புஷல் கோதுமை விலை கொடுத்து இறக்குமதி செய்ய ஒப்பந்தம் சமீபத்தில் முடிந்தது. இன்னும் 6 கோடி புஷல் கோதுமைக்குப் பேச்சு நடந்துகொண்டுவருகிறதாகச் செய்தி வந்திருக்கிறது. சொத்துக்களை யெல்லாம் சர்க்கார் உடைமையாக்கும் கொள்கையை சோஷலிஸ அரசாங்கங்கள் தளர்த்தி வருவதைக் காண்கிறோம். இதைக் கண்கூடாகக்கண்டும்நமது ஆட்சியாளர்கள் அறிவு பெறவில்லை.

தனது வாழ்முறையை வகுத்துக் கொள்ளும் சுதந்திரம், தனது தொழிலை நிர்ணயித்துக்கொள்ளும் உரிமை, நியாயமான முறையில் பிறருடன் போட்டியிட்டுத் தனது தொழிலை நிலைப்படுத்திக் கொள்ளும் வாய்ப்பு, அப்படித் தொழில் புரிவதால் ஈட்டிய சொத்தைத் தான் அனுபவிக்க முடியும் என்ற நம்பிக்கை—இவைதான் தேச சுபிட்சத்தைப் பெருக்க முடியும். இவற்றைச் சிதிலமாக்கிவிட்டு, முன்னேற்றத்தை நாடுவது வடிகட்டின மடமையேயாகும். காட்டுமிராண்டிகளுக்கு மட்டும் உகந்த, நாகரிக யுகத்துக்கு முந்திய சமுதாய வாழ்வையும், சர்வாதிபத்திய அரசு முறையையும் நாகரிக மக்களுக்குப் பொருத்துவது விபரீதமாகும்.

காங்கிரஸ் ஆட்சியிலும் சிலரிடம் செல்வம் பெருகுகிறது. ஆனால் இவர்கள் தங்கள் திறமையையும், சுய முயற்சியையும் கொண்டு மற்றவர்களுடன் நியாயமாகப் போட்டியிட்டு லாபம் அடைந்தவர்களில்லை. அரசாங்கத்தின் செல்லப் பிள்ளைகள் என்ற முறையில் அதனிடமிருந்து சலுகைகள் பெற்றவர்களே இன்று உற்பத்திப் பெருக்கம் காண்கிறார்கள். ஒருசிலரின் இந்தக் கிரமமற்ற முன்னேற்றம் தேசிய முன்னேற்றமாகாது.

ஓர் அரசாங்கமானது உண்மையிலேயே தனது தேர்தல் வெற்றியைவிட தேச முன்னேற்றத்தில் அதிகக் கருத்துக்கொண்டிருக்குமானால் முதலில் உற்பத்தியைப் பெருக்குவதற்காக ஊக்கமும், உற்சாகமும் அளிப்பதில்தான் கவனம் செலுத்தும். அப்புறம்தான் விநியோகத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். ஆனால் நமது சர்க்காரோ வோட்டுப் பெட்டியில் கருத்தை வைத்துக்கொண்டு உற்பத்தியைப் பெருக்கு முன்னரே சோஷலிஸ விநியோகத்தைப் பற்றி அதிகமாக நினைக்கிறது. உற்பத்திப் பயன் தங்களுக்குக் கிடைக்காது என்று உற்பத்தியாளர்கள் எண்ணுகிற சூழ்நிலையில் உற்பத்தி எப்படிப் பெருகும்?

"நாங்கள் தனியார் துறையை அழித்துப் பூரண சர்க்கார் தொழில் முறையை நடத்துபவர்கள் அல்ல. சர்க்கார், தனியார் இருவரும் ஈடுபட்டுள்ள கலப்புப் பொருளாதாரமே எங்கள் மதம்" என்கிறார் நேருஜி. ஆனால் இந்தக் கலப்புப் பொருளாதாரத்தின் அந்தரங்கத்தை நாடு அறியும். தனியார் துறை என்பதே இல்லாவிடில், அப்புறம் பெர்மிட், லைசென்ஸ் முறைக்கு இடம் இல்லாது போய் விடுமே! அவை இல்லாவிடில் தேர்தலுக்கு நிதி சேர்ப்பது எப்படி? காங்கிரஸ் கட்சி வலுப் பெறுவதற்கு வாய்ப்பான முறையில்தான் இன்று தனியார் தொழில் துறை உருவாக்கப் பட்டிருக்கிறது. சலுகைகளுக்கும், லஞ்ச ஊழல்களுக்கும், காங்கிரஸ் கட்சி - அரசாங்கம் இவை ஒன்றில் மற்றது சங்கமமாவதற்கும் நிலைக்களனாகவே இன்று தனியார் தொழிலைச்



கரடி விடுகிறார்கள்!




சர்க்கார் நிர்வகித்து வருகிறது. இதை மூடி மறைத்துத் தனியாருக்குத் தொழில் சுதந்திரம் தந்திருப்பதாகச் சொல்வது வெறும் தந்திரப் பேச்சுதான்.

இந்த நிலைமாறி, காந்திஜி விரும்பியது போல், மக்கள் மக்களாக இருக்க வேண்டும், கால்நடைகளைப்போல் வாழ லாகாது என்று நம்புபவர்களெல்லாம் அடிகளின் பிறந்த தினத்தன்று ஒரு சங்கல்பம் செய்து கொள்ள வேண்டும். காந்திஜியின் பெயரைச் சொல்லிக் கொண்டு அவரது ஆணைக்கு நேர்மாறாகச் செல்பவர்களுக்குத் தாங்கள் ஒருபோதும் ஆதரவளிக்கக் கூடாது என்பதே அது. காந்தீயம் நிலைபெற வேண்டுமெனில் காங்கிரஸ் கட்சியை ஆட்சியிலிருந்து விலக்கியே ஆகவேண்டும். இது தவிர நமக்கு வேறு விமோசனம் கிடையாது.

## மலேஷியா

சுதந்திர வாழ்க்கையை மேற்கொண்டு புதிய சகாப்தத்தைத் தொடங்கும் மலேஷியா ராஜ்யத்தின் ஒரு கோடி மக்களுக்கும் அரசாங்கத்துக்கும் நல்வாழ்த்துக் கூறுகிறோம்.

ஜனநாயக ரீதியில் இரண்டு ஆண்டு காலமாகவே சாரவாக், வடபோர்னியாப் பகுதி மக்கள் மலேயாவுடன் இணைந்துகொள்ள வேண்டும் என்ற தங்கள் விருப்பத்தைப் பல தடவைகளில் நிரூபித்துள்ளனர். தேர்தல்களிலும் அரசாங்கக் கூட்டுக் கமிட்டிகளிலும் இவ்விருப்பத்தை ஐயமறத் தெரிவித்துள்ளனர். பிரிட்டிஷ் அரசாங்கம் நியமித்த கோப்பால்ட் கமிஷனுடைய யாதாஸ்தும் மக்கள் விருப்பம் மலேயாவுடன் இணைவதையே வலியுறுத்துவதாகத் தெரிவித்திருக்கிறது. சமீபத்தில் ஐ. நா. சார்பில் நடத்திய விசாரணையும் இந்த முடிவை ஊர்ஜிதப்படுத்தியுள்ளது.

முன்னெச்சரிக்கையாக இவ்வளவு விரிவான ஏற்பாடுகள் செய்ததற்குக் காரணங்கள் பல. சாரவாக், ஸபா என்றும் வடபோர்னியா பகுதிகள் இந்தோனேஷியாவுடன் தான் இணைந்திருக்க வேண்டும் என்று சுகர்னோ சர்க்கார் ஓயாது பிரசாரம் செய்து வந்ததுடன் கொரில்லாப் போரைக் கூட ஊக்கத் தயங்கவில்லை. பிரிட்டிஷாரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறும் இப்பகுதிகள் இயற்கை வளம் மிகுந்த செல்வம் கொழிக்கும் பிரதேசங்கள். இவற்றைத் தமது ராஜ்யத்துடன் சேர்த்துக்கொள்ள யாருக்குத்தான் ஆசை இருக்காது! கம்யூனிஸ்டுக் கட்சியின் ஆதரவும் உலக

கம்யூனிஸ்டுகளின் உத்வேகமும் இவ்வாசையை மேலும் தூண்டின. அண்டை ராஜ்யத்தின் அமைதியைக் குலைக்கும் செய்கைகளின் விளைவுகளிலிருந்து விடுதலை பெறும் இப்பகுதிகளைக் காக்க விரிவான ஏற்பாடுகள் செய்துகொண்ட பின் மக்களின் விருப்பத்துக்கிணங்கவே மலேஷியா ராஜ்யம் தோன்றியிருக்கிறது.

எனினும், இம் முடிவைச் சுமுகமாக ஏற்றுக்கொள்ள இந்தோனேஷிய சர்க்காரும், பிலிப்பைன்ஸ் சர்க்காரும் தயாராக இல்லை. நாட்டை விட்டு வெளியேறும் வெள்ளைக்காரர்களின் சூழ்ச்சியினால் ஏற்படுத்தப்பட்டது மலேஷியா ராஜ்யம் என்பது அவர்களின் வெளிப்படையான குற்றச்சாட்டு. தங்களுடைய செல்வாக்கைத் தென் கிழக்கு ஆசியப் பகுதியில் குலைப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கை என்பது சொல்லாமல் சொல்லப்படும் மற்றொரு குற்றச்சாட்டு. இவற்றினின்று எழுந்த சீற்றம்தான் இப்போது தோன்றியுள்ள கலவரங்கள்.

இது கவலை தரக் கூடிய விஷயம் என்றாலும், புது ராஜ்யத்தின் தலைவர் துங்கு அப்துர் ரஹ்மான் மக்களின் ஆதரவைப் பூரணமாகப் பெற்றுள்ளவர். செல்வாக்கும், நிர்வாக அனுபவமும் மிருந்தவர். அரசியல் சாமர்த்தியமும் உள்ளவர். எல்லாவற்றுக்கும் மேலாக கம்யூனிஸ்டுகளின் மனப்பான்மை, நடவடிக்கைகள், சூழ்ச்சிகள் முதலியவற்றை நன்கு அறிந்தவர். புது ராஜ்யத்தில் கம்யூனிஸ்டுகளின் ஆதிக்கத்தைப் பரவ விடாமல் பாதுகாக்கும் ஆற்றலும் மனோ திடமும் உள்ளவர். இவருடைய தலைமையில் மலேஷியா ராஜ்யம் உலக அரசியல் சுழலில் அகப்படாமல் தனது முன்னேற்றப் பாதையில் செல்லும் என்று எதிர்பார்க்கலாம். பொருளாதார முன்னேற்றத்துக்கு வாய்ப்புக்கள் அமோகமாக இந்த ராஜ்யத்தில் இருக்கின்றன. சமீப காலத்தில் பலப்பல புதுத் தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. மக்களின் சராசரி வருமானம் இந்தியாவில் உள்ளதைவிட நான்கு மடங்கு அதிகம். அமைதியுடன் முன்னேறினால் சுபிட்சம் நிலவக் கூடிய நாடு மலேஷியா. புது ராஜ்யங்கள் கவனித்துக் கொள்ள வேண்டிய முதல் பொறுப்பு தங்கள் சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்வது. இதை மலேஷியா மக்கள் மிக நன்றாகவே உணர்ந்திருக்கின்றனர். இதைக் கொண்டுதான் மலேஷியாவின் எதிர் கால சுபிட்சம் மிளிர வேண்டும். அப்படி மிளிர வேண்டுமென ஆண்டவனைப் பிரார்த்திப்போமாக!

<u>அட்டைப்பட விளக்கம்</u>

## கழனியில் ஒரு காரிகை

**மானுடர் உழாவிடினும் வித்து நடாவிடினும்**
**வரம்பு கட்டாவிடினும் அன்றி நீர் பாய்ச்சாவிடினும்**
**வானுலகு நீர் தருமேல் மண்மீது மரங்கள்**
**வகை வகையா நெற்கள் புற்கள் மலிந்திருக்குமன்றே?**

என்று பாடினார் பாட்டுக்கொரு புலவர். அவ்வாறு மனிதர்களின் பணியை எதிர்பாராமலே மண்மகளை மலர்த்தி மணி மணியான தானியங்களைத் தருகிற மழைக்காலம் நெருங்குகிறது. மேகத்தைக் கண்டவுடன் புவித்தாய் தன் மெய் சிலிர்ப்பது தான் இப்படிப் பயிர்களாகத் தோன்றுகின்றனவோ என்று நாம் எண்ணி மகிழும் கார்காலம் அருகில் வந்துவிட்டது. வருணனும், பூதேவியும் பயிர்ப் பச்சைகளைத் தாமே வாரி வழங்கட்டும் என்று அவர்களிடமே உலகை ஒப்பித்துவிடாமல், கழனியில் இறங்கி உழைக்க முன்வரும் உழவர் பெருமக்களை யெல்லாம் இன்று நினைத்து வணங்குகிறோம். அவர்களை மற்றவர்கள் தொழுது பின் செல்ல வேண்டும் என்ற காலம் மாறி இன்று அவர்கள் எத்தனையோ சட்ட திட்டங்களுக்கு ஆளாகி இன்னலுற்றுத்தான் நிற்கிறார்கள். ஆனால் அவர்கள் அல்லும் பகலும் வாழுகிற இயற்கைச் சூழல் எந்த இன்னலிலும் இன்பத்தைக் காணும் இதயத்தை அவர்களுக்கு அளித்து வரும். ஆம். இதோ நமது இதழட்டையில் காண்கிறோமே, வினுவின் தூரிகையில் உருவான கார் நிறத்துக் காரிகை - இவளுடைய இன்பத்துக்கு என்ன குறைச்சல்? காளிதாஸனின் யக்ஷன் மேகங்களிடம் தமது காமினிக்குச் சேதி சொல்லியனுப்பினான் எனில் இவளோ வானிலே இறகுகள் பெற்றுப் பறப்பது போன்ற வாத்துக்களிடம் தன் அத்தானுக்கு ஏதோ ஆசைச் சேதி சொல்லி அனுப்புகிறாள்! அந்த இரகசியச் செய்தியை அறிய நமக்கு உரிமை கிடையாது. ஆனால் இவளைப் போல, நாம் உண்டு களிக்க உதவும் அன்னபூரணிகள் ஆனந்தம் குன்றாமல் வாழவேண்டும் என்று வாழ்த்தும் அன்புரிமை மட்டும் நமக்கு என்றும் உண்டு: அந்த அன்பு வெல்லும் என்ற நம்பிக்கையும் உண்டு.



எடின்பரோ இசை விழாவின் மூலம் நமது அரும் கலைஞர்கள் பலர் பாரதத்தின் கலைப் பெருமையைப் பாருக்கெல்லாம் பிரகடனப்படுத்தியுள்ளனர். இந்த விழாவில் கர்நாடக சங்கீத ஜோதியைச் சிகரத்தில் ஏற்றித் திருப்பணி புரிந்திருக்கிறார் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள். அதன்பின் லண்டனிலும், ஃப்ராங்க்பர்ட்டிலும், ஜினீவாவிலும், கெய்ரோவிலும் கானமிசைத்து மேல்நாடுகளில் ஜயக்கொடி நாட்டியிருக்கிறார். 'சென்று வருக; வென்று வருக!' என்று வாழ்த்தி அனுப்பிய பாரதத்துக்கு ஸ்ரீமதி எம். எஸ்ஸும், அவரது இசைவாழ்வை மலர்வித்து வரும் ஸ்ரீ சதாசிவம் அவர்களும் இம்மாதக் கடைசியில் திரும்புகிறார்கள். செப்டம்பர் 30ந் தேதி பம்பாயில் வந்திறங்கும் சதாசிவம் தம்பதியர் அக்டோபர் 2ந் தேதி சென்னை வந்தடைகிறார்கள். வெற்றித் தம்பதியரைப் பெருமிதத்துடன் வரவேற்கிறோம்!



# வாரி வழங்கும் வாரியார்

திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள் இன்றைக்கு ஒரு தத்துவமாக விளங்கி வருகிறார்.

அவருடைய கதா காலட்சேபங்களைக் கேட்கச் சிறுவர், சிறுமியர், ஆடவர், பெண்டிர், வித்வான்கள், பாமரர்கள், பணக்காரர்கள், ஏழைகள், இப்படி எல்லா வகைப்பட்ட மக்களும் எவ்வித பேத உணர்ச்சியுமின்றிப் பெருங் கூட்டமாக வந்து, அவரது கருத்துக்களிலே, பிரசங்க பாணியிலே கரைந்து போவதைக் காணும் போது மெய்சிலிர்க்கிறது.

சமீபத்தில் திரு வாரியார் தியாகராய நகர் சிவ விஷ்ணு ஆலயத்தில் கம்ப ராமாயணச் சொற்பொழிவு ஆற்றி ஒரு கலக்குக் கலக்கி விட்டார். ராஜாஜி இரண்டு நாள் வாரியாரின் பிரசங்கத்தைத் தொடர்ந்து கேட்டு மகிழ்ந்தார்.

இப்போது திருமுருக கிருபானந்தவாரியார் மயிலாப்பூர் சம்ஸ்கிருதக் கல்லூரியில் கந்த புராண விரிவுரை ஆற்றி வருகிறார். இந்த உபந்நியாசத் தொடரில் கிடைக்கும் நிதி சாவித்திரி அம்மாள் ஓரியண்டல் பள்ளிக்கு அளிக்கப்படும்.

திருப்புகழில் ஆழ்ந்து, முருகப் பெருமானிடம் அயராத பக்தி கொண்ட வாரியார் கந்தன் புகழ்க் கதையைச் சொல்லும்போது, அந்த வார்த்தைகளில் தனியானதோர் வேகமும் பக்தியும் மிளிர்கின்றன. கேட்பவர்கள், உள்ளத்திலும் உடலிலும் மின்சாரம் பாய்ச்சினாற் போல் புல்லரித்துப் போகின்றனர். இந்தத் தொடர் அக்டோபர் முதல் தேதியுடன் முடிவு பெறுகிறது என்று அறிகிறோம்.

வாரியார் அவர்களின் சொற்பொழிவுகளைக் கேட்கத் தமிழ் கூறும் நல்லுலகமெங்குமுள்ள தமிழ் மக்கள் ஆர்வமுடன் இருக்கிறார்கள். ஆகவே அவருக்குத் தேசத்தின் பல்வேறு திசைகளிலிருந்தும் அழைப்புக்கள் வந்தவண்ணமாக இருக்கின்றன.

திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் தமது பிரவசனங்களின் மூலம் கிடைக்கும் பொருளில் பெரும் பகுதியை அறப் பணிகளுக்கே ஒதுக்கிவிடுகிறார். அவரது சொந்தத் தேவை மிகச் சொற்பம். அதனால் நற்பணிகள் தொடங்குபவர்கள் அனைவரும் கிருபானந்த வாரியார் அவர்களை விரும்பி அழைக்கிறார்கள்.

தியாகராய நகர் கிருஷ்ண கான சபையில் ஒரு தொடர் நிகழ்ச்சிக்கு அவர் இணங்கியிருப்பதாக அறிகிறோம். தியாகராயநகர் சிவ விஷ்ணு ஆலயத் திருப்பணிகளுக்கு உதவ வாரியார் அவர்கள் ஞாயிறு தோறும் சிவ விஷ்ணு ஆலயத்தில் இறைவன் புகழ் பாடி, இறை பணி புரிய இணங்கி யிருக்கிறார் என்றும் தெரிகிறது. சிவ விஷ்ணு ஆலயத் திருப்பணி விரைவில் வெற்றிமுகம் காணும் என்று நம்பிக்கை உண்டாகிறதல்லவா?

கிருபானந்தவாரியார் ஒரு நாளைக்கு மூன்று நான்கு இடங்களில் இரண்டு மணி நேரம் மூன்று மணி நேரம் விகிதம் சொற்பொழிவாற்றுகிறார். "என்றும் இளையாய்!" என்று நக்கீரர் பரவிய முருகப் பெருமான் கிருபானந்தவாரியாருக்கு என்றும் இளமை நல்கி அருட் பணிகளைக் கூட்டுவிக்க வேண்டும் என்பதே லட்சக்கணக்கான அன்பர்களின் பிரார்த்தனையாகும்.



25

திருமாலின் வடிவழகை இத்தகையது என்று அளந்து பேச முடியுமா? முடியாது. பேசுகிறவர்களுடைய பேச்சுத் திறன் அளவுதான் அந்தப் பிரபாவ வர்ணனை செல்லும். இதைப் பாடுகிறார் பேயாழ்வார்:

பேசுவார் எவ்வளவு
　　பேசுவர் அவ்வளவே
வாச மலர்த்துழாய்
　　மாலையான் — தேசுடைய
சக்கரத்தான் சங்கினன்
　　சார்ங்கத்தான் பொங்கரவ
வக்கரனைக் கொன்றான்
　　வடிவு!

[வடிவு என்றால் சுபாவம் என்பது பெரியோர்களின் உரை. பொங்கு அரவ வக்கரனை - உறுமிக் கொண்டு வந்த தந்த வக்கிரன் என்ற அசுரனை. கொன்றான் - சம்ஹாரம் செய்தவனுகிய திருமாலினுடைய. வடிவு - கலியாண குணங்கள். பேசுவார் எவ்வளவு பேசுவார் அவ்வளவே - பேச வல்லார்கள் எவ்வளவு பேசினாலும் அத்தனைக்கும் இடம் கொடுக்கும். அதாவது அதற்கு வரம்பு இல்லை. பேசுகிறவர்களுடைய பேச்சுக்கு அளவும் வரம்பும் உண்டு. ஆனால் எம்பெருமானுடைய குணங்களுக்கு அளவு இல்லை.]

வாச மலர்த்துழாய்
　　மாலையான் — தேசுடைய
சக்கரத்தான் சங்கினன்
சார்ங்கத்தான்

[இவை அனைத்தும் எம்பெருமானுடைய வர்ணனை. வாச மலர்த்துழாய் மாலையான் - வாசனை பொருந்திய துளப மாலையை அணிந்தவன். தேசுடைய சக்கரத்தான் - மங்காத ஒளி வீசும் சக்கராயுதத்தைத் தாங்கியவன். சங்கினன் - கையிலே சங்கை ஏந்தியவன். சார்ங்கத்தான் - சாரங்கம் என்ற வில்லைக் கையிலே பிடித்தவன்.]

பேசுவார் எவ்வளவு
　　பேசுவர் அவ்வளவே
வாச மலர்த்துழாய்
　　மாலையான் — தேசுடைய
சக்கரத்தான் சங்கினன்
　　சார்ங்கத்தான் பொங்கரவ
வக்கரனைக் கொன்றான்
　　வடிவு!

குணங்களை எடுத்துப் பூரணமாகச் சொல்ல இயலாது. அவனுடைய திருநாமங்களைச் சொல்லி அழைத்துத் திருப்தியடைய வேண்டியதுதான் பக்தனுடைய காரியம் என்பதைக் காட்டுவதுபோல் பாட்டில் திருமாலின் நாமங்கள் சிலவற்றை ஒன்றன்பின் ஒன்றாகச் சொல்லி முடிக்கிறார்! நம்முடைய வழிபாட்டு முறையில் நாமாவளி ஒரு சிறந்த அம்சமாகும். காதில் ஒலிக்கும் திருநாமமே பூஜைக்கு உரிய ஒலிமூர்த்தியாகிறது!

# அமரகவிக்கு அஞ்சலி





தமிழ் கூறும் நல்லுலகமெல்லாம் பாரதி விழா இம்மாதத்தில் சிறப்பாக நடந்தேறி யிருக்கிறது. நாட்டு மக்களின் நல்வாழ்வுக்காகப் பாடிய கவிஞர் பெருமானுக்கு நாடெங்கும் அஞ்சலி செலுத்தப்படும் நல்ல தருணம் இது மகாகவி பிறந்த ஊராகிய எட்டயபுரத்தில் ஒவ்வொரு வருஷமும் இந்த மாதத்தில் பாரதி விழாவைத் திரையுலகுடன் தொடர்பு கொண்ட யாரேனும் ஒருவர் முன்னின்று நடத்துவது வழக்கமாகி வருகிறது.



முன்பொரு முறை நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அவர்கள் எட்டயபுரத்தில் மகாகவியின் விழாவை ஒரு வைபவமாக நடத்தியது நினைவிருக்கும்.

வெள்ளித் திரையில் மங்காத புகழுடன் விளங்கும் ஸ்ரீ ஜெமினி கணேசன் - சாவித்திரி தம்பதியர் இவ்வாண்டு பாரதி விழாவை நடத்தும் பொறுப்பை ஏற்றுக் கொண்டனர்.

இவ்வாறு கலைஞர்கள் நடத்தும் விழாக்களில் கவிஞருக்கு ஓரளவுக்கேனும் இடமிருக்குமா அல்லது நட்சத்திரங்களைக் காண வந்த கூட்டம்தான் மிகுதியாக இருக்குமா என்ற ஐயப்பாடு சிலருக்கு எழுவது இயல்பு. அவர்களுக்கு ஒரு விஷயத்தை நினைவூட்ட விரும்புகிறோம். உலகெல்லாம் புகழ் பரப்பி நிற்கும் கவியரசரைக் கலைஞர் மட்டுமின்றி இனி யாருமே பிரபலப்படுத்த வேண்டியதில்லை. அதற்கு அவசியமுமில்லை. அமர கவிக்கு விழா எடுப்பதன் மூலம் கலைஞர்தான் பெருமை யடைகிறரேயன்றிக் கவிஞருக்குப் புதிதாகப் புகழ் கூடிவிடப் போவதில்லை. பாரதிக்கு அஞ்சலி செலுத்திப் பேசும் போதெல்லாம் நம்மை நாமே உயர்த்திக் கொள்கிறோமே அல்லாது அமரகவி மேன்மையுறுவதற்காக அல்ல. நாம் கவனிக்க வேண்டியதெல்லாம் இந்த விழாவினால் நன்மைகள் உண்டாகி யிருக்கின்றனவா என்பதுதான். அப்படிப் பார்க்கும் போது விழாவில் கூடியிருந்தோரின் ஆன்மீக வளர்ச்சிக்கு மட்டுமின்றி எட்டயபுரம் ஊருக்கே கூட நிறையப் பயன் விளைந்திருக்கிறது என்றே கண்டு மகிழ்ச்சி அடைவோம்.

11–9–63 அன்று எட்டயபுரத்தில் பதினாயிரத்துக்கு மேற்பட்ட ஏழை மக்களுக்கு உணவளித்து "வயிற்றுக்கு நல்லுணவு வேண்டும், இங்கு வாழும் மனிதருக்கெல்லாம்" என்ற மகாகவியின் வாக்கைச் செயலில் காட்டிவிட்டனர் விழா நிர்வாகிகள். நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்த மகோன்னதமான விழாப் பந்தலில், அமைச்சர்களும், அறிஞர்களும், கலைஞர்களும், சட்டசபை அங்கத்தினர்களும், பத்திரிகை நிருபர்களும், மற்றும் லட்சோப லட்சம் பாரதி பக்தர்களும் குழுமியிருந்தனர்.

பேராசிரியர் கல்கி அவர்கள் எழுப்பிய பாரதி மண்டபத்தில் பொருட்காட்சிக்கு ஏற்பாடு செய்து வைத்திருந்தார்கள். அமர கவிக்கு அழியாத நினைவுச் சின்னமாக விளங்கும் பாரதி மண்டபம் தீபாலங்காரத்துடன் கனவு மாளிகையாகத் திகழ்ந்தது.

இதை யெல்லாம் பார்த்த தமிழ்ப் பெரு மக்களின் உள்ளங்களில் உற்சாகம் கரை புரண்டு பொங்கிப் பிரவாகமாகப் பெருகியது. பாரதியாரின் பேத்தி லலிதா பாரதி மகாகவியின்
















பாடல்களை அழகாகப் பாடி ஆவேசமான சொற்பொழிவும் செய்தார்.

தென்னிந்திய பிலிம் வர்த்தக சபைத் தலைவர் திரு ஏ. எல் சீனிவாசன் பாரதி விழாவுக்குத் தலைமை வகித்தார். கல்வி, நிதி அமைச்சர் பக்தவத்சலம் அவர்கள் கொடியேற்றி வைத்துப் பேசினர். சபாநாயகர் திரு செல்ல பாண்டியன் அவர்கள் கப்பலோட்டிய தமிழன் வ. உ. சிதம்பரனாரின் திரு உருவப் படத்தைத் திறந்து வைத்தார். செய்தித் துறை அமைச்சர் பூவராகன் அவர்கள் வ. வே. சு. ஐயர் அவர்களின் படத்தைத் திறந்து வைத்தார். ஜெமினி கணேசன் அவர்கள், பேராசிரியர் கல்கி அவர்களின் உருவப் படத்தைத் திறந்து வைத்தார்.

நாவலர் இரா. நெடுஞ்செழியன், ஈ. வி. கே. சம்பத், ம. பொ. சிவஞானம் ஆகிய கட்சித் தலைவர்களும் விழாவில் பங்கெடுத்துக் கொண்டு அரிய கருத்துரைகளை வழங்கி விழாவுக்குத் தனிச் சிறப்பளித்தனர்.



பராசக்தியிடம் காணிநிலம் கேட்ட கவிஞர் பெருமான் பாரதிக்குப் பேராசிரியர் கல்கி மணி மண்டபம் கட்டி மக்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது போல, ஜெமினி கணேசன் எட்டயபுர மக்களின் ஜீவாதாரத் தேவையான குடி தண்ணீர்த் திட்டத்துக்குப் பெரிய அளவில் ஓர் ஏற்பாடு செய்து அதற்கு முதல் அமைச்சர் காமராஜரைக் கொண்டு அடிக்கல் நாட்டச் செய்தார். திரு ம. பொ. சிவஞானம் அவர்களின் வீரம் செறிந்த உரையும், பேராசிரியர் அ. சீநிவாச ராகவன் ஆற்றிய இலக்கிய மணம் கமழும் உரையும் பாரதி விழாவுக்கு ஏற்றம் தருவதா யிருந்தன. சர்க்கரைப் பந்தலில் தேன் மாரி பொழிந்தது போல, விழாவின் சிறப்புக்குக் கலைஞர்களின் கலை நிகழ்ச்சிகள் அமைந்தன.






இடது பக்கம்: சென்னையில் நடந்த பாரதியார்விழா. போட்டோ: மாதவராவ்
வலது பக்கம்: எட்டயபுரத்தில் நடந்த பாரதியார்விழா.
போட்டோ: எம்பியெஸ்.







ஹாஸ்ய நடிகர் சந்திர பாபு, தங்கவேலு, நாகேஷ் ஆகியவர்கள் பேசினார்கள். பாரதி வேஷத்தில் எஸ். வி. சுப்பையா தோன்றினார்.

சிறந்த பின்னணிப் பாடகர் திரு டி. எம். சௌந்தர ராஜனும், பிரபல பின்னணிப் பாடகி ஸ்ரீமதி சுசீலாவும் பாரதி பாடல்களையும், சில சினிமாப் பாடல்களையும் பாடி யாவரையும் மகிழ்வித்தனர்.

''கண்ணன் என் சேவகன்'' — பாட்டுக்குக் குமாரி ராகினி குழுவினர் அளித்த நடன நாடகம் அற்புதமாயிருந்தது.

காதல் ஒருவனைக் கைப் பிடித்து, அவன் காரியம் யாவினும் கைகொடுத்து வாழும் ஸ்ரீமதி சாவித்திரி கணேசன் பாரதி விழா இனிது நடைபெறக் காட்டிய உற்சாகமும், ஊக்கமும் விழாவைக் களை கட்டச் செய்தன.

மகாகவி பாரதி விழாவை யொட்டி ஒரு சிறப்பு மலர் வெளியிடப்பட்டது. அதைத் தயாரிக்கும் பொறுப்பை ஏற்ற திரு கே. ராம மூர்த்தி பாராட்டத் தக்க முறையில் செய்திருக்கிறார்.

விழா எல்லா விதத்திலும் உயர்வாக நடைபெற ஆரம்பம் முதல் கடைசி வரையில் உறுதுணையா யிருந்தவர் ஜெமினி கணேசன் அவர்களின் காரியதரிசி திரு வி. மகாலிங்கம் அவர்கள். சென்னையிலிருந்து சென்ற பத்திரிகை நிருபர்களையும் ஏனைய விருந்தினர்களையும் நன்கு கவனித்துக் கொண்டதோடு விழா நிகழ்ச்சிகள் நல்ல முறையில் நடைபெறவும் துணையா யிருந்தார்.

12—9—63 அன்று பல அரிய சொற்பொழிவுகளுடன் விழா இனிது முடிவு பெற்றது. சென்னையிலிருந்து புறப்பட்ட பத்திரிகை நிருபர்கள், கலைஞர்கள் ஆகியவர்கள் விசேஷ பஸ்களிலும், கார்களிலும் ஊர்வலமாகச் சென்றது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. மகாகவியின் நினைவு விழா ஒரு மஹோத்சவமாகத் திகழ்ந்ததற்குக் காரணம் ஜெமினி கணேசன் — சாவித்திரி தம்பதியரின் குன்றாத ஊக்கமும், குறையாத உற்சாகமும்தான் என்பதைக் கூற வேண்டுமா? அத்துடன் விழாத் தொண்டர்களின் அயராத உழைப்பையும் கூற வேண்டும்.

இதே மாதிரி ஒவ்வொரு ஆண்டும் பாரதி விழாவைச் சிறப்பான முறையில் நடத்த ஒவ்வொரு கலைஞரும் முன்வந்தால், கவிஞர் பிறந்த எட்டயபுரம் எழில் நகரமாகி விடும். வாழ்க, பாரதி நாமம்!

ஃ ஃ ஃ

'பாட்டுக்கொரு புலவன் பாரதி' என்று கவிமணி புகழ்ந்து போற்றிய அமர கவிக்குச் சென்னை தியாகராய நகர் வாணி மஹாலில் செப்டம்பர் 11, 12 தேதிகளில் அஞ்சலி செலுத்திக் கவியரசரின் பெருமையை எடுத்துரைத்தனர். சென்னை உயர் நீதி மன்ற நீதிபதி திரு பி. எஸ். கைலாசம் இவ்விழாவினைத் தொடங்கி வைத்தார்.

''பாரதியாரின் வசன நடையிலும் சொல்லும் பொருளும் இணைந்திருக்கும் அழகே ஒரு தனி அழகு; நன்கு அனுபவிக்கத்தக்கது. ஓரே உடலில் பார்வதியும் பரமசிவனும் இணைந்துள்ளதைப் போல் சொல்லும் பொருளும் இணைந்து கவிதை உருவாக வேண்டும் என்பதாகக் காளிதாச மகா கவி ஆசைப்பட்டார். வெற்றியும் கண்டார். அதுபோலவே தேமதுரத் தமிழ்க் கவிதையில் பாரதியார் வெற்றி கண்டார்'' என்று விழாவினுக்குத் தலைமை வகித்த தர்ம ரக்ஷாமணி ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர் கூறியதைச் சபையோர் கரகோஷமிட்டு வரவேற்றனர். அன்றைய விழாவினுக்குச் சிகரம் வைத்தாற் போலிருந்தது திரு கிருபானந்தவாரியாரின் சொற்பொழிவு. தேச பக்தி, தெய்வ பக்தி, மொழி பக்தி மூன்றிலும் அமரகவி பாரதியார் செய்த அருந் தொண்டினைத் தமது இனிய குரலில் கூறிச் சபையோரின் பாராட்டுதலுக்குரியவரானார். பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம் பாரதியின் பெருமையைச் செவிக்கினிமையாக வழங்கிய பிறகு கண்ணுக்கு விருந்தாக வழுவூராரின் சிஷ்யை குமாரி பானுமதியின் நடன விருந்து நடைபெற்றது.

இரண்டாம் நாள் விழாவினுக்கு ஸ்ரீமதி சௌந்தரம் கைலாசம் தலைமை வகித்தார். இவ்விழாவிலே பாரதி பாடல்களைப் பாடும் பணியிலும், பரப்பும் பணியிலும் ஈடுபட்ட அறிஞர்களான திருவாளர்கள் ஏவி. மெய்யப்பன், இ. சடகோபன், கே. எஸ். கோபால கிருஷ்ணன், பேராசிரியர் பி. மகாதேவன், எஸ். என். ஸ்ரீராமதேசிகன் ஆகியோருக்குச் சுவாமி சுத்தானந்த பாரதியார் கேடயம் வழங்கிக் கௌரவித்தார்.

தேசிய மகா கவிக்கு அவர் பிறந்த எட்டயபுரத்தில் மண்டபம் எழுப்பிய பேராசிரியர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் நினைவுக் கோப்பைகளைப் பாரதியார் பாடல் போட்டியில் பரிசு பெற்ற சிறுவர், சிறுமிகளுக்குச் சென்னை மந்திரி திரு பக்தவத்ஸலம் வழங்கி, பாரதியாரும், கல்கியும் நாட்டுக்குச் செய்துள்ள சேவைகளை விளக்கினார்.

முத்தமிழில் இயல், இசை நடந்தாகி விட்டது. நாடகத் தமிழ் வரிசையில் பாரதியாரின் பாஞ்சாலி சபதத்தைப் பாரதியாரின் கவிதை நடையிலேயே எஸ். வி. சகஸ்ரநாமம் நிர்வகிக்கும் சேவா ஸ்டேஜ் குழுவினர் நடித்து, சபையோர் அனைவருக்கும் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளித்தனர்.

பாரதியார் விழாவினைச்சென்னையில் விடாமல் நடத்தி வரும் கர்மயோகி ஆக்கூர் அனந்தாச்சாரியாரின் சேவையை மறக்க முடியாது.

தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும் என்று அன்று கண்ட பாரதியாரின் கனவு இன்று நினைவாகி வருகிறது. அந்தத் தேசிய மகா கவிக்கு அவர் தீர்க்க தரிசனத்துக்கு அவர் நினைவைப் போற்றி அஞ்சலி செலுத்துவோம்.

# தளவாடங்கள் / இயந்திரங்கள் வாங்க தவணைகளில் செலுத்தும் கடனுதவி

இந்தத் திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்ட உற்பத்தி விவகாரங்களில் ஈடுபட்டிருக்கும் சிறு, நடுத்தரத் தொழில்களுக்குத் தளவாடங்கள்/ இயந்திரங்கள் வாங்குவதற்குப் பண உதவி செய்வதற்கென்றே ஏற்படுத்தப்பட்டதாகும்.

உங்களுக்கு உற்பத்தியைப் பெருக்கவோ அல்லது மிக முக்கியமான காரணத்திற்காகவோ தளவாடங்கள்/இயந்திரங்கள் வாங்க கடனுதவி தேவைப்பட்டால், தயவுசெய்து அடுத்துள்ள பாங்கின் கிளையை அணுகுங்கள். அவர்கள் எல்லா விவரங்களையும் உங்களுக்குக் கூறி உங்களுக்குத் தேவையான கடன் பெறுவதற்கான வழிவகைகளையும் மகிழ்ச்சியோடு செய்வார்கள்.



## ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா

நாட்டின் தலைசிறந்த பாங்க்

உற்பத்தியைப்
பெருக்கி
பாதுகாப்பு
முயற்சிக்கு
உதவுங்கள்

SISTAS — SB. 74a

அத்தியாயம் பன்னிரண்டு

# பிள்ளையாரிடம் வரம்

வைத்த கண் வாங்காமல் ஆர்வத்துடன் உமாவின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான் பிச்சுமணி. ஆனால் உமாவோ ஏதோ யோசனையாக எங்கோ பார்த்தபடி வெண்கலப் பிள்ளையார் தனக்குக் கிடைத்த கதையைக் கூறி வந்தாள்:

"என் தாத்தாவின் கிராமத்தில் கணபதி சர்மா என்ற ஒரு சங்கீத வித்வான் இருந்தார். அவருக்கு மனைவி மக்கள் என்ற பந்தங்கள் எதுவும் இல்லாததால் இளம் பிராயம் முதற் கொண்டே தம் வாழ்க்கை முழுவதையும் சங்கீத கலைக்கு அர்ப்பணிக்க முன் வந்தார். சித்திவிநாயகரின் அருளினால் அவருக்குக் கர்நாடக சங்கீதத்தில் சம்பூர்ணமான ஞானமும், கர்ணாமிர்தமான சாரீரத்தில் ஒருவித மோகன சக்தியும் வாய்ந்திருந்தன. கச்சேரிகள் நடத்தியும், சினிமாப் படங்களுக்குப் பின்னணிப் பாடல்கள் இசைத்தும் மிகவும் பிரபலமடைந்தார். 'இன்னிசைச் செல்வர்', 'நாதமூர்த்தி' முதலான பல பட்டங்களும் பெற்றுப் பெரும் புகழோடு பெரும் செல்வமும் குவித்தார். ஆனால் நாளாக நாளாக இத்தனைக்கும் நடுவே ஏதோ ஒரு குறைஉணர்ச்சி அவரை அறியாமலே அவர் உள்ளத்தைப் பீடித்துக் கொண்டு வருத்தத் தொடங்கியது. அது என்ன குறை என்பதும் அவருக்குப் புரியவில்லை. அதன் விளைவாக வாழ்க்கையில் ஒருவிதப் பிடிப்பும் இல்லாதது போலவும், ஒரு வித விரக்தி மனப்பான்மையும் உண்டாயிற்று. அந்த உணர்ச்சி தலை தூக்கி நெஞ்சை அரிக்கும்போதெல்லாம் அவருக்குத் தற்கொலை செய்து கொள்ளவேண்டும் போலிருக்கும். அவரோடு நெருங்கிப் பழகிய சிஷ்யர்கள், ரசிகர்கள் அவருக்குச் சித்தம் பேதலித்து விடுமோ என்று பயப்படுவதும் உண்டு. அவர் சில சமயங்களில் தனியாக அறையில் உட்கார்ந்து கொண்டு கடவுளை நினைத்து, 'ஆண்டவனே! எனக்கு அபூர்வமான வித்தை, அலாதியான சாரீரம், பட்டம், பதவி, புகழ், செல்வச் சிறப்பு அனைத்தையும் தந்தாய். அவற்றைக் கொண்டு நான் சுக போகங்கள் பலவற்றையும் அனுப



# குண்டு மல்லிகை

அரு. ராமநாதன்

வித்தேன். ஆனால் ஒன்றிலாவது நான் மனப்பூர்வமான ஆனந்தத்தைக் காணவில்லை. எதிலும் என் உள்ளத்தை ஈடுபடுத்த முடியவில்லை. எந்த இன்பமும் சாரமற்றதாகவே எனக்குத் தோன்றுகிறது. என் வாழ்க்கையே அர்த்தமற்றதாக என் நெஞ்சம் நினைத்து வருந்துகிறது. இந்தக் குறை உணர்ச்சி நீங்குவதற்கு நீ ஒரு மார்க்கம் காட்டினால் நான் உண்மையான ஆனந்தத்தைக் காண்பேன்' என்று புலம்புவார். இவ்வாறு அவர் இனம் புரியாத அந்தக்குறை உணர்ச்சியைத் தாங்க முடியாமல் இறைவனைப் பிரார்த்தித்து வரும் காலத்தில் ஒரு நாள் விநாயக சதுர்த்தியன்று அவர் காவேரி ஆற்றில் தீர்த்தமாடும்போது இந்தச் சின்ன வெண்கலப் பிள்ளையார் அவர் கைக்குள் வந்து அகப்பட்டது.



''இதை அவர் தொட்ட மாத்திரத்திலேயே அவருக்குப் புளகாங்கிதம் ஏற்பட்டு அவருடைய குறை உணர்ச்சியெல்லாம் இருந்த இடம் தெரியாமல் பறந்து போய், ஒரு தெய்வீக உணர்ச்சியால் அளவற்ற குதூகலம் உண்டாயிற்று. உடனே அவர் இதைத் தம் வீட்டுக்கு எடுத்து வந்து அல்லும் பகலும் அனவரதமும் பூஜிக்கலானார். அதன் பிறகு அவர் பிள்ளையாரைத் தவிர வேறு எதைப் பற்றியுமே பாடுவதில்லை. வீட்டை விட்டு வேறு எங்கும் போவதும் இல்லை. சங்கீத சபாக்களின் கச்சேரிகள், சினிமாக் கம்பெனிகளின் பின்னணிப் பாடல்களுக்காக வரும் அழைப்புகள் அத்தனையையும் புறக்கணித்தார். பொன், பொருள், புகழ் எல்லாவற்றையும் துச்சமென மதித்துத் தள்ளினார். அதன் விளைவாக வருமானம் அறுந்துபோய் வறுமை அவரைப் பீடித்தது. அவரிடம் தம்பூர் வாசிக்கும் சிஷ்யன் ஒருவன் மட்டும் கடைசிக் காலம் வரை அவரிடம் பக்தியுள்ளவனாக இருந்ததால் அவன்தான் வீட்டில் உள்ள பாத்திரம் பண்டங்களை விற்று அன்றாடப் பிழைப்புக்கான வழி வகைகளைச் செய்துகொண்டிருந்தான். ஆனால் சர்மாவோ இந்நிலைமையைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் பசி, தாகத்தையும் மறந்து எந்நேரமும் இந்தப் பிள்ளையார் முன் பக்திப் பரவசமான பாடல்களைப் பொழிந்து கொண்டே தம் ஆத்மாவை நாதப் பிரும்மத்தில் ஐக்கியப்படுத்துவதில் ஈடுபட்டிருந்தார். அவருக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ என்று ஊர் மக்கள் குழம்பினார்கள். ஆனால் நாட்டு வைத்தியர்களும், பிரபலமான டாக்டர்களும் வந்து பார்த்தபோது எவருக்கும் எட்டாத ஞான சக்திதான் சர்மாவிடம் குடி கொண்டிருந்ததே தவிர சித்த பேதத்துக்கான அறிகுறிகள் எதுவும் தென்படவில்லை. மேலும் சர்மாவின் உடம்பு துரும்பாக இளைத்து எலும்பும் தோலுமாகவே அவர் தோற்றமளித்தார். என்றாலும் அவருடைய முகத்தில் மட்டும் அலாதியான ஆனந்தத்தின் தேஜஸ் நிறைந்திருப்பதைக் கண்டு டாக்டர்களே மிகவும் ஆச்சரியமடைந்தார்கள். சர்மாவின் விழிகளிலே ஒருவித தெய்விகப் பொலிவோடு சுடர் விடும் ஆத்மீக ஒளியைக் கண்டு சிலர் பக்திப் பரவசமும் அடைந்தார்கள்.

''என் தாத்தாவுக்குச் சர்மாவை நன்றாகத் தெரியும். இருவரும் நெருங்கிய சிநேகிதர்கள். அதனால் என் தாத்தா அவரிடம் 'இப்படிப் பிள்ளையார் பக்தியில் ஒரேயடியாக மூழ்கி விருக்கிறீர்களே, உலக வாழ்க்கையைப் பற்றியும் அதற்குத் தேவையான வருமானத்தைப் பற்றியும் கொஞ்சமாவது யோசிக்கவேண்டாமா?' என்று கேட்டார். அதற்குச் சர்மா வாய் விட்டுச் சிரித்து, 'என் வாழ்க்கை வேறு. உன் வாழ்க்கை வேறு! இசை வெள்ளத்தில் மிதந்து ஆனந்த வானத்தில் சஞ்சரிக்கும் என்னை மறுபடியும் இந்த உலக பந்தங்களை நோக்கி ஏன் இழுக்கிறாய்? உலகத்தின் சுக போகங்களிலும் ஆசாபாசங்களிலும் உழன்று கரையேற வழி தெரியாமல் விரக்தியால் வாடிக் கொண்டிருந்த எனக்கு இந்தச் சின்னப் பிள்ளையார் குரு மூர்த்தியாக வந்து என் ஜென்ம சாபல்யத்துக்கு உரிய மார்க்கத்தைக் காட்டினார். நாத சொரூபமான இறைவனை, நாத விஸ்தாரத்தின் வழியே நாடி, நாதப் பிரம்மத்தோடு ஐக்கியமாகும் சித்தியை இந்த மூல விநாயகர் என் உள்ளத்தில் உபதேசித்தார். அன்றே என் உடல், பொருள், ஆவி அனைத்தையும் இந்தக் குருமூர்த்தத்துக்குத் தத்தம் செய்துவிட்டேன். உலகப் பொருள் அனைத்தும் என்னை விட்டு நீங்கி, பொருள் வடிவான இந்தச் சின்னப் பிள்ளையாரும் என்னை விட்டுப் பிரிய வேண்டிய நாள் என்று வருகிறதோ, அன்றே என் உடலையும் நீத்து என் உயிர் இறைவனடி சேர்ந்து விடும்!..'' என்று கூறினார்.

''பிறகு ஒரு நாள் அவர் என் தாத்தாவிடம் 'நீ நாளை அருணோதயத்தில் என் வீட்டுக்கு வந்து என் சின்னப் பிள்ளையாரை எடுத்துக் கொண்டு போ. அவரை நீ ஒரு நாளைக்கு ஒரு கணமேனும் மனத்தால் நினைத்துப் பக்தி செலுத்தி வந்தால் போதும். ஆனால் என்னைப் போல் உன்னையும் அவர் ஓட்டாண்டியாக்கிவிடுவாரோ என்று பயப்படவேண்டாம். நீ இல்லற தர்மத்தில் ஈடுபட்டுப் பிள்ளைகுட்டிக்காரனாக விளங்குவதால் உனக்கு அந்தத் தர்மத்தை ஒட்டியே சகல பாக்கியங்களும் தந்தருள்வார். இவர் சித்தி விநாயகர் ஆனதால் இவரிடம் நீ என்ன வரம் கேட்டாலும் நிச்சயம் தருவார். ஆனால் உன் வாழ்க்கையிலே நீ ஒரே ஒரு வரம் மட்டும்தான் கேட்கலாம். நானோ என்னை நாதப் பிரும்மத்தோடு ஐக்கியப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற ஒரு வரம்தான் கேட்டேன். அந்த வரம் நாளை அருணோதயத்தில் எனக்குச் சித்தியாகி விடும்' என்று கூறினார்.

# பின்னியின்

## மாசு மருவற்ற தோற்றமளிக்கும் தூய ஸில்க் ஷர்ட்டிங்

உங்கள் தோற்றத்திற்கொரு தனிச்சிறப்பு அளிக்கவல்ல பின்னியின் தூய ஸில்க் ஷர்ட்டிங், மிருதுவானது; அணிவதற்கு சுகமானது பின்னியின் ஸ்பெஷல் பினிஷ் S.56 ஸில்க் ஷர்ட்டிங் அணியுங்கள்—உயர் பண்பின் தற்சின்னம் அது.



பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட்
அக்ரஹாரம் ரோடு, பெங்களூர்-23. பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்
ஸ்தாபனத்தின் ஒரு கிளை

# எத்தனை அழகு! எத்தனை சுகம்!

டான் அளிக்கும் அசல் நைலான் காலுறைகள்
நாகரீகமானது
உறுதியானது
வசதியானது




டான் மில்ஸ் ருயா ஸ்தாபனம்

"அன்று இரவு முழுதும் சர்மாவின் வீட்டில அவருடைய கான மழை பக்திப் பிரவாகமாகப் பெருக்கெடுத்துக் கொண்டேயிருந்தது. அதன் பிறகு, அதிகாலையில் அருணோதயத்தில் குருவி முதலான பறவைகளின் இன்னொலிகளிலும், உலகத்து ஓசைகளிலும் சர்மாவின் இசை கலந்து அடங்கிவிட்டது. என் தாத்தா அவருடைய அறைக்குள் நுழைந்து பார்த்தபோது இந்தச் சின்னப் பிள்ளையார் மட்டும் அங்கிருந்ததே தவிர சர்மாவைக் காணவில்லை. அவரை எங்கே தேடியும் அவர் என்ன ஆனார் என்பதோ, அவருடைய உடல் என்ன ஆயிற்று என்பதோ கூடத் தெரியவில்லை. அவர் துறவியாக எங்கோ வனந்தரங்களுக்குப் போய்விட்டார் என்று சிலரும், ஆற்றிலோ குளத்திலோ மூழ்கி மறைந்து விட்டார் என்று சிலரும் சொன்னார்கள். சித்தர்களின் அனுபவங்கள் தெரிந்த வேறு சிலரோ சர்மா தமது ஆத்மீக வல்லமையால் தமது உடம்பில் ஐம்பூதங்களின் வடிவாய் அமைந்திருக்கும் ஐம்பொறிகளையும் பிரித்து இயற்கையின் ஐம்பெரும் பூதங்களோடு கலந்து மறைந்து நாதப் பிரும்மத்தோடு ஐக்கியமாகி விட்டார் என்று சொன்னார்கள். என் தாத்தாவும் அப்படித்தான் நம்பினார்."

இவ்வாறு உமா கூறி நிறுத்தினாள்.

பிச்சுமணி ஒரு விசித்திரமான கதையைக் கேட்டவன் போல் பரவசமடைந்து, "நம் இராமலிங்க சுவாமிகளின் மறைவைப் பற்றிக் கூட இப்படி அதிசயமான ஒரு கதை கேள்விப்பட்டிருக்கிறேன். அவரது பாடல் ஒன்று என்னுடைய எஸ். எஸ். எல். ஸி. புத்தகத்தில் இருந்தது. அதனால் தமிழாசிரியர் எங்கள் வகுப்பில் இராமலிங்க சுவாமிகளின் சரிதத்தை வெகு உருக்கமாக எடுத்துச் சொன்னார். சுவாமிகள் தம் கடைசிக் காலத்தில் தம்மை ஓர் அறைக்குள் போட்டுப் பூட்டி வைக்கும்படி மெய்யன்பர்களிடம் சொன்னாராம். பிறகு அறையைத் திறந்து பார்த்தபோது சுவாமிகளைக் காணவில்லையாம்" என்றான்.

"ஆமாம்! செயற்கை உடல் இயற்கை உடலாகத் திரிவுபடும் சின்மாத்திர சகஜ சமாதியில் அவர் அசைவற இருந்து தம் உடலின் ஐம்பொறிகளையும் இயற்கையின் ஐம்பெரும் பூதங்களோடு கலந்து மறைவித்து நித்தியானந்த நிலை அடைந்ததாகச் சொல்வார்கள். சிவஞான யோக முதிர்ச்சியால் அவர் இறைவனை ஜோதி வடிவமான அருட்பெரும் ஜோதியாகத் தரிசித்து அந்த ஜோதியிலேயே ஐக்கியமாகி மறைந்தார். சங்கீத வித்துவான் சர்மாவோ இறைவனை ஒலி வடிவமான நாத சொரூபியாகக் கண்டு அந்த நாதப் பிரும்மத்தில் ஐக்கியமாகி மறைந்தார்!" என்றாள் உமா.

"அவரை நீங்கள் நேரில் பார்த்திருக்கிறீர்களா?" என்று பிச்சுமணி ஆவலோடு கேட்டான்.

"இல்லை! அப்போது நான் பிறக்கவே இல்லை! என் தாத்தா பிற்காலத்தில் என்னிடம் சொல்லியதிலிருந்துதான் இந்த விவரங்களெல்லாம் எனக்குத் தெரியும்!"

"உங்கள் தாத்தா இந்தப் பிள்ளையாரிடம் ஏதாவது வரம் கேட்டாரா?"

"ஒரே ஒரு வரம்தானே கேட்கலாம்! அதனால் என் தாத்தா எவ்வளவோ கஷ்ட நஷ்டங்கள் வந்த காலத்திலும் அந்த வரத்தைக் கேட்காமல் தள்ளிப் போட்டுக்கொண்டே வந்தார். கடைசியில்...கடைசியில்..." என்று நெஞ்சு விம்மக் கூறிய உமா

---

## அடுத்த இதழில்

சிறப்பு அம்சம்:

**பாரெல்லாம் தொழுதேத்தும் போப்பாண்டவர்**

•

விசேஷக் கட்டுரை:

**— உழுதுண்டு வாழ்வாரே வாழ்வர்**

•

கலைவளர்க்கும் கோயில்கள்:

**ஒய். எம். ஸி. ஏ. உடற்பயிற்சிக் கல்லூரி**

அக்டோபர் மாதத்திய

**நெடுங்கதை**

**உயிர்ப் பொம்மை**

**வை. சுப்ரமணியம்** எழுதுகிறார்

தன் அதிசய ஜனனத்தைப் பற்றிய நினைவில் மூழ்கினான்.

உமாவின் தாயார் பார்வதி அம்மாளுக்கு வெகு காலம் வரை குழந்தையே பிறக்கவில்லை. பிறகு அவள் காலங் கடந்து கர்ப்பம் தரித்ததால் அது கஷ்டப் பிரசவத்தில் வந்து முடிந்தது. தாய் அல்லது சேய் இவ்விரண்டு ஜீவன்களில் ஏதாவதொன்று பிழைப்பது கூட ஆண்டவனின் அருளைப் பொறுத்தது என்று லேடி டாக்டர் கைவிரித்து விட்டார். அது மாத்திரமன்று! ஒருவேளை தாய் உயிர் பிழைத்தாலும் மறுபடியும் அவளுக்குக் குழந்தையே உண்டாகாது என்றும் சொல்லி விட்டார்கள். இந்த நிலையில் எந்த ஜீவன் பிழைப்பது என்பது பற்றிக் குடும்பத்தினரிடையே பரபரப்பு உண்டாயிற்று. உமாவின் தகப்பனார் சிவஷண்முகத்துக்குத் தம் சம்சாரத்தின் மீது அளவு கடந்த ஆசை! அதனால் அவர் தமக்குச் சந்ததியே இல்லாமல் 'புத்' என்னும் நரகத்தில் விழ நேர்ந்தாலும் தம் சம்சாரத்தை இழக்க விரும்பவில்லை. ஆனால் உமாவின் அம்மாவைப் பெற்ற அவளுடைய தாத்தாவுக்கோ தம் கடைசிக் காலத்துக்குள் ஒரு பேரக் குழந்தையைப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆசை அதிகமிருந்ததால் அதையே வரமாகச் சின்னப் பிள்ளையாரிடம் அந்தச் சமயத்தில் கேட்டார்.

அந்த வரம் பலித்து உமா பிறந்தாள். அவள் தாயார் அவளைப் பெற்ற பிரசவ ஜன்னியிலே இறந்தாள்.

குழந்தை உமாவைப் பார்க்கும்போதெல்லாம் அவளுடைய தகப்பனார் சிவஷண்முகத்துக்குத் தம் சம்சாரத்தை இழந்த துக்கம்தான் வந்து கண்ணை மறைக்கும். அதனால் அவர் சில சமயங்களில் தம்மையும் மறந்து ஆத்திரத்தில் குழந்தையைத் திட்டுவார்.

இந்த நிலையில் அவருடைய உற்றார் உறவினரின் வற்புறுத்தலினால் ராஜம்மாவை இரண்டாந் தாரமாக அவர் மணந்து கொண்டார். அது உமாவின் தாத்தாவுக்குச் சிறிதுகூடப் பிடிக்கவில்லை. அதன் விளைவாக மாமனார் மாப்பிள்ளை இருவருக்கிடையே வாக்குவாதங்கள் முற்றி இரு குடும்பங்களுக்குமிடையே பெரும் மனக் கசப்பும் பிளவும் உண்டாயின.

ஒரு சமயம் உமாவின் தாத்தாவும் பாட்டியும் தங்கள் பேத்தியைப் பார்ப்பதற்காகத் தங்கள் கௌரவத்தையும் விட்டுத் தங்கள் மாப்பிள்ளை சிவஷண்முகத்தின் வீட்டுக்குப் போயிருந்தனர். அந்தச் சமயம் உமாவுக்குத் தவழ்ந்து விளையாடும் குழந்தைப் பருவம்! உமா தவழ்ந்து சென்று ஒரு புத்தகத்தின் மீது தன் சித்தி கழற்றி வைத்திருந்த மூக்குக் கண்ணாடியைத் தள்ளி உடைத்து விட்டாள். உடனே சித்தி 'உங்கள் பெண் பண்ணியிருக்கிற வேலையைப் பாருங்கோ' என்று சாதாரணமாகத்தான் சொன்னாள். அதைச் சிவஷண்முகம் வினையாக எடுத்துக் கொண்டு தம் குழந்தை உமாவை வாய்க்கு வந்தபடி திட்டிக் கையாலும் அடித்து விட்டார். குழந்தை உமா வீறிட்டு அழுதாள். அந்தக் காட்சியை உமாவின் தாத்தாவால் பொறுக்க முடியவில்லை! தம் பெண்ணின் ஜீவனையும் பலி கொடுத்துப் பிள்ளையாரின் அருளினால் அடைந்த பேத்தி அல்லவா? பெற்ற தகப்பனாயிருந்தாலும் அதைத் தொடலாமா? அந்த ஆத்திரத்தில் தாத்தா படபடத்தார்.

பாட்டியோ தன் அருமைப் பேத்தியை வாரி அணைத்து அழுகையைச் சமாதானப்படுத்த முயன்றவளாய், ''பாவம் பச்சைக் குழந்தைக்கு என்ன தெரியும்? தவழுகிற குழந்தை இருக்கும் இடத்தில் யாராவது மூக்குக் கண்ணாடியைக் கழற்றிக் கீழே வைப்பார்களோ? அதை உடைத்து விட்டது என்பதற்காக ஒரு மனுஷன்தான் குழந்தையைப் போட்டு இப்படி அடிப்பாரோ?'' என்று கூறி கூட்டினாள்.

உடனே தாத்தா கண்டசத்தி பாடத் தொடங்கி, ''மூக்குக் கண்ணாடிக்காரியைக் கட்டிக் கொண்ட மோகத்தாலே பெற்ற தகப்பனும் கண்ணில்லாமல், குழந்தையை அடித்துக் கொல்கிறான்'' என்று கத்தினார்.

அவருடைய அந்த அஸ்திரம் உமாவின் சித்திக்குத் தன்னைக் குத்திக் காட்டுவதாகத் தோன்றவே, 'ஓ'வென்று அழ ஆரம்பித்து விட்டாள். அது அவளுடைய கணவர் சிவஷண்முகத்துக்குப் பொறுக்கவில்லை.

அதன் பிறகு அவரும் ராஜம்மாவும் சேர்ந்து ஒரு கட்சியாகவும், உமாவின் தாத்தாவும் பாட்டியும் சேர்ந்து ஒரு கட்சியாகவும் பிரிந்து, எதிர் நின்று குழந்தை உமாவின் வளர்ப்புப் பிரச்னையை முன்னிட்டுப் பெரிதாக வாய்ச் சண்டை புரிந்தார்கள். முடிவில் தாத்தா தம் அருமைப் பேத்தியைத் தூக்கிக்கொண்டு ''எங்கள் உமா தாய் இல்லாத பெண்ணாக இருந்தாலும் அந்தக் குறை அவளுக்குத் தெரியாதபடி நாங்களே அவளை வளர்க்கிறோம். எங்கள் மாப்பிள்ளை இந்தக் குழந்தையின் தொந்தரவு இல்லாமல்



''யாரய்யா நீ? கன்னத்தில் 'கட்' பண்ணி விட்டாய்! எனக்கு வழக்கமா 'கட்' பண்ணுறவர் எங்கேய்யா?''

''அவரு வழக்கமா எங்கே 'கட்' பண்ணுவாரு? அந்த இடத்தையாவும் கொஞ்சம் சொல்லுங்க...!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

நிம்மதியாக, ஆனந்தமாக, சௌக்கியமாக வாழட்டும்'' என்று சொல்லி உமாவைத் தம் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போய் விட்டார். அதுமுதல் உமா தன் தாத்தாவின் வீட்டிலேயே அருமை பெருமையாக வளர்ந்து பெரியவளானாள்.

இந்தப் பழங் கதையை உமா சுருக்கமாகப் பிச்சுமணியிடம் கூறினாள்.

''அப்படியானால் நீங்கள் சின்ன வயதில் உங்கள் அப்பாவின் முகத்தைப் பார்த்ததே, இல்லையா?'' என்று பிச்சுமணி ஏதோ ஓர் ஏக்கம் பீறிடும் குரலில் கேட்டான்.

''இல்லை; நிறையப் பார்த்திருக்கிறேன். அப்பா அடிக்கடி வந்து என்னைப் பார்த்து விட்டுப் போவார். சித்தியும் கூடச் சில சமயங்களில் வந்து எனக்கு விளையாட்டுச் சாமான்கள் எல்லாம் கொடுத்து விட்டுப் போவாள். பிறகு சித்திக்கு வசந்தி பிறந்ததும் என் பாட்டி வீட்டுக்கு வசந்தியை அவள் அடிக்கடி கொண்டு வந்து என்னோடு விளையாட விடுவாள்.''

''இவ்வளவு இருந்தும் நீங்கள் சிறு வயது முதற்கொண்டு உங்கள் அப்பாவின் வீட்டில் வசிக்காமல் உங்கள் பாட்டியின் வீட்டிலேயே இருந்து வருகிறீர்களே, அது ஏன்?'' என்று பிச்சுமணி கேட்டான்.

''என் அம்மாவின் சாயலை அப்படியே நான் உரித்துக் கொண்டு பிறந்தவளாம். அதனால் என் அப்பாவுக்கு என் அம்மாவை இழந்த துக்கத்தையே அந்தக் காலத்தில் உண்டாக்கிக்கொண்டிருந்தேனாம்! மேலும் சித்தி தன் மூத்தாளை நினைவுபடுத்தக் கூடிய சின்னம் எதுவுமே தன் வீட்டில் இருக்கக் கூடாதென்று நினைத்தாள். அதனால் என் பாட்டி என்னைத் தன் வீட்டிலேயே வைத்துக் கொண்டு வளர்த்து வந்தாள். பிறகு எனக்கு நன்றாக விவரம் தெரிந்த வயதில் நானாகத்தான் என் தாத்தாவிடம் அடம் பிடித்து என் அப்பாவின் வீட்டுக்குப் போய் அங்கு சிறிது காலம் வசித்தேன். அப்போது சித்திக்கு அருமையான ஆண் குழந்தை யொன்று பிறந்தது. மூக்கும் முழியுமாக அந்தக் குழந்தை அழகாக இருக்கும். அது அழகுத் தெய்வமாகச் சுப்பிரமணியர் போல் இருக்கிறதென்று நான் சொன்னதால் அப்பா அந்தக் குழந்தைக்குச் சுப்பிரமணி என்றே பெயர் இட்டார். ஓயாமல் 'மணி, மணி' என்று நான் வாயாரக் கூப்பிட்டு அந்தக் குழந்தையைத் தூக்கி வைத்துக்கொண்டு கொஞ்சிக் கொஞ்சிப் பேசுவேன். அதற்கு நான்தான் குளிப்பாட்டி, பொட்டிட்டு, மையிட்டு, அதன் அழகை எல்லோருக்கும் காட்டி மகிழ்வேன். அக் குழந்தை....ஒருநாள் திடீரென்று ஜுரம் கண்டு இறந்து போய்விட்டது. அத் துயரத்தைச் சித்தியால் தாங்கவே முடியவில்லை. என் கண் திருஷ்டியாலும், என் கை பட்ட தோஷத்தாலுமே குழந்தை இறந்து விட்டதென்று என் சித்தியின் உற்றார் உறவினர்கள் சொன்னார்கள். என் சித்தியும் ஏதோ ஆத்திரத்தில் அதே வார்த்தைகளை என்னிடம் சொல்லிவிட்டாள். அவ்வார்த்தைகளே என்னை என் அப்பாவின் வீட்டிலிருந்து விரட்டி என் பாட்டியின் வீட்டில் சேர்ப்பித்தன. இனி என் சித்தியாக வந்து கூப்பிட்டால் ஒழிய என் அப்பாவின் வீட்டுக்கு நானாகப் போகக் கூடாது என்று என் பாட்டியும் சொல்லி விட்டாள்.''

''உங்களுக்குக் குழந்தைகளென்றால் ஏன் இவ்வளவு பிரியம் என்பது இப்போதுதான் எனக்குப் புரிகிறது!'' என்றான் பிச்சுமணி உற்சாகமாக.

''ஆமாம்! அந்தப் பிரியத்தை என் சித்தியின் குழந்தைதான் எனக்கு உண்டாக்கி விட்டு மறைந்தது. அதன் மறைவை மறப்பதற்காகத்தான் குழந்தைகளுக்கு டியூஷன் சொல்லிக் கொடுக்கும் வேலையை நான் ஏற்றுக் கொண்டேன். அந்த வேலையில் அலாதியான திருப்தியும், நிம்மதியும், ஆனந்தமும் கண்டு வருகிறேன்'' என்று கூறி நிறுத்தினாள் உமா. (தொடரும்)

# வள்ளுவர் வாழ்கிறார்

மேடைப் பேச்சுக்கள் எல்லாவற்றையும் விடப் பட்டி மன்றங்கள் எனப்படும் விவாத அரங்குகள் அதிகமாக மக்கள் மனத்தைக் கவர்கின்றன என்பதற்குச் சரியான காரணங்கள் உண்டு. பட்டி மன்றங்களில் வாதமிடுகின்ற இரண்டு கட்சிக்காரர்களுக்கும் நேரம் வரையறுக்கப்பட்டிருக்கும். இரண்டு கட்சியிலும் முதலில் தொடங்கி வைத்துப் பேசுகிறவர்கள் பதினைந்து நிமிஷம் பேசினால் பின்பற்றி வாதிடுகிறவர்கள் ஐந்து ஐந்து நிமிஷங்களோ, பத்துப் பத்து நிமிஷங்களோ வாதிடுவார்கள். எதிர்க் கட்சி வாதத்தை மறுத்து விவாதிக்கிற சுவாரசியத்தில் நேரத்தை மறந்து போகிற பேச்சாளரைத் தலைவரின் மணியோசை கீழே இழுத்து உட்கார வைக்கும். ஒரு பட்டி மன்றத்தில் திடீரென்று தலைவரின் மணியோசை கேட்டுத் திகைத்த பேச்சாளர் ஒருவர் பரபரப்பினாலும் பயத்தினாலும் இத்துடனே எனக்குக் கொடுக்கப்பட்டிருந்த காலம் முடிந்து விட்டதனாலே பேச்சை நிறுத்திக் கொள்கிறேன்'' என்று கூறி விட்டு உட்காருவதற்குப் பதிலாக, ''இத்துடன் என் காலம் முடிந்து விட்டதனால்(?) பேச்சை நிறுத்திக் கொள்கிறேன்'' என்று வாய் தவறிச் சொல்லியதும் கூட்டம் கொல்லென்று சிரித்து விட்டது. அந்த நேரம் பார்த்துத் தலைவர் எழுந்திருந்து. ''சபையோர்களே! ஒரு சிறிய திருத்தம்! பேச்சாளருடைய காலம் முடியவில்லை. பேசக் கொடுத்திருந்த காலம்தான் முடிவடைந்து விட்டது என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்'' என்று கூறிக் கூட்டத்தின் சிரிப்பலைகளை இன்னும் அதிகமாக்கினார். தலைவர் தீர்ப்பு வழங்கும் நேரம்தான் பட்டி மன்றத்தின் சிகர நிலை. இரு கட்சிகளுக்கும் நடுநிலைமையான நீதிபதியாக இறுதி வரை வீற்றிருந்த தலைவர் இரு கட்சி வாதங்களையும் தொகுத்துரைத்துத் தீர்ப்பு வழங்கும் நேரத்திலே கூட்டம் உச்ச நிலை எய்திய சுறுசுறுப்போடு காத்துக் கொண்டிருக்கும். அவ்வளவு சுறுசுறுப்பையும் பாழாக்கி விடுகிறாற்போல் ''இரு கட்சியினரும் சமமாக வாதிட்டனர்'' என்று உப்புச் சப்பில்லாமல் தீர்ப்பு வழங்கிவிடுகிற நீதிபதிகளும் உண்டு. வாதத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படும் தலைப்புக்கள் நன்றாக அமைவதுதான் பட்டிமன்றங்களின் வெற்றிக்கு முக்கியமான காரணம். திருவள்ளுவர் கழகங்களின் ஆண்டு விழாக்களிலும், திருக்குறள் மகாநாடுகளிலும், பட்டி மன்றங்களைப் போலவே சிறப்பான வேறொரு நிகழ்ச்சியும் உண்டு. அந்த நிகழ்ச்சிக்குப் பெயர்தான் திருக்குறள் அவதானம் என்பது. அந்த அவதானம் அட்டாவதானம் முதல் பல வகைப்படும்.




சிவகங்கை வள்ளுவர் இலக்கியப் பேரவையில் பட்டி மன்றம்.



சேலம் வள்ளுவர் கழக விவாத அரங்கு.

## திருக்குறள் அவதானம்

பழங் காலத்தில் அவதானம் (நினைவாற்றல்) என்பது ஒரு சிறந்த கலையாக இருந்தது. அட்டாவதானம், தசாவதானம், சதாவதானம், சோடசாவதானம் என்றெல்லாம் எண் வகையாகவும், பத்து வகையாகவும், பத்துக்கு மேற்பட்ட பல வகைகளாகவும், நினைவாற்றல் கலைகளாக வகைப்படுத்தப்பட்டிருந்தன. மேடையில் வீற்றிருக்கும் அல்லது நின்றிருக்கும் புலவரின் கைகள் ஊசியில் கவனமாக நூலைக் கோத்துக் கொண்டே கூட்டத்தில் கூடியிருக்கும் அவையோரின் பலவிதமான கேள்விகளைச் செவிமடுத்து ஞாபகமாக எல்லாவற்றுக்கும் பதில் சொல்ல வேண்டும். ஒருவர் ஏதாவதொரு பெரிய காவியத்தின் பெயரைச்

சொல்லி — 'அந்தக் காவியத்தில் பதின்மூன்றாவது படலத்தில் இருபத்தேழாவது பாடல் என்ன?' என்று கேட்பார். அதே சமயத்தில் இன்னொருவர் எழுந்து, 'பூ' என்று ஆரம்பித்துக் 'காய்' என்று முடிகிறாற் போல் உடனே ஒரு வெண்பாப் பாடுங்கள்' என்று கேட்பார். மூன்றாவதாக இன்னொருவர் 'தமிழ் நிகண்டில் 'அரி' என்ற பல பொருளொரு சொல்லுக்கு என்ன என்ன அர்த்தங்கள் கூறப்பட்டிருக்கின்றன?' என்று கேட்பார். ஊசியில் நூலைக் கோப்பதும் தவறாமல், 'இத்தனாவது படலத்தில் இத்தனாவது பாடல் என்ன?' என்பதற்கும் பதில் கூறி விட்டு — 'பூ' என்று ஆரம்பித்துக் 'காய்' என்று முடிகிற வெண்பாவையும் மனத்திலேயே இலக்கணப் பிழை வராமல் இயற்றிச் சொல்லி விட்டு ஞாபகமாக அடுத்த கேள்விக்கும் பதில் கூற வேண்டியிருக்கும். எட்டு வகையாகவும், பத்து வகையாகவும் பன்னிரண்டு வகையாகவும், நூறு வகையாகவும் கேட்கப்படுகிற கேள்விகளுக்கு அடுக்கடுக்காய்ப் பதில் சொல்லி மீள்கிற அவதானக் கலை இன்று குன்றிப் போய் விட்டது. ஆனால் திருக்குறள் விழா மேடைகளிலும், மாநாடுகளிலும் நவீன யுகத்துக்கு ஏற்ற முறையில் குறள் அவதானம் மட்டும் இன்னும் நடைபெறுகிறது. இந்தத் திருக்குறள் அவதானத்துக்கும் திரு தி. ப. சுப்பிரமணிய தாசரே வழிகாட்டியாயிருந்த பெருமையைப் பெறுகிறார். இப்போது சில சிறுவர் சிறுமியர்களும் இளைஞர்களும்கூடக் குறளை நன்றாக மனப்பாடம் செய்திருப்பதன் மூலம் இந்த அவதானக் கலையைச் சிறப்புற ஆற்றுகிறார்கள். அவதானம் செய்கிறவரை நோக்கிக் கேள்விக் கணைகளைத் தொடுக்கக் காத்திருக்கும் சபையோர்க்கு முன்னே அவதானியின் நிலை என்ன வென்றால் போர்க் களத்தில் பல எதிரிகளுக்கு நடுவே தனியாக அகப்பட்டுக் கொள்ளும் வீரனின் நிலைதான். அவதானம் செய்கிறவர் கைகளிலோ, சட்டைப் பையிலோ — புத்தகங்கள் — கேள்விக்குப் பதில் சொல்லுவதற்கான குறிப்புக்கள் எதையும் வைத்துக் கொள்ள முடியாது. கூட்டத்தில் உள்ளவர்கள் கேள்வி கேட்பதற்கான குறிப்புக்கள், புத்தகங்கள் எல்லாம் வைத்துக் கொண்டிருப்பார்கள். எனவே கேள்வி கேட்பவர்களுக்கு வசதிகள் அதிகம். கேள்விக்குப் பதில் சொல்கிறவருக்குத் தம்முடைய ஞாபகசக்தியைத் தவிர வேறு எந்த வசதியும் நிச்சயமாகக் கிடையாது.

'1019வது எண்ணுள்ள திருக்குறள் என்ன?' என்று சபையிலிருந்து ஒருவர் கேட்டால் அந்த வரிசை எண்ணுள்ள திருக்குறளை உடனே தாமதமின்றி அவதானி சொல்லியாக வேண்டும். 'நுண்மாண் நுழை புலம்' என்ற சொற்றொடர் எந்தக் குறளில் வந்திருக்கிறதோ, அந்தக் குறளைச் சொல்லுங்கள்' என்று திடீரென ஒருவர் கேட்பார். எழுபத்தொன்பதாவது குறள் அதிகாரத்தின் தலைப்பு என்ன என்று இன்னொருவர் கேட்பார். முப்பத்திரண்டாவது அதிகாரத்தில் ஏழாவது குறள் என்ன? 'கற்க கசடறக் கற்பவை' என்று தொடங்குகிற குறள் எந்தத் தலைப்பில் எந்த எண்ணுள்ள அதிகாரத்தில் எத்தனையாவது குறளாக இருக்கிறது? ஆயிரத்து முந்நூற்று முப்பது குறளிலும் 'மக்கள்' என்ற சொல் எங்கெங்கே பயன்பட்டிருக்கிறதோ — அந்தக் குறள்களை யெல்லாம் சொல்லுவீர்களா? — என்று இவ்வாறு அம்புகளைப் போல் தொடுக்கப்படுகிற கேள்விகளுக்கெல்லாம் தயங்காமலும் தவறாமலும் பதில் சொல்லுகிற அவதானி அந்த நேரத்தில் அந்த மேடையின் கண்கண்ட தெய்வமாகத் தோன்றுவார். அவதானம் என்ற இந்த அரிய கலை மறைந்து விடாமல் காக்கப்பட வேண்டும் என்பதற்காகவாவது தமிழ் நாட்டில் உள்ள ஒவ்வொரு திருவள்ளுவர் கழகமும் வல்லவர்களை அழைத்துத் தங்கள் மகாநாடுகளிலும், விழாக்களிலும் இந்த அவதானத்தை ஓர் அம்சமாகச் சேர்க்க வேண்டும். ஒன்றே முக்காலடிக் குறள் வெண்பாவினால் இயற்றப்பட்டிருக்கும் திருக்குறள் பாட்டுக்களை மனப்பாடம் செய்வது மிகவும் சுலபமான காரியம். குறளை நன்றாக மனப் பாடம் செய்கிற எவரும் ஓரளவு அதை அவதானம் செய்ய முடியும்.

''ஆயிரத்து முந்நூற்று முப்பதருங் குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்
—போயொருத்தர்
வாய்க் கேட்க நூலுளவோ
—மன்னு தமிழ்ப்புலவ
ராய்க் கேட்கவீற்றிருக்க லாம்''

என்று திருவள்ளுவ மாலையில் ஒரு புலவர் புகழ்ந்திருப்பதைப் போல் திருக்குறளைப் படித்துப் புலமை பெறுவதால் தமிழர்கள் ஒவ்வொருவரும் புலவர்களாய்ப் பெருமைப் பட்டுக் கொள்ள இடம் இருக்கிறது.

## திருக்குறள் இயக்கம்

தமிழ் நாட்டின் சிற்றூர்களிலும், பேரூர்களிலும் ஏராளமான திருவள்ளுவர் கழகங்களும், திருக்குறள் மன்றங்களும் இருந்து வள்ளுவருக்கும், திருக்குறளுக்கும் தொண்டு புரிவதைத் தவிர வேறு விதமான புகழினாலும் திருக்குறள் ஓர் இயக்கமாகி யிருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ள முடியும். தமிழில் உள்ள பழைய இலக்கியங்களில் கடந்த இருபத்தைந்து



கம்பன் புகழ் பாடுகிற சா. கணேசன் குறள் வாழ்த்தும் கோலம்.

ஆண்டுகளில் அதிகமான பதிப்புக்களும், அதிகமான பிரதிகளும் அச்சாகி விற்றிருக்கும் ஒரே இலக்கியம் திருக்குறள்தான். இப்பெட்டி அளவுக்கு உள்ளங் கைக்குள் அடங்குகிற திருக்குறள் புத்தகத்திலிருந்து கையடக்கமாகவும், பெரியனவாகவும், சிறியனவாகவும் எத்தனையோ விதமான திருக்குறள் பதிப்புக்கள் வெளிவந்து விற்றுக் கொண்டிருக்கின்றன. ஒரு சிறந்த தமிழ் நூல் வெளியீட்டுக் கழகத்தார் பதிப்பித்திருக்கும் தெளிவுரையோடு கூடிய திருக்குறள் கையடக்கப் பதிப்பு ஒன்று மட்டும் கடந்த சில ஆண்டுகளுக்குள் ஓர் இலட்சம் பிரதிகளுக்கு மேல் விற்பனையாகியிருக்கின்றன என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். தமிழிலும் ஆங்கிலத்திலுமாக இது வரை இருநூறுக்கு மேற்பட்ட திருக்குறள் பதிப்புக்கள் வெளி வந்திருக்கின்றன. கடந்த சில ஆண்டுகளுக்கு முன் திருக்குறளைப் பரப்புவதையே நோக்கமாகக் கொண்டு திருச்சியிலிருந்து ஒரு மாத இதழும் ஒரு வார இதழும் வெளிவந்தன. திருவள்ளுவர் என்ற மாத இதழும் 'குறள்மலர்' என்ற வார இதழும் திருக்குறளுக்குச் செய்திருக்கும் இலக்கிய சேவை அளவிடமுடியாதது. மதுரை மாவட்டத் தமிழ்த் தொண்டர் கழகம் என்ற நிறுவனம் பெரிய ஊர்களின் பல நிலையங்களிலும், பொது இடங்களிலும், குறளையும் அதன் பொருளையும் எழுதிய எனாமல் போர்டுகளை வைத்துப் பணி செய்து கொண்டிருந்தது. பல திருவள்ளுவர் கழகங்கள் ஆரம்பப் பள்ளி மாணவர்களுக்குத் திருக்குறள் மனப்பாடப் போட்டியும் உயர்நிலைப்பள்ளி, கல்லூரி மாணவர்களுக்குத் திருக்குறள் சொற்பொழிவுப் போட்டியும் கட்டுரைப் போட்டியும் நடத்திக் குறளைப் பரப்பி வருகின்றன. தேவகோட்டை, காரைக்குடி வள்ளுவர் கழகத்தார் அன்றாடம் ஒரு கரும்பலகையில் ஏதாவது ஒரு குறளும், பொருளும் எழுதி நகரின் முக்கியமான இடங்களில் வைப்பதன் மூலம் அவை யார் பார்வையில் பட்டாலும் நல்ல சிந்தனைக்குத் தூண்டுகிறார்கள்.

மதுரைத் திருவள்ளுவர் கழகம் பரிமேலழகர் உரையுடன் குறள் வகுப்புக்களை மாலை வேளைகளில் நடத்துவதோடு புலவர் வகுப்பு மாணவர்களுக்கும் இலக்கிய இலக்கணங்களைக் கற்றுக் கொடுக்கிறது. தென்காசித் திருவள்ளுவர் கழகமோ தெய்விகத் தேவாரப் பாடல்களைச் சிறுவர் சிறுமியருக்குக் கற்றுக் கொடுத்துத் தமிழையும், சைவத்தையும் செழிக்கச் செய்து வருகிறது.

மேற்கூறிய இந்தத் திருவள்ளுவர் கழகங்கள் யாவும் தமது விழாக்களாலும், மகாநாடுகளாலும், மட்டுமின்றி நாள் தவறாமல் குறள் வகுப்புக்களையும் நடத்தி வள்ளுவரை வாழச் செய்து கொண்டிருக்கின்றன. முப்பத்தாறு ஆண்டுகளுக்கு முன் தோன்றிய தென்காசித் திருவள்ளுவர் கழகத்திலிருந்து மூன்றாண்டுகளுக்கு முன் தோன்றிய நாங்குநேரியருகில் இருக்கும் குரன்குடி வள்ளுவர் மன்றம் வரை எல்லாத் திருக்குறள் இயக்கங்களிலும் சிந்தனைகளிலும், பேச்சுக்களிலும் 'வள்ளுவர் வாழ்கிறார்' என்பதை நாம் நம்பியே ஆக வேண்டும். மகாகவி சுப்பிரமணிய பாரதியார் ''**வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு**'' என்று திருவள்ளுவரை உலகுக்கு அளித்ததனால் தமிழகம் தாராளமாகப் பெருமைப்படலாம் என்கிறார். ஆனால் கெட்டிக்காரர்களாகிய தமிழ்ப் பெருமக்கள், ''திருவள்ளுவரை உலகம் போற்றிக் கொள்ளட்டும்! நமக்கென்ன வந்தது?'' என்று உலகத்துக்கு விட்டுவிடாமல் தமிழகத்திலும் செயல்களாலும் சிந்தனைகளாலும் திருக்குறளை வாழ வைத்துக் கொண்டாடுகிறார்கள். திருவள்ளுவர் பிறந்ததாலும் திருக்குறளை எழுதியதாலும் முதலில் தமிழ் நாட்டுக்கே பெருமை! அப்புறம்தான் உலகத்துக்குப் பெருமை! திருவள்ளுவர் அழியாத் தத்துவமாகத் தமிழ் நாட்டில் வாழ்கிறார். அழியாத புகழுக்கு உரியவராக உலக இலக்கிய அரங்கிலும் வாழ்கிறார். தமிழர்களின் இலக்கிய கௌரவத்துக்கு இதைவிட வேறென்ன சான்று வேண்டும்?

—நா. பா.

## அந்த நாளில்...

இந்திய வெள்ளித்திரையின் தந்தை என்று கூறுமளவுக்குப் புகழ் பெற்றவர் தாதா பால்கே. அவர் எடுத்த 'ராஜா ஹரிச்சந்திரா' என்னும் படத்துக்குப் பம்பாயில் பெருமளவுக்கு வெற்றி கிடைத்தது.

சூரத்தில் அது திரையிடப்பட்டபொழுது முதல் நாளே ஏமாற்றம் அளித்தது. டிக்கட் மூன்றணாவாயிருந்தும் மூன்று ரூபாய்க்கு மேல் வசூலாக வில்லை. இதற்குக் காரணம் நகரத்தில் வந்திருந்த ஒரு நாடகக் கம்பெனியாகும்.

தாதா சாஹப் பால்கேக்குத் திடீரென்று ஒரு யுக்தி தோன்றியது, விளம்பரம் செய்ய. விளம்பரம் ஒன்று எழுதி நகரம் முழுதும் விநியோகிக்கச் செய்தார். விளம்பர வாசகம் என்ன, தெரியுமா?

''மூன்றணாவுக்கு ஐம்பதினாயிரம் புகைப் படங்களைக் காணுங்கள்! இரண்டு மைல் நீளத்துக்கு முக்கால் அங்குல அளவுக்கு அத்தனை படங்களைப் பார்ப்பது அரிது, அரிது. எனவே, காணத் தவறாதீர்கள்!''

அவர் எதிர்பார்த்தது போல் விளம்பரம் பலன் அளித்தது என்பதற்கு அத்தாட்சி மறுநாள் திரைப் படக் கொட்டகையில் எள் போட இடம் இல்லாமல் மக்கள் நிறைந்து வழிந்தனர்.

ஃ ஃ ஃ

''பக்த துருவன்'' பட விளம்பரம்:

உண்மை வைகுண்டமெனும் தன்மை வாய்ந்த வர்ணிக்க முடியா வண்மை மிகும்—வைகுண்ட காட்சி வைபவமும், அங்கு அப்சரஸ்திரிகளின் நடனமும் காணப் பார்த்திராத நேத்திரானந்தம் அளிக்கும்.

இன்னும் எண்ணிறந்த டார்லிங் சீன்கள் கண்களைக் கவரும்.

குறவன், குறத்தி நடிப்பு, குறி சொல்லும் படிப்பு, தில்லறைப் பாடல்களின் எடுப்பு, காணக் கேட்க வெறுப்பு நீங்கி விருப்பு என்பதைத் துரும்புபோல் பெருக்கி ஆனந்தத்தை அளிக்கவல்ல ஆச்சரியப் படம் இதுவே.

நாடாண்ட நங்கையர்

# மகா காதரைன்

சரித்திர மாணிக்கன்

"எனக்கிருந்த துணிச்சல்தான் என்னைக் கைலாகு கொடுத்து அழைத்துப் போய் அரச பீடத்தில் அமர்த்தியது" என்று கூறினள் நாடாண்ட ஒரு நங்கை. இந்தத் துணிச்சலோடு, அழகு, தேக பலம், விடாமுயற்சி, அயராது உழைக்கும் சக்தி ஆகிய பலவும் இவளிடம் இருந்தன. ஆதிக்கம் செலுத்த வேண்டும் என்பதில் இவளுக்குக் கொள்ளை ஆசை. இந்த ஆசையை நிறைவேற்றிக் கொடுக்க இவளுக்கு அதிருஷ்டம் துணை செய்தது. "இவளைப் போன்ற அதிர்ஷ்டக்காரியை ஐரோப்பிய சரித்திரத்தில் வேறெங்கும் பார்க்க முடியாது" என்கிறான் ஒரு சரித்திராசிரியன். இவள்தான் மகா காதரைன்; கி. பி. 1762 முதல் 1796-ம் வருஷம் வரையில் ருஷ்யாவை ஆண்டவள்; ஆட்டி வைத்தவள் என்றுகூடச் சொல்லலாம்.

காதரைன், ஜெர்மானிய அரச குடும்பமொன்றில் 1729-ம் வருஷம் பிறந்தாள். பதினைந்தாவது வயதில் ருஷ்ய அரச பீடத்துக்குரியவனாயிருந்த பீட்டர் என்பவனுக்கு வாழ்க்கைப் பட்டாள்.

இந்தப் பீட்டர் ஒரு கிறுக்கன்; கோழை; குடிகாரன்; குரூபி. இருவரும் பெயரளவுக்குக் கணவனும் மனைவியுமாக இருந்தார்கள்.

காதரைனுக்கு விவாகமான பத்து வருஷம் வரை குழந்தை பிறக்கவில்லை. தனக்கு வாரிசு இல்லாமற் போகுமோ என்று சிறிது கவலைப்பட்டாள். பிறகு 1754ம் வருஷம் ஓர் ஆண் மகன் பிறந்தான். இவன்தான் பிற்காலத்தில் முதலாவது பால் என்ற பெயரால் 1796 முதல் 1801ம் வருஷம் வரை அரச பீடத்தில் அமர்ந்திருந்தவன். இந்தப் பால், தனக்கும் பீட்டருக்கும் பிறந்தவன் என்று காதரைன் சொல்லிக் கொண்டாள்; இதற்கு ஓரே ஆதாரம்



இந்தப் பால்பீட்டரைப்போல் கோணல் புத்தியுடையவனாக இருந்ததுதான். இவன் காதரைன் மரணமடைந்த செய்தியைக் கேட்டுச் சந்தோஷப் பட்டவர்களில் முக்கியமானவன்.

எலிசபெத் என்பவள் 1741 முதல் 1762ம் வருஷம் வரை ருஷ்ய அரசுக் கட்டிலில் அமர்ந்திருந்தாள். இவள் 1682 முதல் 1725 வருஷம் வரை ஆண்ட மகா பீட்டர் என்பவனின் மகள்; நெஞ்சுறுதி கொண்டவள். தனக்குப் பிறகு பீட்டர், பட்டமேற்க வேண்டுமென்று ஏற்பாடு செய்து வைத்துப் போயிருந்தாள். அதன்படி பீட்டர் மூன்றாவது பீட்டர் என்ற பட்டப் பெயருடன் அரசுக் கட்டிலில் அமர்ந்தான். ஆனால் இவனை நீண்ட நாட்கள் உயிரோடு விட்டு வைக்க விரும்பவில்லை காதரைன். தன் கணவனாயிற்றே என்று இவன் மீது சிறிதும் இரக்கம் காட்டவில்லை. இவள் அரச பீடத்தில் அமர்ந்த சில நாட்களுக்குள் இவனை ஒரு சிறு படையின் துணைகொண்டு சிறைப்படுத்தி விட்டாள். சிறைப்பட்ட பத்தாவது நாள் இவன் இறந்தும் போனான். இவனுக்குப் பிறகு காதரைன், இரண்டாவது காதரைன் என்ற பட்டப் பெயருடன் 1762ம் வருஷம் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருந்தாள். அப்பொழுது இவளுக்கு வயது முப்பத்து மூன்று. முப்பத்து நான்கு வருஷம் தன்னிச்சையாக ஆண்டுவிட்டு 1796ம் வருஷம் அறுபத்தேழாவது வயதில் கண்மூடிக் கொண்டாள். இவளுடைய வாழ்க்கையின் சுருக்கம் இது.

காதரைன் தன் ஆட்சி காலத்தில் ருஷ்யாவைப் பல துறைகளிலும் முன்னேறச் செய்ய வேண்டுமென்பதற்காக அரசாங்க நிருவாகத்தில் அநேக சீர்திருத்தங்களைச் செய்தாள். ஸ்தல ஸ்தாபனங்களை நிறுவினாள். நீதி ஸ்தலங்களில் ஒழுங்காக நீதி கிடைக்குமாறு சில திட்டங்களை வகுத்தாள். பள்ளிக்



கூடங்கள் பல திறந்தாள். ஆஸ்பத்திரிகள் ஏற்படுத்தினாள்.

ருஷ்யாவில் எப்போதுமே நிலச்சுவான்தார் — விவசாயி தகராறு உண்டு. இதனை ஒழுங்குபடுத்தி வைக்கிற முறையில் இவள் சில திட்டங்களை அமுலுக்குக் கொண்டுவந்தாள். ஆனால் இவை நிலச்சுவான்தார்களுக்கே அதிக அனுகூலத்தைத் தருவனவாயிருந்தன. இதனால் விவசாயிகள் வெகுண்டெழுந்தார்கள். ஆங்காங்கு கலகங்கள் கிளம்பின. இவற்றுள் முக்கியமானது ருஷ்யாவின் தென் கிழக்குப் பகுதியில் நடைபெற்ற கலகமாகும். சுமார் இரண்டு வருஷ காலம் தொடர்ந்து நடைபெற்ற இந்தக் கலகத்துக்குப் புகாசேவ் என்ற ஒரு வீரன் தலைமை வகித்தான். இவனை வேட்டையாடினாள் காதரைன். இவன் தலையைக் கொண்டு வருகிறவர்களுக்கு ஆயிரக் கணக்கில் பணம் கொடுப்பதாக அறிக்கை வெளியிட்டாள். கடைசியில் இவன் தன்னைச் சேர்ந்தவர்களாலேயே காட்டிக் கொடுக்கப்பட்டு விட்டான். இவனை ஓர் இரும்புக் கூண்டிலே அடைத்து அழைத்து வரச் செய்தாள் காதரைன். விசாரணை கூட நடத்தினாள். மரண தண்டனை கொடுத்தாள். அது எப்படி நிறைவேற்றப்பட்டது தெரியுமா? முதலில் இரண்டு கைகளும் இரண்டு கால்களும் துண்டிக்கப்பட்டன. இப்படிச் சில காலம் சிறையிலே வைத்திருந்து பிறகு இவன் தலையைத் துண்டிக்கச் செய்தாள். இவன் வசித்திருந்த வீட்டைத் தரையோடு தரையாக்கிவிடச் செய்தாள்.

அரசாங்க நிருவாகத்தில் சில சீர்திருத்தங்களைச் செய்தாளெனினும் இவள் முற்போக்கான அரசியல் கருத்துக்குப் பரம விரோதி. இந்தக் கருத்துக்கள் எங்கே தன் அரசபீடத்தை அசைத்துக் கொடுக்குமோ என்ற அச்சம் இவளுக்கு. புரட்சி என்றால் புற்றுநோய் கண்டவள் மாதிரி அலறுவாள். துரதிர்ஷ்டவசமாக இவள் ஆட்சிக் காலத்தில் 1789ம் வருஷம் பிரெஞ்சுப் புரட்சி நடைபெற்றது. இதன் எதிரொலி ருஷ்யாவில் கேட்டது. இளைஞர்கள் சுதந்திரம், சமத்துவம் என்று முணுமுணுக்கத் தொடங்கினார்கள். இதைக் கேட்டுச் சீறி எழுந்தாள் காதரைன். ஆயிரக்கணக்கான இளைஞர்கள் சிறையிலே தள்ளப்பட்டார்கள். கொலைக் கூடத்துக்குச் சென்றவரும் பலர். முற்போக்கான கருத்துக்கடங்கிய நூல்களைக் கூட இவள் வெறுத்தாள். அவற்றின் ஆசிரியர்களைச் சிறையிலடைத்தாள்.

காதரைன் ராணுவத் தந்திரங்கள் நன்கு அறிந்தவள்; போர்த் திறம் மிக்கவள். இவளே சில போர்களுக்குத் தலைமை தாங்கி நடத்தியிருக்கிறாள். இவள் காலத்தில் போலந்தின் பெரும் பகுதி, கிரிமியா தீபகற்பம், கருங்கடலின் வடக்குப் பக்கத்திலிருந்து காக்கஸ் மலை வரையிலுள்ள பிரதேசம் ஆகிய பலவற்றின் மீது ருஷ்யக் கொடி பறந்தது. மொத்தம் சுமார் மூன்று லட்சம் சதுர மைல் நிலப்பரப்பு ருஷ்யாவின் ஆதிக்கத்துக் குட்பட்டிருந்தது. இவ்வளவென்ன, இவள் தன் கடைசிக் காலத்தில் பாரசீகத்தின் வழியாக இந்தியா மீது படையெடுத்துச் செல்ல வேண்டுமென்று கூடத் திட்டமிட்டாள். ஆனால் அதற்குள் காலதேவன் இவள்மீது கண்வைத்து விட்டான்.

காதரைனுக்குப் பிரெஞ்சுப் புரட்சியின் மீது வெறுப்பு ஏற்பட்டிருந்ததாயினும் பிரெஞ்சு நாகரிகத்தின் மீதும் கலாசாரத்தின் மீதும் அதிக மோகம் ஏற்பட்டிருந்தது. இவள் விருப்பத்திற்கிசைய ருஷ்ய அரசவையிலும் சரி, ருஷ்ய சமுதாயத்திலும் சரி, பிரெஞ்சுப் பழக்க வழக்கங்கள் பல புகுந்தன. பிரெஞ்சு மொழியை இவள் நன்கு கற்றிருந்தாள். பிரெஞ்சுப் புலவர்களான வால்டேர், டிடெரோ, டி'அலெம்பர்ட் முதலியவர்களுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டிருந்தாள்.

நல்ல இலக்கியங்களைப் படித்து ரசிப்பதில் இவளுக்குத் தனியாற்றல் இருந்தது. பிளேட்டோவினுடைய நூல்களையும், டாஸிடஸ் என்ற ரோம சரித்திராசிரியனுடைய நூல்களையும் திரும்பத் திரும்பப் படித்து மகிழ்ந்தாள் என்று சொல்வதுண்டு. மற்றும் இவள் சில நாடகங்களையும் கதைகளையும் எழுதியிருக்கிறாள். என்ன காரணத்தினாலோ இவை சீக்கிரத்தில் மறைந்து போயின. நல்ல இலக்கியங்களைச் சுவைக்கும் சக்தி பெற்றிருந்தபடியால் இவள் தனது அரசவையில் ருஷ்ய அறிஞர்கள் பலரை அமர்த்திக் கொண்டு அவர்களைப் பல வகையிலும் ஆதரித்து வந்தாள்.

காதரைன் தன்னுடைய முப்பத்து நான்கு வருஷகாலத்தில் ஓய்வென்று சொல்லிச் சும்மாயிருந்த நாட்களை விரல் விட்டு எண்ணிவிடலாம். உழைப்பிலே இன்பம் நுகர்ந்தவள் இவள். தினம் பதினைந்து மணி நேரத்துக்குக் குறையாமல் வேலை செய்வாள். காலை ஆறு மணிக்கெல்லாம் எழுந்து விடுவாள். இவளுக்கு எப்பொழுதும் வேட்டைநாய்களின் மீது அதிகப் பிரியம். இரவில் இவள் படுக்கைக்குப் பக்கத்தில் வைக்கப்பட்டிருக்கும் அகன்றதொரு கூடையில் குறைந்தபட்சம் ஆறு நாய்களாவது படுத்துறங்கிக் கொண்டிருக்கும். இவற்றின் தேவைகளை இவளே கவனித்துக் கொள்வாள். காலையில் எழுந்தவுடன் இந்த நாய்களைத் தட்டி எழுப்பி, இவைகளுடன் சிறிது நேரம் கொஞ்சுவாள். பிறகு வெந்நீரில் பல் துலக்கிவிட்டு, பனிக்கட்டியினால் முகத்தைத் தேய்த்துத் துடைத்துக்கொள்வாள். உடனே தனது அலுவல் அறைக்குச் செல்வாள். அங்கு காப்பி தயாராயிருக்கும். குறைந்தபட்சம் ஐந்து கப் காப்பியாவது குடிப்பாள். இந்தக் காப்பி தயாரிப்புக்குத் தினசரிச் செலவு ஒரு பவுன். காப்பி குடித்ததும் வேலையில் இறங்கிவிடுவாள். ஒன்பது பத்து மணி வரையில், வந்த கடிதங்களைப் படிப்பது; அவைகளுக்குப் பதில் எழுதுவது, அரசாங்க சம்பந்தமான உத்தரவுகளுக்கு அங்கீகாரம் கொடுப்பது. இப்படிப் பல காரியங்களையும் தனியாகவே இருந்து செய்வாள். இடையிடையே சுறுசுறுப்புப் பெறும் பொருட்டு, சிறிது மூக்குப் பொடி போட்டுக் கொள்வாள். ஒன்பது மணி அடித்ததும் தன் பிரத்தியேக அறைக்குத் திரும்பிச் சென்று முன்னேற்பாட்டின்படி

தன்னைக் காண வந்திருக்கும் அரசாங்க உத்தியோகஸ்தர்கள், படைத் தலைவர்கள், ராஜ தந்திரிகள் ஆகியோருக்குப் பேட்டி கொடுப்பாள். ஏறக்குறைய பகல் ஒரு மணிக்கு இந்தப் பேட்டி முடியும். பிறகு தலைமயிரை ஒழுங்கு செய்து முடிப்பதற்கும், ஆடை அலங்காரங்களைச் செய்துகொள்வதற்கும் ஒரு மணி நேரம் ஆகிவிடும். இரண்டு மணிக்குச் சாப்பிடத் தொடங்குவாள். சாதாரணமாக ஒவ்வொரு நாளும் இவள் அழைப்பின் பேரில் பத்துப் பன்னிரண்டு பேராவது இவளுடன் உட்கார்ந்து சாப்பிடுவார்கள்.

சாப்பாடு முடிந்ததும் அரசவையைச் சேர்ந்த ஒருவன் பிரசன்னமாகி, அன்று கிடைத்த செய்தித் தாள்களில் முக்கியமான பகுதிகள், மற்ற நாட்டு அரசாங்கங்களிலிருந்து வந்த கடிதங்கள் ஆகியவற்றைப் படித்துக் காட்டுவான். அதைக் கேட்டுக் கொண்டே இவள் துணியில் பூவேலை செய்து கொண்டிருப்பாள். இதற்குப் பிறகு அந்தரங்கக் காரியதரிசிகள், அரசாங்கக் காரியதரிசிகள் வந்து தங்களுடைய அலுவல்களைப் பற்றித் தெரிவித்து இவளுடைய உத்தரவுகளைப் பெற்றுப் போவார்கள். பிறகு ஓர் அரை மணி நேரம், தன் பேரன், பேத்திகளோடு தமாஷாகப் பொழுது போக்குவாள். அநேக நாட்களில் இந்தப் பொழுது போக்குக்குக்கூட அவகாசம் இராது.

இவையெல்லாம் முடிய ஏறக்குறைய மணி நான்காகிவிடும். பிறகுதான் அவ்வப் பொழுது சேகரித்துக் கொண்டு வந்திருக்கும் விநோதமான பொருள்கள், அருமையான சில கையெழுத்துப் பிரதிகள் முதலியவற்றை ஒழுங்குபடுத்தி அழகு பார்ப்பதில் செலவழிப்பாள். இதில் சுமார் இரண்டு மணி நேரம் போய்விடும். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் இவளுடைய அபிமானத்துக்கும் ஆதரவுக்கும் காத்திருக்கிற கலைஞர்கள், பண்டிதர்கள் ஆகியோர் இவள் முன்னிலையில் ஆஜர்ப்படுத்தப் பெறுவார்கள். அவர்களுடன் உரையாடித் தனது பலதுறைப் புலமையினை அவர்கள் உணரும்படி செய்து அதில் மகிழ்ச்சியும், பெருமையும் அடைவாள். இவை போக, அவகாசம் இருந்தால் சிறிது நேரம் 'பில்லியார்ட்ஸ்' என்ற மேஜைப் பந்தாட்டம் ஆடுவாள். இதற்குள் ஆறு மணியாகி விடும். உடனே சீட்டாட உட்கார்ந்துவிடுவாள். பணம் வைத்துத்தான் ஆடுவாள். பிறகு இராச் சாப்பாடு. அநேகமாக இதை இருந்த இடத்திலேயே முடித்துக் கொண்டு விடுவாள். சரியாகப் பத்து மணிக்குப் படுக்கப் போய் விடுவாள். படுக்கையறைக்குச் செல்லும் போது கூடவே ஒரு ஆடவன் பின்தொடர வேண்டும். அநேகமாக, இவன் இவளுடைய மகனோ என்று சொல்லக் கூடிய மாதிரி வாலிபப் பருவத்தினனாயிருப்பான். தனது கடைசிக் காலம் வரை இந்த அன்றாட வேலைக் கிரமத்தை அனுசரித்து வந்தாள். இப்படி இவள், கடைசிக் காலம் வரை ஓயாமல் உழைத்து வந்ததைப் போல் ஓயாமல் சிற்றின்பக் கடலில் நீராடி வந்தாள். இதற்கு இரண்டு காரணங்கள். ஒன்று, இவளுக்கிருந்த அழகு. மற்றொன்று இவளுக்




கிருந்த தேக பலம். இவ்விரண்டும் சேர்ந்திருந்தது அவள் அதிருஷ்டம்!

இவள் அழகைப் பற்றி இவள் சம காலத்தவர் பல விதமாக வருணித்திருக்கிறார்கள். இவளுடைய கழுத்து அழகே அழகு என்கிறான் ஒருவன். இவள் தலையை அசைத்துக் கொடுத்தாலே போதும், பார்த்துக்கொண்டிருக்கலாம் என்கிறான் இன்னொருவன். இவளை ஒரு தரமாவது பார்த்துவிட வேண்டுமென்பதற்காக இவள் மிதித்த மிதியடியின் மீது நின்று காத்துக் கிடந்தவர்கள் அநேகர்.

இவள் தனது பதினைந்தாவது வயதில் பீட்டரை விவாகம் செய்து கொண்டதிலிருந்து முப்பத்து மூன்றாவது வயதில் சுயேச்சையாக ஆளத் தொடங்கியவரை இவளோடு சேர்ந்து காதல் நாடகம் ஆடிய ஆடவர் எத்தனை பேர் என்று நிச்சயமாகத் தெரியாது. ஆனால் இவளுடைய முப்பத்து நான்கு வருட ஆட்சிக் காலத்தில் இவளுக்கு ஒருவர் பின் ஒருவராகப் பதினைந்து காதலர்கள் இருந்தார்களாம். இவள் தன்னுடைய அறுபத்தாறுவது வயதில் இருபத்திரண்டே வயதான ஜௌபாவ் (Zoubof) என்ற இளைஞனைக் காதலனாக வரித்து அவனிடம் இன்பம் நுகர்ந்தாளெனின் இவளுடைய காம வெறிக்கு எப்படி எல்லை வகுப்பது? 'இந்த வயதில் இப்படி நடந்து கொள்ளலாமா?' என்று இவளுடன் நெருங்கிப் பழகி வந்த ஆஸ்தானிகள் ஒருவன் இவளைக் கேட்டபோது, ''திறமைசாலிகளான வாலிபர்களை வசியப்படுத்துவதன் மூலம் நான் ருஷ்ய ஏகாதிபத்தியத்துக்குச் சேவை செய்தவளாகிறேன்'' என்றாள். இதில் உண்மை இல்லாமலும் போகவில்லை. தன் காதலர்களில் பலரை ருஷ்ய தேசத்தின் மேன்மைக்காகப் பல மகத்தான காரியங்களைச் சாதிக்க வைத்தாள்.

முப்பத்து நான்கு வருஷ ஆட்சிக் காலத்தில் இவள் நடத்திய காதல் வாழ்க்கைக்காக மட்டும் அரசாங்கப் பொக்கிஷத்திலிருந்து நூற்றறுபது லட்சம் பவுன் செலவழிக்கப்பட்டது! உண்மையில் இவள் காலத்தில் ருஷ்யாவை ஆண்டது இவளுடைய காதலர்களே. அவர்களை இவள் ஆண்டு வந்தாள். இப்படித்தான் சரித்திராசிரியர்கள் தீர்ப்பளித்திருக்கிறார்கள்.

# பி.எஸ்.ஜி. கல்லூரிகள்





^ திரு ஜி. ஆர். கோவிந்தராஜுலு

< திரு ஜி. ஆர். தாமோதரன்

இரக்க சித்தம் படைத்த ஓர் அம்மாள் வெளியே தன் சிநேகிதியைப் பார்க்கப் போய் விட்டு வீட்டுக்குத் திரும்பிக்கொண்டிருந்தாள். தன் வீடு இருக்கும் தெருவில் நுழைந்ததும் விளக்குக் கம்பத்தின் அடியில் அப்பாவி போல் தோற்றம் அளித்த ஓர் ஆசாமி ஆகாயத்தைப் பார்த்தவாறு நின்றுகொண்டிருப்பதைக் கவனித்தாள்.

அந்த அம்மாள் உள்ளத்திலே இரக்கம் பிறந்தது. கைப்பையைத் திறந்து பார்த்தாள். அதில் ஒரு ஷில்லிங் நாணயம் ஒன்றே ஒன்றுதான் இருந்தது. அதை எடுத்து லாந்தர் கம்பத்தடி ஆசாமியை நெருங்கி 'என்றால் முடிந்தது' என்று மெதுவாகச் சொல்லிக்கொண்டே அதை அவன் கையில் கொடுத்து விட்டு அன்றைய தினத்துக்கான தர்மத்தைச் செய்து விட்டோம் என்ற மன நிறைவுடன் வீடு திரும்பினாள்.

இரண்டு நாட்கள் கழித்து அந்த அம்மாள் வாசல் பக்கம் எட்டிப் பார்த்தபோது பழைய லாந்தர் கம்ப ஆசாமி அவளை நோக்கி வந்துகொண்டிருந்தான். 'ருசி கண்ட யாசகனோ' என்ற நினைவையும் தோற்றுவித்தான். அதன் விளைவாக உள்ளே போகத் திரும்பிய அந்த அம்மையாரை வாசலில் வந்தவனின் குரல் தடுத்து நிறுத்தியது.

"இந்தாருங்கள் ஒன்பது ஷில்லிங். அன்று நீங்கள் குறிப்பிட்ட 'என்றால் முடிந்தது' என்ற குதிரை, பந்தயத்தில் முதலில் வந்து ஒன்றுக்கு ஒன்பது விகிதத்தில் லாபம் கொடுத்தது" என்றான் வந்தவன். அந்த அம்மையாரின் தரும சிந்தனைக்குக் கைமேல் பலன் கிடைத்தது. பிச்சைக்காரன் என்று கருதப்பட்டவன் குதிரைப் பந்தய ஏஜண்ட்.

பலனை எதிர்பார்த்து அந்த அம்மாள் தருமம் செய்யவில்லை. பணம் பன்மடங்கு பெருகும் என்றும் நினைக்கவில்லை.

ஆனால் பலனை நம்பி, அதை எதிர்பார்த்து, ஒரு குடும்பம் இன்றைக்குச் சுமார் முப்பத்தி ஏழு ஆண்டுகளுக்கு முன் தங்கள் தரும சிந்தனைக்கு "எங்களால் முடியும்" என்று ஒரு மகத்தான உருவம் கொடுக்க முன் வந்தது. அவர்கள் நம்பிக்கை வீண் போகவில்லை. பலன் எதிர்பார்த்ததை விடப் பன்மடங்கு அதிகமாகவே இருக்கிறது. பலனை அவர்கள் பணத்தளவில் நினைத்துப் பார்த்தவர்களில்லை. கலை வளர்ச்சியின் அளவில்தான் நினைத்தார்கள். அவர்கள் அடைந்த பலன் தமிழ் நாட்டின் பொதுப் பயனாகவே அமைந்து அந்தக் குடும்பத்தினரை மற்ற உதார குணமுள்ள செல்வந்தர்களுக்கு வழிகாட்டிகளாக அமைத்து விட்டது.

பீளமேட்டைச் சேர்ந்த பெரிய வீட்டு சாம நாயுடு கோவிந்தசாமி நாயுடுவின் நான்கு புதல்வர்களான, பி. எஸ். ஜி. வேங்கடசாமி நாயுடு, பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு, பி. எஸ். ஜி. கங்கா நாயுடு, பி. எஸ். ஜி. நாராயணசுவாமி நாயுடு ஆகியோர் தங்களுக்கு ஐந்தாவது தம்பியாக



விளங்க மனமுவந்து ஒரு நபரைத் தங்கள் குடும்ப வட்டத்துக்குள் சேர்த்துக் கொண்டார்கள். அந்த அருமைத் தம்பியின் பெயர்தான் ஸ்ரீமான் தர்மம். அந்தத் தம்பியின் பங்குக்கு மற்ற சகோதரர்கள் ஒதுக்கிய தொகை இரண்டு லட்சத்து ஓராயிரத்து நூற்றுப் பதினாறு ரூபாய் மதிப்புள்ளது.



பொறியியல் கல்லூரி யின் மின்சாரப் பிரிவில் மாணவர்கள் ஊக்கத் துடன் பரிசோதனை களில் ஈடுபட்டுள்ளனர்

இந்தத் தர்ம ஸ்தாபன சம்பந்தமான பத்திரங்களை முதன் முதலாக 1926ம் ஆண்டு ஜனவரி மாதம் 25ம் தேதி பதிவு செய்தார்கள்.

அப்போது பீளமேடு ஒரு குக்கிராமமாகத்தான் இருந்தது. இன்று பி. எஸ். ஜி. தரும ஸ்தாபனத்தின் வளர்ச்சியுடன்கூடவே வளர்ந்த அந்தப் பகுதி, கோவை நகரின் மற்றப் பகுதிவாழ் மக்கள் கண்டு பிரமிக்குமாறு கலைக்கோயில்களின் இருப்பிடமாகி விட்டது.

1926ம் ஆண்டு ஒரு தொழிற்பள்ளிக்கு இட்ட விதை இன்று மாபெரும் ஆலமரமாக வளர்ந்து படர்ந்து விதம் விதமான விழுதுகள் விட்டிருக்கிறது. தொழில் நுட்பப் பள்ளி, கலைக் கல்லூரி, பொறியியல் கல்லூரி ஆகிய மூன்றும் முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய விழுதுகள்.

சீரிலே வேலைகளில் ஆயிரக்கணக்கான உற்சாகம் மிகுந்த இளைஞர்கள் தங்கள் வருங்கால வாழ்க்கையில் தீவிர நம்பிக்கை வைத்து, வகுப்புக்களுக்குச் செல்லும் காட்சி, பாரதத்தின் வருங்காலத் தொழில் வளத்தைப் பற்றி இன்பக்கற்பனை ஊட்டுவதாக இருக்கிறது.

திரு பி. ஆர். கிருஷ்ணமூர்த்தி

ஏற்பாடாகி யிருக்கிறது. இது தவிர பொறி இயல் ஆராய்ச்சிக்கான எம். எஸ்ஸி. பட்டத்துக்கு இரண்டு வருட கால போதனையும் அளிக்கப்படுகிறது.

'பவர் ஸிஸ்டம் இஞ்ஜினீரிங், மெஷின் டிஸைன், ஸ்டிரக்சரல் இன்ஜினீரிங் (Power System Engineering, Machine, Design Structural Engineering) ஆகிய மூன்றும் ஆராய்ச்சித் துறைக்கான பாடங்கள். வரும் ஆண்டில் இந்தப் பகுதியில் மேலும் சில பாட திட்டங்களைச் சேர்க்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார்கள்.



தொழில் நுட்பப் பள்ளியில் நெசவு ஆலைப் பயிற்சிக் கான இயந்திரங்கள்



திரு இ. குருசாமி

1951ம் ஆண்டு தொடங்கப்பட்ட பி. எஸ். ஜி. பொறி இயல் கல்லூரி நவீன பாணியில் அமைக்கப் பட்ட கட்டடங்களில் சமீப கால சாதனங்களுடன் இயங்கிவருகிறது. இதன் புதுக் கட்டடங்களை டாக்டர் ராதாகிருஷ்ணன் 1958ம் ஆண்டு திறந்து வைத்தார்.

ஐந்து வருட பொறியியல் பட்டப் படிப்புக்காக ஸிவில், மெக்கானிக்கல், எலக்டிரிகல் பிரிவுகளில் போதனை அளிக்கிறார்கள். பி.எஸ்ஸி. பட்டம் பெற்றுப் பொறி இயல் கற்க வரும் மாணவர்களுக்கு மூன்று வருடப் படிப்புக்கான வசதியும் இந்த ஆண்டிலிருந்து

பொறி யியல் கல்லூரி முதல்வர் திரு ஜி. ஆர். தாமோதரன், பி. எஸ். ஜி. குடும்பத்தைச் சேர்ந்தவர். பொறி இயல் கலையில் மேல்நாட்டுச் சர்வகலா சாலைகளில் பட்டம் பெற்றவர். தம் தந்தையும் அவருடைய சகோதரர்களும் நிர்மாணித்த இந்த ஸ்தாபனத்தின் முழு உபயோகத்தையும் மாணவர்கள் அடைந்து நன்மை பயக்க வேண்டும் என்ற ஒரே லட்சியத்தைக் கடைப்பிடிப்பவர்.

விடுமுறை தினங்கள் என்றால் அவருக்கு வேம்பாகக் கசக்கும். கல்வி கற்கும் மாணவர்களுக்கு அதிகமான விடுமுறை நாட்கள் பாதகத்தையே விளைவிக்கும் என்ற கொள்கையை உடையவர். இதன் விளைவாக இந்தப் பொறி இயல் கல்லூரியில் விடுமுறை தினங்கள் மிகக் குறைவு. சர்வ கலாசாலை அனுமதிக்கும் நூற்றி என்பது வேலை நாட்களுக்குப் பதிலாக இருநூற்றி இருபது வேலை நாட்களை அமுலில் கொண்டு வந்திருக்கிறார்கள். வருடத்தில் அத்தியாவசியமான ஆறு ஏழு நாட்கள் தான் மாணவர்களுக்கு விடுமுறை நாட்கள்! பாராட்டப்பட வேண்டிய அம்சம்.

ஏறத்தாழ ஆயிரம் மாணவர்கள் பயிற்சி பெறும் இந்தப் பொறி இயல் ஸ்தாபனத்துக்குச் சிறந்த ஹாஸ்டல் வசதியும் விளையாட்டு வசதியும் அளிக்கப்பட்டிருக்கின்றன. கல்லூரிக்குப் பக்கத்திலேயே எழுப்பப்பட்டிருக்கும் ஹாஸ்டல் கட்டடங்கள், எல்லா நவீன வசதிகளையும் கொண்டவைகளாகத் திகழ்கின்றன. சுமார் எழுநூற்றி ஐம்பத்தைந்து மாணவர்கள் இங்கு தங்கியிருக்கிறார்கள். இருபத்தி நாலு ஏக்கர் நிலப் பரப்பில் ஐந்து பகுதிகளாக எழும்பி நிற்கும் இந்தக் கட்டடங்களை, இரவு வேளைகளில், மாணவர்கள் படிப்பில் ஈடுபட்டிருக்கும் போது பார்ப்பது, மனத்தை விட்டு அகலாத காட்சியாகவே இருக்கிறது.

ஃ ஃ ஃ

இங்கு தங்கிப் படிக்கும் மாணவர்களுக்குச் சாப்பாட்டுத் தட்டு உண்டு! சாப்பாட்டில் தட்டோ குறைவோ கிடையாது! ஒவ்வொருவருக்குமே சாப்பிட எவர்சில்வர் தட்டுத் தான். சைவ அசைவப்பகுதிகளுக்கு மொத்தத்தில் ஐந்து சாப்பாட்டுக் கூடங்களைத் தனித் தனியாக நிர்வகிக்கிறார்கள். பரீட்சார்த்தமாக ஒரு சாப்பாட்டுக் கூடத்தை உணவுச் சத்து நிறைந்த, ஆனால் அடக்கவிலை குறைந்த முறையில் நடத்திப் பார்க்கிறார்கள். இந்தச் சாப்பாட்டுக் கூடத்தைப் பயன்படுத்தும் மாணவனுக்குச் சராசரி நாள் ஒன்றுக்குத் தொண்ணூற்று ஐந்து நயே பைசேயிலிருந்து ஒரு ரூபாய் நாற்பது நயே பைசே வரை ஆகிறது.

எட்டுப் படுக்கைகள் கொண்ட பிரத்தியேக வைத்திய நிலையமும், இரவில் விளக்குகளுடன் விளையாடக் கூடிய கூடைப் பந்தாட்ட மைதானமும், இரவு பத்து மணி வரை திறந்திருக்கும் வாசகசாலையும், அதிதிகளுக்கான விசேஷ அறைகளையும் கொண்ட இந்த ஹாஸ்டல் கட்டடங்களை நிர்மாணிக்கச் சுமார் பதினெட்டரை லட்சம் ரூபாய் பிடித்ததாம்!

ஹாஸ்டல் மாணவர்கள் உற்சாகம் நிறைந்தவர்களாகவே தென்படுகிறார்கள். அவர்கள் அறைகளில் காணப்படும் வசதிகளும் உற்சாகமூட்டக் கூடியனவாக இருக்கின்றன. 'ஞாயிற்றுக்கிழமை என்றால் எல்லாருக்குமே அலாதி குஷி சார்! தேகாப்பியாசம், விளையாட்டுக்கள் என்றால் விலை என்ன விலை என்று கேட்கும் மாணவத் தோழர்கள்கூட அன்று காலை நெற்றி வியர்வை கர்ச்சிபில் விழ ஓடி ஆடி அகோரப் பசியை உண்டாக்கிக் கொள்வார்கள். காரணம், அன்று வழங்கப்படும் 'நெய்ச் சோறு' தான். அந்த 'லெஜிடபின் பிரிஞ்சி'க்கு அத்தனை மதிப்பு. அத்தனை ருசி'' என்றார் ஒரு மாணவர்.

அந்தத் தயாரிப்பில் அதிக ஈடுபாடு கொண்ட மாணவர்களுக்கு அவர்கள் நண்பர்களே 'நெ ரைஸ் பாண்டியன் (Ghee Rice Pandyan) என்ற விருதையும் வழங்கி விடுகிறார்கள்.

பொறி இயல் கல்லூரியில் மாணவர்கள் ஆசிரியர்கள் விகிதத்தைப் பதினொன்றுக்கு ஒன்றாக வைத்திருப்பதிலிருந்து, மாணவர்களைக் கவனித்து அவர்களது குறைபாடுகளை நீக்க நல்ல வாய்ப்பு இருக்கிறது என்பது தெரிகிறது. ஒவ்வொரு மாணவனுக்கும் அவனது பொறுப்பை ஏற்றிருக்கும் ஆசிரியர், பிரத்தியேக நடவடிக்கை அட்டவணை வைத்து அவ்வப்போது குறிப்புகள் எழுதி, கல்லூரி முதல்வரின் கவனத்துக்கு அனுப்பி வைக்கிறார். இதனால் ஓரளவு கல்லூரி முதல்வருக்கும், அத்தனை மாணவர்களின் நிலைமையும் நன்கு புரிந்து கொள்ள முடிகிறது.

அறுபது சதவிகிதத்துக்கு மேலான மாணவர்கள், பல வகைகளில் சம்பளச் சலுகைகள் பெறுகிறார்கள். அரசாங்கச் சலுகைகளோ, தனியார்ச் சலுகைகளோ பெற முடியாத, ஆனால் தகுதி வாய்ந்த பொறி இயல் மாணவர்களுக்கு, 'பிரின்ஸிபால், சம்பள உதவி நிதி' கைகொடுத்து உதவுகிறது. என்பத்தி இரண்டாயிரம் ரூபாய் மூலதனமாக அமைந்துள்ள இந்த நிதியிலிருந்து மாணவர்களுக்குக் கடனாகத் தொகை கொடுத்து உதவுகிறார்கள். அந்த மாணவர்கள், பிற்காலத்தில் தொழிலில் அமர்ந்து பொருளீட்ட ஆரம்பிக்கும் போது குறிப்பிட்ட தவணைகளில் இந்தக் கடன் தொகையைத் திருப்பிக் கொடுக்கலாம். இந்த வகையில் இதுவரை நடப்பு ஆண்டில் அறுபதுக்கு மேற்பட்ட மாணவர்கள் பயன் பெற்றிருக்கிறார்கள். சுமார் நூற்றி அறுபத்தி ஐந்து பொறியியல் நிபுணர்கள் தாங்கள் படித்த போது வாங்கிய கடன் தொகைகளை இப்போது திருப்பிக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

'அறிவும் சேவையும்' என்ற லட்சியத்தைக் கொண்ட இந்தக் கல்லூரி எதிர்காலத்தில் மாணவர்களுக்கும் நாட்டுக்கும் சிறந்த சேவை செய்யக் காத்திருக்கிறது.

ஃ ஃ ஃ

பி. எஸ். ஜி. பொறியியல் கல்லூரிக்கு வித்தாக எழுந்தது பி. எஸ். ஜி. கலைக் கல்லூரியாகும். 1947ம் ஆண்டு இண்டர்மீடியட் வகுப்புடன் மாத்திரம் தொடங்கிய இந்தக் கல்லூரி இன்று ஆராய்ச்சி வகுப்புக்களுடன் கூடிய ஒரு முழு முதல் தரக் கல்லூரியாகக் கோவைவாசிகளுக்குச் சேவை செய்கிறது. கல்லூரி தொடங்கப்பட்ட சில மாதங்களில் முதல்வர் பதவி ஏற்ற திரு பி. ஆர். கிருஷ்ண

# பாலின் குணங்கள் அடங்கியது...




## காட்பரீஸ்
## மில்க் சாக்கலேட்

மிட்டாய் மட்டுமல்ல ... ஒரு உணவும் கூட!

CFY-7-TAM

எடையினால் ஏக்கமா!

# எடை குறைந்து எடுப்பாய்விளங்க

# லிமிகல்

பாவையரைப் படரும் பைங்கொடியென வர்ணித்தான் பாவலன்! உடலோடு நன்றாகப் பொருந்திய உடையணிந்து கொடிபோன்ற எழிலுருவத்துடன் உலவும் நாரிமணிதான் இன்றைய நவநாகரீக சமுதாயத்தின் சின்னம். உடல் கனம் குறைவதற்குக் கடினமான தேகப்பயிற்சிகளோ, பத்தியங்களோ தேவையில்லை. லிமிகல் அருந்தி எளிய முறையில் இளைக்கலாம்.

லிமிகல் பானம் தயாரிப்பது வெகு சுலபம்—நீரில் கரைத்து அருந்த வேண்டியதுதான். ஒரு தம்ளர் லிமிகல் பானத்தில் ஒருவேளை ஆகாரத்தின் முழுச்சத்தும் அடங்கியிருக்கிறது. சாரம் மிகுந்த புரோட்டீன்கள், கார்போஹைட்ரேட்டுகள் விட்டமின்கள், மற்றும் மினரல்கள் இவற்றைச் சரியான அளவில் சேர்த்து சாஸ்த்திரிய முறையில் தயாரிக்கப்பட்ட உணவுதான் லிமிகல். ஒரு நாளைக்கு 900 கலோரிகள் கொடுக்கும் லிமிகல் பானத்தை அருந்தும் காலத்தில் உடல் இளைக்குமே தவிர நீங்கள் நல்ல ஆரோக்கியத்துடன் திகழ்வீர்கள்.

லிமிகலைப் பரீட்சார்த்தமாக அருந்தியவர்களின் உடல் நிறை வாரத்திற்கு சுமார் 3லிருந்து 5 பவுண்டுகள் வரை குறைந்திருக்கிறது. லிமிகல் அருந்திவரும் காலத்தில் உங்கள் வழக்கமான அலுவல்களைக் கவனித்து வரலாம்!




உங்கள் டாக்டரும்

# லிமிகல்

அருந்தும்படிதான் சிபார்சு செய்வார்

"ஸ்லிம்மிங் ஈஸ் ஸிம்பிள்" என்னும் இலவச புத்தகத்தைப் பெற எழுதுங்கள்.

ஸாராபாய் கெமிகல்ஸ்
த. பெ. எண் 1688, பம்பாய்-1

*சில்லறை விலை:* 225 கிராம் டின் ரூ. 6.50. வரிகள் தனி

மூர்த்தி நாயுடு இன்றும் சேவை செய்து வருகிறார்.

ஏறத்தாழ ஆயிரத்து இருநூறு மாண வர்கள் கல்வி பயிலும் இந்தக் கல்லூரியில் புகுமுக வகுப்புக்கு மாத்திரம் ஐந்நூற்றித் தொண்ணூற்றி ஐந்து இடங்கள் ஒதுக்கியிருக் கிறார்கள். ஆராய்ச்சி வகுப்புக்களில் பௌதிக பாடத்தையும் சமூக சேவையையும் போதிக் கிறார்கள். புகு முக வகுப்புக்கு இந்த ஆண் டில் ஆயிரத்து அறுநூறுக்கு மேற்பட்ட விண் ணப்பங்கள் வந்து குவிந்தனவாம்.

சென்ற ஆண்டில் புகு முக வகுப்புப் பரீட் சைக்கு எல்லா மாணவர்களையும் வடிகட்ட லுக்கு ஆளாக்காமல் அனுப்பிக் கணிசமான வெற்றியையும் கண்டிருக்கிறார்கள். அதற்குக் காரணம், 'சற்று சுமார்' என்று கருதப் பட்ட மாணவர்களுக்கு மூன்று வார காலம் விசேஷப் பயிற்சி அளித்ததுதான்!

பட்டப் படிப்பு மாணவர்களுக்கும், அடிப் படை ஆங்கில ஞானத்தை விருத்தி செய்ய விசேஷப் பயிற்சி அளிக்கிறார்கள்.

'நாவலர் மன்றமும்' 'நாடக மன்றமும்' இந்தக் கல்லூரியின் விசேஷ அம்சங்கள். மாணவர்களிடம் பேச்சுத் திறமையையும் கலை ஆர்வத்தையும் வளர்க்க இந்த இரண்டு மன் றங்களும் வெகுவாக உதவுகின்றன. இரண்டு மன்றங்களுக்கும் தனித்தனி விதிமுறைகளைத் திட்டவட்டமாக அமைத்திருப்பதிலிருந்தே, கல்லூரி நிர்வாகம் இவைகளுக்கு அளித்திருக் கும் முக்கியத்துவத்தை ஊகிக்கலாம்.

ஆண்டுதோறும் இந்த பி. எஸ். ஜி. தர்ம ஸ்தாபனத்தின் தூணாக விளங்கிய, காலம் சென்ற திவான்பகதூர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடுவின் ஞாபகார்த்தமாக நடக்கும் பேச் சுப் போட்டியை, தமிழ் நாட்டுக் கல்லூரி மாணவ மாணவிகளிடையே நடத்திப் பரிசு கொடுக்கும் பெருமையும் இந்தக் கல்லூரி யைச் சேருகிறது.

கோவையில் உள்ள பல கல்லூரிகளுக் கிடையே ஒரு நாடகப் போட்டியையும் இந்தக் கல்லூரியின் நாடக மன்றம் நடத்துகிறது. சென்ற ஆண்டு இந்தக் கல்லூரி மாணவர்கள் நடித்துக் காட்டிய 'அமராபரணம்' என்ற நாடகம் முதல் பரிசைப் பெற்றது.

'அறிவு, அன்பு, பணி' என்ற மூன்று சிறு வார்த்தைகளில் தன் மாபெரும் லட்சியத்தை அடக்கி விடுகிறது இந்தக் கல்லூரி.

பி. எஸ். ஜி. பொறி இயல் கல்லூரி, பி. எஸ். ஜி. கலைக் கல்லூரி இரண்டுக்குமே வித் தாக எழுந்தது பி. எஸ். ஜி. தொழில் நுட்பப் பள்ளியாகும். 1939ம் ஆண்டிலேயே அது முழு உருவம் பெற்றுப் பணி செய்யத் தொடங்கி விட்டது.

இப்போது சிவில் இஞ்ஜினீயரிங், மெக் கானிக்கல் இஞ்ஜினீயரிங், எலக்ட்ரிகல் இஞ்ஜி னீயரிங், நெசவுக் கலை ஆகிய நான்கு பாடங் களுடன் பி. காம் பட்டப் படிப்புக்கு இணை யான என். டி. காம் என்ற பிரிவிலும் இங்கு போதனை அளிக்கப்படுகிறது.

இந்தத் தொழில் நுட்பப் பள்ளியில், பருத்தி நெசவுப் பகுதி பிரத்தியேகக் கவ னத்தைக் கவருகிறது. மேல் நாடுகளிலிருந்து சமீப கால இயந்திரங்கள், கருவிகள் அனைத் தையும் வரவழைத்து நிறுவி மாணவர்களுக் குத் தொழிலில் நல்ல பரிச்சயம் ஏற்படுத்து கிறார்கள்.

ஐந்நூறு மாணவர்கள் கல்வி பயிலும் இந்தப் பள்ளிக்கு இப்போது முதல்வராக பணியாற்றுபவர் திரு இ. குருசாமி அவர்கள். முந்நூறு மாணவர்கள் தங்கக் கூடிய ஹாஸ் டல் வசதியும் இதற்கு இருக்கிறது.

இந்தப் பள்ளி மாணவர்கள் விளையாட்டுப் போட்டிகளில் சூரர்களாகவே விளங்குகிறார் களாம். பல மட்டையடி மன்னர்களைத் தோற்றுவித்துக் கிரிக்கெட் ஆட்ட வட்டா ரத்தில் இந்தப் பள்ளி நல்ல பெயரைச் சம் பாதித்துக் கொண்டிருக்கிறது.

இந்தக் கலைக் காவல் நிதியைக் கட்டிக் காத்து, இதன் சேவை நாடு முழுவதற்கும் பயன்பட வேண்டுமென்ற பெரு நோக்கோடு அயராது உழைத்து வருகிறார்கள் அருமைச் சகோதரர்களான திருவாளர்கள் ஜி. ஆர். தாமோதரனும், ஜி. ஆர். கோவிந்தராஜுலு நாயுடுவும். இவர்களது பணி என்றென்றும் நிலைத்திருக்கும்படி இக்கல்லூரிகளின் புகழ் ஓங்கி விளங்கும் என்பதில் ஐயமில்லை.











1, 2, 3 தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த திருபுவனம் ஸ்ரீ கம்பஹரேச்சுவர சுவாமி மகா கும்பாபிஷேகம் செப்டம்பர் 8ந் தேதி நடைபெற்றது. 4,5. மத்திய பிர தேசத்தைச் சேர்ந்த கலைக் குழுவினர் சென்னைக்கு வந்து தங்கள் நாடோடி நடனத்தை ஆடிச் சபையோரை மகிழ் வித்தனர். அன்று லலித கலா அகாடமியைச் சேர்ந்த திரு வினயகுமார் சென்னை கவர்னர் ஸ்ரீ மேதிக்கு ஒரு சிலை யைப் பரிசளித்தார். 6. ஸ்ரீ ராமதேசிகன் பாரதியாரின் பாடல்களை சம்ஸ்கிருதத்தில் ஆக்கிய புத்தகத்தை ஸ்ரீ வி. பி. வெளியிட்டார். 7. அமெரிக்கத் தூதர் செஸ்டர் பௌல்ஸ் சென்னை விஜயத்தில் திரு காமராஜைச் சந்தித்தார்.





# அறிவுக் கனலே அருட் புனலே!

34

ரா. கணபதி

ஹ்ருதயர் இடைவிடாமல் ஓம் காரத்தை ராமகிருஷ்ணரின் செவியில் பாய்ச்சியதும் அவரது முகத்தில் திவ்விய தேஜ வியாபித்தது. சூரிய ஒளி பட்டவுடன் தாமரை விரிவது போல் அவரது செவ்விய உதடுகள் முக ஒளியில் மலரத் தொடங்கின. தாமரையின் கர்ணிகை சிலிர்த்துக்கொண்டு வெளிப்படுவதுபோல் அந்த உதடுகளில் தேனாக ஒரு சிரிப்பும் சிலிர்த்தது. அந்தத் தேன் சொற்களாக உருப்பெற்றுச் சிந்தத் தொடங்கிற்று. ஆத்மானுபவங்களை அழகிய எளிய உவமைகளின் மூலம் விளக்கத் தொடங்கினார் ராமகிருஷ்ணர். தேவி அவருடைய சித்தனை தீபத்தில் இடையறாமல் தைலத்தை ஊற்றிக்கொண்டே இருந்தாள். அது தடையறாமல் சுடர் வாசகங்களை உதிர்த்துக்கொண்டே இருந்தது.

முதலில் அசிரத்தையாக இருந்த கேசவ சந்திர சேனரும், கூடியிருந்த மற்ற பிரம்ம சமாஜத்தோரும் நிமிர்ந்து உட்கார்ந்தனர். அவர்கள் அலட்சியமாக எண்ணியிருந்த ராமகிருஷ்ணர் அவர்களது லட்சிய சாதனைக்கும் மேலாக ஏதேதோ தத்துவங்களை விரித்துக்கொண்டே போனார். அவர்கள் அதிசயித்தனர்.

அதிசயம் பக்தியாயிற்று. பக்தியுடன் அவரது பேருரையைக் கேட்டுக்கொண்டேயிருந்தார்கள். போஜன வேளை, பிரார்த்தனைக் காலம் எல்லாம் சென்றுகொண்டேயிருந்தன. அவர்கள் கலையாமல் ராமகிருஷ்ணரின் மொழியமுதத்தைச் சுவைத்தபடி இருந்தார்கள். அவர்களின் சிரத்தையை அவரும் புரிந்து கொண்டார். "பசு மந்தையில் வேறேதேனும் பிராணி புகுந்தால் அவை அதனை முட்டித் தள்ளச் செல்லும். ஆனால் இன்னொரு பசுவே வந்தால் அதனை நக்கிக் கொடுக்கும். உங்கள் மந்தைக்கு நானும் ஒரு பசுவாக வந்திருக்கிறேன் என்பதைப் புரிந்துகொண்டு விட்டீர்களே, பேஷ்!" என்று கூறிச் சிரித்தார்.

கேசவ சந்திரரை நோக்கி, "உங்கள் வால் நழுவி விழுந்துவிட்டது" என்றார். அவருக்கு அதன் பொருள் புரியவில்லை. ராமகிருஷ்ணர் விளக்கலானார்: "தவளையானது தலைப் பிரட்டையாக இருக்கும் வரையில் அதனால் தண்ணீரில் மட்டும்தான் வசிக்க முடிகிறது. ஆனால் அதன் வால் அற்றுப் போய் அது முழுத் தவளையான பின் அதனால் நீர், நிலம் இரண்டிலும் வசிக்க முடிகிறது. இப்படியே ஜீவனுக்கு அஞ்ஞான வால் உள்ள மட்டும் அவனால் உலகில் மட்டும் தான் வசிக்க முடியும். அது போன பின்தான் அவன் பரம்பொருள், உலகம் இரண்டிலும் சஞ்சரிக்கிறான்" என்றார்.

உலகைப் புறக்கணித்து விட்டு, உலகத்து மாந்தரை யெல்லாம் அலட்சியம் செய்துவிட்டு, சுய மோக்ஷத்தைக் கருதிப் பரம்பொருளில் மட்டும் சஞ்சரிப்பவனை அந்தத் தியாகி அறியமாட்டார். எனவேதான் உலகம், பரம்பொருள் இரண்டையும் இணைத்து வாழ்வது பற்றிக் கூறினார். அவருடைய தியாக உணர்வின் நினைவுச் சின்னமே இன்று உலகெங்கும் ஞான போதம், சமூகப் பணி இரண்டையும் இணைத்து அளிக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ண மடங்கள்.

சத்திய வஸ்துவை அறிய வேண்டுமென்பதில் உண்மையான ஆர்வம் கொண்டவர் கேசவ சந்திர சேனர். ஆயினும் அவரும் அந்நாளையக் கல்விமான்களில் பலரைப்போல் ஹிந்து மதத்தில் புகுந்துவிட்ட சில மூட நம்பிக்கைகள் காரணமாக இந்நாட்டுக்குப் புது மதம் ஒன்றே தேவை என்றெண்ணிப் பிரம்ம சமாஜத்தில் சேர்ந்திருந்தார். அதன் பிரதானத் தலைவர்களில் ஒருவரானார். மேல் நாட்டு மத அனுஷ்டானங்களில் பலவற்றைப் பிரம்ம சமாஜத்தில் புகுத்தியிருந்த கேசவர் தமது ஒப்பற்ற ஒழுக்கத்தாலும், ஆத்மஞான நாட்டத்தாலும், விசேஷமான வாக்கு வன்மையாலும் பெரும் பிரக்யாதி பெற்றிருந்தார். தமது அந்தரங்க சுத்தம் காரணமாகவே பிரம்ம சமாஜி ஆயினும் அவர் ராமகிருஷ்ணரைக் கண்டது முதல் அவரது ஆத்மானுபூதியை மதித்து அவரை அடிக்கடி நாடத் தொடங்கினார்.

கேசவ சந்திர சேனருக்கும் ராமகிருஷ்ணருக்கும் முதல் சந்திப்பு நிகழ்ந்த சமயத்தில் பின்னவர் ஓர் அற்புதமான காட்சியைப் புறக் கண்களாலேயே கண்டார். ஒரு நாள் தக்ஷிணேச்வரத்தில் தமதறைக்கு வெளியே நின்று கொண்டிருந்த ராமகிருஷ்ணரின் காதுகளில் பக்தியில் நனைந்த நாத அலைகள் மோதின. அலை அலையாகப் பாய்ந்த நாதகளின் நாம சங்கீர்த்தனத்துக்குள் மனித முகங்களும் தெரியலாயின. அவற்றில் திவ்ய காந்தி வீசும் மூன்று திரு உருவங்கள் தெற்றெனத் தெரிந்தன. மூவரில் நடுவில்



நின்றவர் பக்தியே சதை, தசை, நரம்பு, எலும்பு எல்லாமுமாக உருப் பெற்றதுபோல் காணப்பட்டார். நாராயண நாமத்தை நாவாரச் சொல்லி நர்த்தனமாடும் அந்தப் பரம பக்த சிகாமணிதான் — உள்ளத் தூய்மை போல் உடல் தூய்மையும் கொண்டு தூய வெண்ணிறமாகத் திகழ்ந்த அவர்தான் — கௌரங்கராகிய ஸ்ரீ கிருஷ்ண சைதன்ய மகாப் பிரபு என்பதை ராமகிருஷ்ணர் உடனே அறிந்து விட்டார். விஷ ஜந்துவான பாம்பின் காலை இன்னொரு பாம்பு அறியும் என்பார்கள். அதே போல் அமிருத ஜந்து ஒன்றைப் பற்றி இன்னோர் அமிருத ஜந்து உடனே அறிவதில் அதிசயம் என்ன? 'இன்னோர் அமிருத ஜந்து' என்று சொல்வது கூடத் தவறு. சைதன்ய தேவரே தான் ராமகிருஷ்ணராக வந்திருக்கிறார் என்பதல்லவா பைரவி பிராம்மணியின் முடிவு?

காந்தி சொட்டிய மூவரில் மற்ற இருவர் சைதன்யரின் இரு புறமும் ஆனந்த நர்த்தனமாடிக் கொண்டு காளிங்க நர்த்தனனைக் கூவி அழைத்தார்கள். அவ்விருவரும் சைதன்ய ஸ்வாமியின் முக்கியமான சீடர்களாகிய நித்தியானந்தரும், அத்வைதரும் ஆவர் என ராமகிருஷ்ணர் புரிந்து கொண்டார்.

சங்கீர்த்தன கோஷ்டி நாத அலைகளில் — நாதனின் நாம அலைகளில் — மிதந்து கொண்டே ராமகிருஷ்ணரை நெருங்கிக்கொண்டிருந்தது. இப்போது அந்தக் கோஷ்டியிலிருந்த இன்னும் பல முகங்களும் அவருடைய மனத் திரையில் ஆழப் பதிந்தன. வெளியே கண்டதை அவர் உள்ளத்தால் உண்ணத் தொடங்கிய பின் வெளிக் காட்சி மறையலாயிற்று.

கௌரங்கராகிய தம்மைத் தேடி மீண்டும் ஒரு நித்தியானந்தர் வரப் போகிறார், ஒரு அத்வைதர் வரப் போகிறார், தம் நெஞ்சத்திரையில் பதிந்த மற்றவர்களும் வரப்போகிறார்கள் என ராமகிருஷ்ணரின் உள்ளுணர்ச்சி கூறியது. ஸ்வாமி விவேகானந்தரும், ஸ்வாமி பிரம்மானந்தரும் தான் நித்தியானந்தர், அத்வைதர் ஆகிய இருவர் என்பதையோ, கௌரங்கரைச் சூழ்ந்திருந்த மற்ற பலரில் ஒருவராகவே கேசவ சந்திர சேனர் ராமகிருஷ்ணரை அடைந்தார் என்பதையோ நாம் சொல்லவும் வேண்டுமா என்ன?

**வ**ங்காள வாலிபர்கள் யாவரும் யாரை ஆதரிசமாகக் கொண்டிருந்தார்களோ அந்தக் கேசவ சந்திர சேனர் தமது ஆதரிச புருஷர் இவரே என ராமகிருஷ்ணரை மதிக்கத் தொடங்கினார். பிரம்ம சமாஜியான அவரால் ராமகிருஷ்ணரது சித்தாந்தம் முழுவதையும் ஒப்புக் கொள்ள முடியவில்லை. எனினும் ராமகிருஷ்ணரின் ஒப்புவமையற்ற ஆத்மிகத்தையும், சத்திய உணர்வையும், எளிமையையும் யார்தான் ஒப்புக் கொள்ளாமல் இருக்க முடியும்? அதுவும் ஆத்ம மார்க்கத்தில் வெகு தூரம் சென்ற கேசவ சந்திரர் போன்றவர்களுக்குக் கேட்பானேன்?


OSTERMILK

கேசவ சந்திரர் அடிக்கடி தக்ஷிணேசுவரத்துக்கு வரலானார். தம்மைப் பின்பற்றும் பலரோடு, அருவமாகிய தங்கள் தெய்வத்தைப் பாடியபடியே அவர் படகில் கங்கைக் கரை வந்தடையும்போது ராமகிருஷ்ணர் துள்ளும் உள்ளத்துடன் அவர்களை வரவேற்பார். ராமகிருஷ்ணரையும் அவர்கள் படகில் ஏற்றிக் கொள்வார்கள். இவர் திவ்வியத் திரு உருவு படைத்த தெய்வ மாதாவைப் பற்றிப் பாடத் தொடங்குவார். அவருடைய தேமதுரச் சொல்லைச் சுவைத்தவராக, அவருடனேயே நேரில் உரையாடிய தமது திருவாயால் கங்கைப் பிரவாகத்துடன் போட்டியிடும் கானப் பிரவாகத்தை அவர் பெருக்கத் தொடங்கியதும் அருவ வழிபாட்டினரான சமாஜிகளும் கரையத் தொடங்குவார்கள். கானம் நின்றதும் உபதேசம் தொடங்கும். இரும்பைக் கரும்புச்சாறாக்கித் தருவதுபோல் கடினமான தத்துவங்களை யெல்லாம் நளினமான கதைகளாகத் தருவார் ராமகிருஷ்ணர். கேசவ சந்திரர் பேரானந்தம் கொள்வார். தக்ஷிணேசுவரத்துக்கு வந்து ராமகிருஷ்ணரை வணங்குவதை பிரம்ம சமாஜ ஆண்டு விழாக்களில் ஓரங்கமாகவே செய்து விட்டார் கேசவ சந்திரர்.

கேசவர் தக்ஷிணேசுவரத்துக்கு வரும் போதுகளில் ராமகிருஷ்ணர் அவரிடம் "நீங்கள் உங்களது அற்புதமான பிரசங்கங்களால் மக்களை யெல்லாம் ஆகர்ஷித்திருக்கிறீர்களாமே! எங்கே, எனக்கும்தான் உங்கள் பேச்சுத் திறனைக் காட்டுங்களேன்!" என்பார் — ஊரார் ரசிக்கும் குழந்தையின் விளையாட்டைத் தன்னிடம் செய்து காட்டச் சொல்லும் தாயின் ஆர்வத்தோடு.

கேசவ சந்திரரோ வெட்கத்துடன் தலை குனிந்துகொள்வார். "கருமான் கடையில் என்னை ஊசி விற்கச் சொல்லுகிறீர்களா?" என்பார் பவ்வியமாக.

கேசவ சந்திரர் கல்கத்தாவிலிருந்த 'கமல குடீரம்' என்ற தமது கிருகத்துக்கும் பல முறை ராமகிருஷ்ணரை அழைத்துச் சென்றதுண்டு. தமது வீடு முழுவதிலும் அவரைப் பொன்னடி பதிக்கச் சொல்லி அவரை வணங்கி எழுந்து ஆசி கோருவார் கேசவ சந்திரர்.

பரம்பொருளும் பரம்பொருளின் சக்தியும் ஒன்றே என்பதைக் கேசவர் ஒப்புக்கொள்ளுமாறு செய்தார் ராமகிருஷ்ணர். உருவ வழிபாடு செய்பவர்களின் மனப்பான்மையையும் அவர் ஓரளவு மதிக்குமாறு செய்தார். தலையை மழுக்கிக்கொள்வது, துவர் ஆடை அணிவது, புனித நீரில் முழுகுவது, நிவேதனம் அளிப்பது இவை யெல்லாம் புறத்திலிருந்து அகத்தின் உயர்வுக்கு உதவுபவை என்பதையும் கேசவ சந்திரர் உணருமாறு செய்தார் ராமகிருஷ்ணர். இயேசு போன்ற மகான்கள் திவ்விய ரூபத்தில் என்றும் அருள் புரிய வருவார்கள் என்பதையும் கேசவர் நம்ப

## ராமன் நிகழ்ச்சி

இந்திய விஞ்ஞான அகாடமியின் கூட்டம் 1949ல் பூனாவில் நடைபெற்றது. வட துருவத்தில் எடுக்கப்பட்ட விஞ்ஞானப் படம் ஒன்று அந்தக் கூட்டத்தில் காட்டப்பட இருந்தது. இக்கூட்டத்துக்கெனப் பிரத்தியேகமாக விமானத்தில் அனுப்பப்பட்ட பிலிம் சுருள்களைத் தணிக்கை செய்யாமல் திரையிட அனுமதிக்கமாட்டோம் என்று அரசாங்கம் நிறுத்தி வைத்து விட்டது. ஒருவாறு தணிக்கையும் முடிந்து படம் திரையிடப்படுவதாக நிகழ்ச்சி நிரலில் குறிப்பிடப்பட்டிருந்த நேரத்துக்கு இரண்டொரு நிமிஷங்கள் முன்னதாகத்தான் வந்து சேர்ந்தது. அதுவரை வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருந்த விஞ்ஞானிகள் பேரவையின் நிர்வாகிகள் பெருமூச்சு விட்டனர்.



படம் திரையிடப்பட்டதும் முதலில் ஸென்ஸார் போர்ட் அளித்த அனுமதிப் பத்திரம் திரையில் தோன்றியதோ இல்லையோ, உடனே ஸர் ஸி. வி. ராமன் பலமாகக் கைதட்டித் தமது 'பாராட்டுதல்களை'த் தணிக்கையாளர்களுக்குத் தெரிவித்துக் கொண்டார். மற்ற விருந்தினர்களும் அவரைப் பின்பற்றிக் கரம் கொட்டினார்கள்!

கல்லூரிகளில் கல்வி புகட்டுவதானாலும் சரி, கதைப் போக்குக் கொண்ட திரைச் சித்திரங்களானாலும் சரி, பாரதத்தின் எந்த மூலைமுடுக்கிலும் தணிக்கையாளர் அனுமதியின்றி எந்தத் துண்டுப் படமும் திரையிடப்படக் கூடாது என்கிற சட்டம் இருக்கிறது.

லானர்; அவர்களின் தரிசனத்துக்காகத் தியானம் புரியலானர். "என் வார்த்தையை எவ்வளவுக்கு எடுத்துக் கொள்ள முடியுமோ, அவ்வளவுக்கு எடுத்துக் கொள்ளுங்கள், போதும்" என்றும் கூறுவார் 'விட்டுப் பிடிக்கும்' ராமகிருஷ்ணர். அவ்வாறே எடுத்துக் கொண்டு கேசவ சந்திரரும் பிரம்ம சமாஜத்தில் பல மாறுபாடுகள் செய்தார்.

கேசவ சந்திர சேனர் ராமகிருஷ்ணருடன் பரிசயம் கொண்டதற்கு மூன்றாண்டுகளுக்கப்புறம் அதாவது 1878ம் ஆண்டில் அவர் தம் மகளைக் கூச்பீஹார் இளவரசருக்கு மணமுடித்தார். பிரம்ம சமாஜம் நிர்ணயித்திருந்த மணப் பருவத்துக்கு முன்பே கேசவர் தமது மகளுக்கு விவாகம் செய்துவிட்டார் என்பதால் சமாஜத்தினர் பலர் அவரை எதிர்த்தனர். சமாஜமே இரண்டுபட்டு விட்டது. "பிறப்பும் இறப்பும் விவாகமும் ஈசுவர சங்கல்பத்திலேயே நடப்பவை அல்லவா? இவற்றுக்கு ஏது சட்ட திட்டங்கள்? தமது சொந்தப் புதல்வியின் நலனில் கேசவரை விட மற்றவர்களுக்கு எப்படி அக்கறை இருக்க முடியும்? எனக்குப் புரியவில்லையே!" என்றார் ராமகிருஷ்ணர். அதெப்படியானாலும் சமாஜம் இரண்டாகப் பிளந்தது. கேசவரும் அவரை ஆதரித்தவர்களும் ஒரு தனி இயக்கத்தை ஸ்தாபித்தனர். மற்றவர்கள் பழைய சமாஜத்திலேயே தொடர்ந்தனர். கேசவர் தமது இயக்கத்தில் உள்ளடக்கியிருந்த பல கோட்பாடுகள் ராமகிருஷ்ணரின் வரப்பிரசாதமேயாகும்.

என்றாலும் ராமகிருஷ்ணரின் அநுபவங்கள் அவ்வளவையும் தாங்கக்கூடிய திட்பம் கேசவருக்கு இல்லை. இதே கேசவரைத் தனது லட்சியமாகக் கருதி பிரம்ம சமாஜத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்த நரேந்திர நாதன்தான் ராமகிருஷ்ணருக்காகவே பிறந்திருந்தானே! கேசவரிடமிருந்து ராமகிருஷ்ணரை அடைந்த நரேந்திரன் ஏரி ஒன்றிலிருந்து சாகரத்தைச் சென்றடைந்தது போல் உணர்ந்தான். 'ஏரியால் சாகரம் அவ்வளவையும் தன்னில் கொள்ள முடியாது. சாகரம் முழுவதையும் தன்னில் கொள்ளக் கூடியவன் நரேந்திரனே' என்பதை ராமகிருஷ்ணரும் உணர்ந்தார். எனினும் நரேந்திரன் வந்த பின்பும் ராமகிருஷ்ணருக்குக் கேசவர்பால் அன்பு குறையவில்லை. நரேன் அவரை அடைந்து மூன்றாண்டுகளுக்குப் பின் தான் கேசவர் காலகதிக்கு ஆளானார். இறுதிவரை ராமகிருஷ்ணர் நோயுற்றிருந்த கேசவரை அடிக்கடி சென்று பார்த்து வந்தார். அன்பு அளித்த தாய்மை உணர்ச்சி காரணமாகப் பாமர ஸ்திரீ போலவே, கேசவர் பிழைத்தெழுந்தால் தேவிக்கு இளநீரும், வெல்லமும் படைப்பதாக வேண்டுதல் கூடசெய்துகொண்டார் ராமகிருஷ்ணர்.

சொல்லவொண்ணாத உடல் உபாதியிலும் ராமகிருஷ்ணரைக் காணுந்தோறும் ஞான போதனைக்குப் பசித்துத் தவித்தார் கேசவர்.

"தோட்டக்காரன் ரோஜாச் செடி பெரிதாகப் புஷ்பிக்க வேண்டும் என்பதற்காக அதன் கிளைகளை வெட்டுவது மட்டுமின்றிச் சில சமயங்களில் அதன் வேரைக்கூட வெளியே கெல்லி எடுத்துச் சூரிய வெளிச்சத்துக்கும் பனிக்கும் அதைக் காட்டுகிறான். உங்கள் உடம்பையும் அப்படியேதான் ஆத்ம வளர்ச்சிக்காக ஆண்டவன் இப்போது இப்படிக் கஷ்டத்துக்குள்ளாக்கியிருக்கிறான்" என்பார் ராமகிருஷ்ணர் அநுதாபத்தோடு.

1884ம் ஆண்டில் கேசவரின் புனித ஆத்மா ஆண்டவனின் சந்நிதியில் மலர்ந்தது.

"கேசவரின் மறைவைக் கேட்ட போது என்னுடைய அங்கங்களில் ஒன்று பிரக்ஞையற்றது போல் உணர்ந்தேன்" என்பார் ராமகிருஷ்ணர்.

கூச்பீஹார் திருமணத்தையொட்டி, கேசவர் மூல பிரம்ம சமாஜத்திலிருந்து வெளியேறிய பின் விஜய கிருஷ்ண கோஸ்வாமி, சிவநாத சாஸ்திரி ஆகியோர் சமாஜத் தலைவர்களாயினர். இவர்களும் ராமகிருஷ்ணரிடம் பக்தி பூண்டிருந்தனர். முக்கியமாக விஜயர் பரம பக்தி பூண்டிருந்தார். சத்தியத்தில் உண்மையான ஆர்வம் இருந்ததன் காரணமாகவே விஜயர் தமது அன்பு ஆசாரியராகிய கேசவரிடமிருந்து பிரிந்தார். இதே சத்திய ஆர்வம்தான் அவரை ராமகிருஷ்ணரிடம் பெருத்த ஈடுபாடு கொள்ளச் செய்தது. "நான் தேசமெங்கிலும் மலையிலும் காட்டிலும் சுற்றித் திரிந்திருக்கிறேன். பல மகாத்மாக்களைக் கண்டிருக்கிறேன். ஆனாலும் (ஸ்ரீ ராமகிருஷ்ணரைச் சுட்டிக்காட்டி) இவர் போல் ஒருவரை எங்கும் கண்டதில்லை. சில இடங்களில் ஒரு பைசாவையும், இரண்டு பைசாவையும் கண்டேன்; சில இடங்களில் ஓரணாவும் இரண்டணாவும் கண்டேன்; ஆனால் ஓரிடத்திலும் நாலணாவைக் கூட நான் கண்டேன் இல்லை. இதோ, இங்கேயோ முழு ரூபாயையே காண்கிறேன்" என்பார் அவர்.

ராமகிருஷ்ணரை வந்தடைந்த பின் விஜய கிருஷ்ணர் உருவ வழிபாட்டில் நம்பிக்கை கொள்ளலானார். சத்தியத்தில் தளராத திட புத்தி கொண்டவரல்லவா அவர்? எனவே பிரம்ம சமாஜம் மூர்த்தி உபாசனையை ஒப்பாத காரணத்தால் அவர் அதனின்றும் வெளியேறினார். ஜீவனோபாயத்துக்கே அவர் சிரமப்பட வேண்டியதாயிற்று. என்றாலும் அவர் மனசு சோர்ந்துவிடவில்லை. விளக்கவொண்ணாத முறையில் ராமகிருஷ்ணரின் அருள் தம்மை எல்லா இன்னலிலும் பாலித்து வந்தது என அவர் கூறியிருக்கிறார்.

நாளாக ஆக விஜயரின் பக்தி உணர்ச்சிப் பிழம்பாக ஒளிரத் தொடங்கியது. நாம பஜனையின்போது அவர் கண்ணீர் சோர, மெய் புளகித்துப் பரவசமாக ஆடிப் பாடுவார். "ஆத்ம சாக்ஷாத்காரம் என்ற உள்ளறைக்கு மிகச் சமீபத்திலுள்ள அறையை விஜயர் அடைந்துவிட்டார். உள் அறையின் கதவை அவர் தட்டிக் கொண்டிருக்கிறார்" என்று ராமகிருஷ்ணர் கூறுவார்.

மன மாறுபாட்டுடன் இரு வேறு கட்சிகளாகப் பிரிந்து நின்ற கேசவர், விஜயர் இருவருமே ஒரு முறை அகஸ்மாத்தாக ராமகிருஷ்ணரைக் காண ஒரே சமயத்தில் தக்ஷிணேசுவரத்துக்கு வந்து சேர்ந்தார்கள். இருவரையுமே இனம் தெரியாத கூச்சம் பிடுங்கித் தின்றது.

அவர்களைப் பரிவுடன் நோக்கிப் பேசலானார் ராமகிருஷ்ணர்.

"ஒருகதை சொல்கிறேன் கேளுங்கள். ஈசுவரனுக்கும் ராமனுக்கு மிடையே ஒரு முறை பெரிய போர் ஒன்று மூண்டது. ஈசுவரன் ராமனுடைய குரு; ராமன் ஈசுவரனுடைய குரு என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். ஆனபடியால் அவர்கள் நீண்டகாலம் போர் புரிய முடியவில்லை. விரைவிலேயே ஒன்று சேர்ந்தார்கள். ஆனால் ஈசுவரனுக்குத் துணை நின்ற பூத கணங்களுக்கும் ராமனுக்குச் சகாயம் செய்த வானரங்களுக்கும் அவ்வளவு எளிதில் பகை தீரவில்லை. அவை சண்டை போட்டுக் கொண்டிருந்தன.... இதோ பாருங்கள் கேசவ்! விஜய், நீங்களும்தான் யோசித்துப் பாருங்கள்! பூதகணங்களும், வானரங்களும் வேணுமானால் சண்டையை உடைத்துக் கொள்ளட்டும். ஈசுவரனும் ராமனும் அப்படி இருக்கலாமோ?" என்று குறும்பிலேயே பரிவோடு கேட்டார்.

இடைக் காலத்தில் ஒருவரோடு மற்றவர் முகாலோபனம் செய்யாதிருந்த கேசவ சந்திரரும், விஜய கிருஷ்ணரும் அதன்பின் மீண்டும் பேசிக் கொள்ளத் தொடங்கினார்கள்.

## அக்ராசனம் வகித்த ஆங்கில மாது

'பாரத நாட்டுக்கு நான் அடியெடுத்து வைத்த காலம் முதற்கொண்டே இது போன்ற தொப்பிகளை மக்கள் அணிந்திருப்பதைப் பார்த்துவருகிறேன். அப்படியிருக்க இதற்குக் காந்திக் குல்லாய் என்று எதற்குப் பெயராம்?' என்று கேட்டுக் காந்திஜியின் ஒத்துழையாமை இயக்கத்தின் முதல் எதிரியாக விளங்கிய அன்னி பெஸண்ட் காந்திஜியின் பெருமதிப்புக்கும் மரியாதைக்கும் பாத்திரராக விளங்கினார்.




இவர் பாரதம் தனது புராதனப் பெருமையை மறந்து மேனாடுகளிலிருந்து இறக்குமதியான நாகரிக மோகங்களுக்கு அடிமையாகி விடக் கூடாது என்று பாடுபட்டவர். பாரதம் விடுதலை பெற்றாலும் அது மற்ற பிரிட்டிஷ் காமன்வெல்த் தேசங்களைப்போல் பிரிட்டிஷ் அரசரைத் தலைவராக ஏற்றுக் கொள்வதாக அமையவேண்டும் என்று விரும்பினார். காங்கிரஸ் அக்ராசனராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இவர்தான் முதன் முதலில் காங்கிரஸுக்கு ஒரு கொடியையும் கொடுத்தவர். இந்து முஸ்லிம் ஆகிய இரு மதத்தவரையும் அணைத்துப் போகிறமாதிரியாகச் சிவப்பு, பச்சை நிறங்களைக் கொண்டிருந்தது அந்தக் கொடி. நடுவே வெள்ளையும், அதன் மையத்தில் சர்க்காவும் பின்னால் சேர்க்கப்பட்டன.

காந்திஜியைக் காட்டிலும் அதிகமான புகழ் பெற்றிருந்த இவருக்குப் பக்க பலமாக நின்று நாட்டு நலனுக்கு உழைத்த அன்னி பெஸண்டின் பிறந்த தினத்தை யொட்டி அக்டோபர் மாதம் முதல் தேதியன்று பாரத அரசாங்கம் அவரது உருவம் பொறித்த தபால் தலையை வெளியிட்டு அவரைக் கௌரவிக்கப்போகின்றது.

விஜய கிருஷ்ணர் சிறந்த மந்திர சித்தி பெற்று மற்றவர்களுக்கும் உபதேசித்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது யாக்கையை நீக்கதற்குப் பதிரு வாண்டுகளுக்குப் பின் அவர் புரியில் உடலை உகுத்தார்.

விஜயரும் பிரம்ம சமாஜத்தை விட்ட பின் சிவநாத சாஸ்திரி அதன் தலைப் பெரும் தலைவரானார். அவரும் ராமகிருஷ்ணரின் தூய்மையினால் பெரிதும் கவரப்பட்டவராவார். நரேந்திர நாதனுக்குச் சிவநாதரிடம் மிகவும் ஈடுபாடு உண்டு. அவன் கேசவர், ராமகிருஷ்ணர் இவர்களுடன் தொடர்பு கொண்டிருந்த போதிலும் சிவநாதரை அடிக்கடி அணுகுவதுண்டு. அவரிடம் "நீங்கள் ஏன் இப்போதெல்லாம் தக்ஷிணேசுவரத்துக்கு வருவதில்லை?" என்று ஒரு நாள் நரேந்திரன் கேட்டான். "நான் அங்கே போனால் என்னையும் ராமகிருஷ்ணர் தமக்கு ஆட்படுத்திக் கொண்டு விடுவார். என்னைத் தொடர்ந்து சமாஜிகள் யாவரும் அவரை அடைவார்கள். சமாஜமே கலைந்துபோய் விடும்" என்றார் சிவநாதர். அங்கே தான் பிரம்ம சமாஜத்தின் பலவீனம் இருக்கிறதென நரேந்திரன் கண்டான். அறிவினால் மெய்ப் பொருளை விளங்கிக் கொள்ள முயன்றது சமாஜம். ஆனால் மெய்ப் பொருள் தத்துவம் அறிவுக்கு மேம்பட்டது. அநுபவத்தால்தான் அதை விளங்கிக் கொள்ள முடியும். ராமகிருஷ்ணர் இப்படி விளக்கிவைத்தார். என்றாலும் அந்த விளக்கத்தை ஏற்கும் பக்குவம் சமாஜத்துக்கு இல்லை.

'உண்மையை அநுபவத்தின் மூலம் உணர மாட்டோம், அறிவின் மூலமே உணர்வோம்' என்று சிவநாதர் பிடிவாதமாக இருந்தார். நரேந்திரனுக்கு சமாஜத்தைப் பற்றிக் கவலை இல்லை. சத்தியம்தான் அவனது ஒரே விசாரம். 'சமாஜத்துக்கும் ஏன் இப்படிப்பட்ட சத்திய நாட்டம் இல்லை? எப்பொருள் யார் யார் வாய் கேட்பினும் மெய்யான அநுபவம் பெற அது ஏன் தயாராக இல்லை?' என்று அவன் வருந்தினான். எனவேதான் அவன் சமாஜத்தை விட்டு ராமகிருஷ்ணரை ஆசாரியராக ஆசிரயித்தான். இதெல்லாம் பின்னால் வரப் போகும் கதை.

சிவநாத சாஸ்திரிக்கு ராமகிருஷ்ணரின் சமாதி நிலையில் நம்பிக்கையில்லை. சமாதிநிலை எய்தும்போது பரம்பொருளில் திளைத்திருப்பதாக அவர் கருதவில்லை. உணர்ச்சிகள் யாவும் அற்றுப் போன மயக்கம் போன்ற ஒரு நிலையே அது என அவர் நினைத்தார். உள்ளத்தில் எதையும் ஒளிக்கத் தெரியாத ராமகிருஷ்ணர் சிவநாதரையே ஒருநாள் கேட்டு விட்டார்:

"என்ன சிவநாத்! எனக்கு ஏதோ வியாதி என்றும் அவ்வப்போது உணர் விழந்து விடுகிறேன் என்றும் சொல்லி நீர்களாமே! மண்ணையும் மட்டையையும், பொன்னையும் பொருளையுமே சதா நினைந்து வாழ்கிறவர்கள் உணர்வுக்கு ஒரு கோளாறும் இல்லாமல் அந்தப் பொருள்களின் நினைவில் ஈடுபட்டிருக்கும் போது, இந்த உணர்வுகளை யார் அளிக்கிறாரோ அந்த சர்வேசுவரனையே சிந்தித்துக் கொண்டிருக்கும் நான், உணர்ச்சியற்ற மயக்க நிலை அடைவதாக நீங்கள் எப்படி எண்ணுகிறீர்கள்?" என்றார் ராமகிருஷ்ணர்.

சிவநாதர் லஜ்ஜை அடைந்தார்.

பிற்பாடு பிரம்ம சமாஜ முக்கியஸ்தரான பிரதாப சந்திர மஜூம்தார் என்பவரும் ராமகிருஷ்ணரிடம் பக்தி பூண்டு ஒழுகியவர். அவர் ராமகிருஷ்ணரால் பிரம்ம சமாஜம் பெற்ற பயனை வெளிப்படையாகவே ஒப்புக் கொண்டார். "அவரைக் காணுமுன் மத உணர்வு என்றால் என்னவென்று நாங்கள் எங்கே கண்டோம்? அவரைப் பார்த்த பின்தான் எங்களுக்குச் சாதனையில் தீவிரம் உண்டாயிற்று" என்று அவர் கூறினார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பரவச சமாதிகளைக் கண்ட நினைவில்தான் மற்றொரு பிரம்ம சமாஜியாகிய சிரஞ்சீவி சர்மா தமது பிரார்த்தனை கீதங்களை இயற்றினார். பொதுவாகவே எல்லா பிரம்ம சமாஜத்தவரும் யோகம், வேதாந்தம் இவற்றைப் பயிலத் தொடங்கினர்.

இவ்வளவெல்லாம் இருந்தும், ஹிந்து மதம் பூரணத்துவம் பெற்றதல்ல என்ற கருத்து மட்டும் சமாஜத்துக்கு மாறவில்லை. இதர மதங்களைக் கொண்டு நிறைவு பெறவேண்டிய ஒன்றே அது எனத்தான் சமாஜத்தினர் கருதினார்கள். அநுபவத்தை விடப் பெரிதாக அறிவுக்கு அவர்கள் அளித்த முக்கியத்துவமும் மாறவில்லை. ராமகிருஷ்ண சாகரத்திலிருந்து சில குடங்களை மொண்டு கொள்ளத் தான் பிரம்ம சமாஜத்தினால் இயன்றது!

எனினும் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பெயர் வெளி யுலகில் பரவுவதற்குப் பிரம்ம சமாஜம்தான் முக்கிய காரணமாக இருந்தது. இல்லாவிடில், ராமகிருஷ்ணரின் பெயர் கேசவ சந்திரரை எட்டிய பின்னரே அவருக்காகப் பிறந்திருந்த சிஷ்யர்கள் அவரைத்தேடி வருவார்கள் என தேவி கூறியிருப்பாளா? (தொடரும்)



## மாதர் உலகம்

கண்ணன் எப்போது பிறந்தான்?

இதென்ன கேள்வி? ஸ்ரீ ஜயந்தி கொண்டாடுவதற்காக ரோகிணி நட்சத்திரத்தன்றும், கோகுலாஷ்டமி கொண்டாடுவதற்காக அஷ்டமி திதியன்றும் பிறந்தான்! இந்த இரண்டு தினங்களிலும் ஸ்ரீ கிருஷ்ணன் பிறந்ததை நாம் எத்தனையோ வருஷங்களாகக் கொண்டாடிக்கொண்டு வருகிறோம்.

நாம் முறுக்கு வடை, சீடை, உடைக்க முடியாத, அல்லது பிடிவாதமாகப் பாகாகவே இருக்கும் வெல்லச் சீடை இவற்றைப் பண்ணித் தின்பதற்காக அவர் இரண்டு தரம் பிறப்பாரா என்பதைப் பற்றி நாம் எண்ணிப் பார்த்துக் கொண்டிருப்பதில்லை. அதைப் பற்றிப் பெரிதாகவும் நினைப்பதில்லை. ஆனால் வேறு எந்தப் பண்டிகையாவது இரண்டு தரம் வந்து விட்டாலோ அதைப் பற்றிப் பிரமாதப்படுத்துகிறோம்.

இந்த வருடம் நவராத்திரிப் பண்டிகை செப்டம்பர் மாதம் ஒரு தரம் வருகிறது; அப்புறம் அக்டோபர் மாதம் ஒரு தரம் வருகிறது. இந்தச் சேதியைக் கேள்விப்பட்ட தீபாவளிப் பண்டிகை, ''நான் மட்டும் மட்டமா? நானும் இரண்டு தரம் வருவேன்'' என்றது. தீபாவளி அக்டோபர் மாதம் ஒரு தரம், அப்புறம் நவம்பர் மாதம் ஒரு தரம் வரப் போகிறது. இதற்காக அன்னை பராசக்தி அந்த 'வில்லன்' மஹிஷாசுரனை இரண்டு தரம் சம்ஹரித்தாக வேண்டும். நரகாசுரனோ 'தயவு செய்து என்னை இரண்டு தரம் கொல்லுங்கள்' என்று ஸ்ரீ கிருஷ்ண பகவானைக் கேட்டுக் கொண்டிருப்பான்.



கடவுள் பக்தி பொங்கி வழிந்துகொண்டிருந்த பழைய காலத்திலும் இதுபோன்ற பண்டிகைத் தகராறுகளுக்காக மண்டைகள் உடைபடும். பிறகு அவை சம்பந்தப்பட்ட வழக்குகள் லண்டனில் பிரிவி கௌன்ஸில் வரை சென்றன. இப்போது பத்திரிகைகளில் கடிதங்கள் வெளிவருகின்றன. ஆசார்யார்களின் அபிப்பிராயங்கள் வெளியாகின்றன. அத்துடன் விஷயம் தீர்ந்து போகிறது. நியாயமாக ஆம் ஆசார்ய ஸ்வாமிகள் நிர்ணயிக்கும் தேதிகளில் பண்டிகைகளைக் கொண்டாட வேண்டும். அது நமது கடமையுங்கூட. ஆனால் நாம் அப்படியும் செய்வதில்லை.

இதில் பண்டிகை கொண்டாடுவதைப் பற்றிய கவலையை விட சர்க்கார் காரியாலயத்தில் என்று விடுமுறை விடப் போகிறார்கள் என்பதைப் பற்றிய கவலைதான் அதிகம். இதில் நவராத்திரிப் பண்டிகை முழுக்க முழுக்கப் பெண்கள் சம்பந்தப்பட்டது. தீபாவளிப் பண்டிகையோ விடியற்காலையில் வருவது. அன்று இந்தப் புருஷர்களை எண்ணெய் தேய்த்துக் கொள்ளச் சொல்லி எழுப்புவதற்குள் போதும் போதும் என்று ஆகி விடும். இந்தப் பண்டிகைகளுக்கு மற்றவற்றைப் போன்று வைதிகர்கள் வந்துதானாக வேண்டும் என்பதில்லை. பல வீடுகளில் தாங்களாகவே ஸரஸ்வதி பூஜை செய்து விடுகிறார்கள். ஆகையால் என்றைக்கு லீவு விட்டால் என்ன, என்றைக்குக் கொண்டாடினால் என்ன?





எனக்குத் தெரிந்த பார்வதிப் பாட்டியை இதைப் பற்றி விசாரித்தேன். அவர் பண்டிகைகள் கொண்டாடும் விதத்தில் மிகவும் கண்டிப்பு. ''இரண்டு தரம் என்ன,



# இரண்டு





அஞ்சாறு தரம் வேண்டுமானாலும் வரட்டும். நமக்கு என்றைக்குச் சௌகரியமோ அன்றைக்குக் கொண்டாடி விட்டுப்போகிறோம். மொத்தத்தில் பண்டிகையை விடக் கூடாது. அவ்வளவுதானே?'' என்று அவரே அடித்துச் சொன்னார். அது எனக்குச் சரி என்றே பட்டது.

இப்போது நாம் நவராத்திரி கொண்டாடும் விதம், அந்தப் பண்டிகைக்காகக் கொலு வைப்பது என்பது எப்படி ஏற்பட்டது என்று எண்ணத் தோன்றவில்லை. கொலு வைப்பதற்காகத்தான் அது ஏற்பட்டது என் சொல்லும்படியாக இருக்கிறது. ஆரம்பத்தில் திருப்பதி மரப் பாச்சிகளும், பண்ருட்டி மண் பொம்மைகளும் வைத்துக் கொண்டு வந்தோம். இப்போது ஸ்புட்னிக் என்ற செயற்கைச் சந்திரன் போன்ற சுற்றும் மின்சார விசையுள்ள பொம்மை கூட வைக்கிறோம். சுண்டலோடு சாக்லேட், 'சூயிங்கம்' முதலியனவும் வந்தவர்களுக்குக் கொடுக்கிறோம்.

அநேகமாக எல்லோரும் அச்சடித்த அழைப்புக் கடிதம் அனுப்புகிறார்கள். சில கடிதங்களில் போட்டிருக்கும் பெயர்களைப் பார்க்கும்போது ''எங்கள் குடும்பத்தில் பெண்களும், குழந்தைகளுமாக இத்தனை டஜன் பேர் இருக்கிறோம்' என்று தெரிவிப்பதற்காகவே அதை அனுப்புகிறார்களோ என்று எண்ணத் தோன்றுகிறது. பேபி காவிரி, பேபி பவானி, பேபி கங்கா, பேபி நர்மதா, பேபி யமுனா... என்று வரிசையாக இருக்கும். அப்புறம் பெரியவர்களின் பெயர் வரிசை வேறு. இந்தக் கூட்டத்தைச் சேர்ந்த சில பெண்கள் துர்க்காபூரிலோ முஸ்ஸோரியிலோ ராஜ்கோட்டிலோ இருப்பார்கள். வீட்டிலுள்ள மூத்த கன்னிப் பெண்ணின் பெயரை மட்டும் அழைப்பு வாசகத்துக்கு அடியில் போட்டு விட்டுக் கடைசியில் வீட்டுப் பெரிய அம்மாளின் பெயரைக் குறிப்பிட்டால் போதும் — யார் வீடு என்று தெரிந்து கொள்வதற்காக. அழைப்புக்களும் நாசூக்காக இருக்கும். படிக்கும்போது வெறுப்பு தட்டாது.



இப்போதெல்லாம் கொலுவை நன்றாகப் பார்ப்பதென்பதோ, அல்லது பார்ப்பது போல் பாவனை செய்வது என்பதோ கூடக் கிடையாது. யாராவது திருமணம் செய்து கொண்டு விட்ட சினிமா நட்சத்திரத்தின் வீட்டுக் கொலுவைப் பற்றியே அதிகமாகப் பேசுகிறோம்; அவர்கள் வீட்டுக்குப் போய்ப் பார்க்க ஆசைப்படுகிறோம்.

சிலர் குறிப்பிட்ட தினங்களில் குறிப்பிட்ட மணி நேரத்துக்கு வரும்படி அழைப்பில் குறிப்பிடுகிறார்கள். சிலர் அவர்கள் கொலுப் படியில் பொம்மையை வைக்க ஆரம்பித்ததிலிருந்து, பத்து தினங்கள் கழித்து அவற்றை எடுத்து வைக்க ஆரம்பிக்கும் வரை ஒவ்வொரு நாளும் இருபத்தி நான்கு மணி நேரம்வரை பார்க்கலாம் என்று அர்த்தப்படும்படி எழுதுகிறார்கள்.



சிலர் தங்கள்வீட்டு மாடிமீது கொலு வைத்திருப்பார்கள். இவர்கள் வீட்டுக்குப் போய் விட்டு வருவது மிகவும் சௌகரியமாயிருக்கும். ''எனக்கு

# நவராத்திரிகள்



## மோட்டார் ஹாரனின் உபயோகம்

பவளக்கொடி படத் தயாரிப்புக்காக திரு கே. சுப்பிரமணியத்துக்குப் பணம் கொடுத்து உதவியிருந்தார் ஒருவர். அந்தக் காலத்தில் ஸ்டூடியோ வசதிகள் அதிகம் இல்லாததால் வெட்ட வெளியில்தான் படம் எடுப்பார்கள். பண முதலீடு செய்வதுடன் முன்பே வியாபாரத் தொடர்பு கொண்டிருந்து மனஸ்தாபத்தினால் பிரிந்து விட்ட ஒருவர் இருந்தார். இவர் சண்டை போடும் நோக்கத்தோடு தினமும் ஷூட்டிங் சமயத்தில் பேபி ஆஸ்டின் காரில் குறிப்பிட்ட இடத்துக்கு வந்து சேர்ந்து விடுவார். ''ஸைலென்ஸ்பிளீஸ் காமிரா!'' என்று கூறப்பட்ட மறு கணமே ஆஸ்டின் காரின் ஹாரன் அலற ஆரம்பிக்கும். இதனால் வேறு வழியின்றிப் பவளக்கொடிக்குப் பண முதலீடு செய்திருந்த ஆஸ்டின் கார் அதிபருக்குச் சேர வேண்டிய தொகையைக் கொஞ்சம் சமரசம் செய்து கொள்ள நேரிட்டது! பிரமாதமாக ஓடிய பவளக்கொடியில் மொத்தம் எத்தனை பாடல்கள் தெரியுமா? சரியாக ஐம்பது!

மாடிப் படி ஏறி வர முடியாது'' என்று கூறிக் கீழேயே வெற்றிலே பாக்கு வாங்கிக் கொண்டு வந்து விடலாம்.

சிலர் ஐம்பமாக அழைப்பை அனுப்பிவிட்டுத் தாங்கள் வீட்டில் இருப்பதில்லை. வீட்டு வேலைக்காரியை விட்டுக்கூட வெற்றிலைபாக்குக் கொடுக்க ஏற்பாடு செய்து விட்டுப் போகிறவர்கள் இருக்கிறார்கள். பட்டணம் போன்ற பெரிய ஊர்களில் இந்தக் கோடிக்கு அந்தக் கோடி பத்துப் பன்னிரண்டு மைல் தூரம். அதுவும் புதிசு, புதிசாக, ஏற்பட்டு வரும் ஸி. ஐ. டி. காலனிகள், ஸி.ஐ.டி. நகர்களின் தெருக்களையும், வீட்டு நம்பர்களையும் கண்டு பிடித்துப் போய்விட்டு வருவதற்குள் போதும் போதும் என்று ஆகிவிடும்.

டாக்ஸி வண்டிக்காரர்களும், ஆட்டோ ரிக்ஷா வண்டிக்காரர்களும் கொலு பார்க்கப் போய் விட்டு வரும் ஸ்திரீகளை ஒரு பர்லாங்கு தூரத்தில் பார்க்கும்போதே பக்கத்திலுள்ள சந்தின் வழியாக மிக வேகமாக ஓட்டிக் கொண்டு போய் விடுகிறார்கள். ஒரு வீட்டுக்குள் நாம் கொலு பார்க்க நுழைந்தால் எத்தனை நாழிகைக்குப் பிறகு திரும்ப வந்து வண்டியில் ஏறுவோம் என்பது அவர்களுக்கு நிச்சயமில்லை. ஏன், நமக்கே தெரியாதே!

பல வீடுகளில் மோட்டார் வண்டியிருந்தாலும், வீட்டுக்காரரேதான் வண்டியையோட்டுவது வழக்கம். டிரைவர் இருப்பதில்லை. இந்த நவராத்திரி காலத்தில் மட்டும் டிரைவரை வைத்துக் கொண்டு நாம் போக வேண்டும் என்று சொல்லும் இடங்களுக்கு நம்மை அழைத்துச் சென்று வருகிறார்கள். அவர்களிடம் நாம் யார் யார் வீட்டுக்கு அவசியம் போய் ஆக வேண்டும் என்று முதலிலேயே அழைப்புக்கடிதங்களைப் பார்த்து ஒரு ஜாபிதா போட்டுக் கொடுத்து விட்டால் அவர்கள் அதற்குத் தகுந்தபடி தங்களுக்கு அவகாசம் ஏற்படுத்திக் கொள்ள முயற்சி செய்வார்கள்.

ஆனால் பலர் அப்படிச் செய்வதில்லை. வண்டியில் தியாகராய நகரில் ஏறுவார்கள். ''நாம் முதலில் வண்ணாரப் பேட்டைக்குப் போய் விட்டு, அப்படியே அடையாற்றுக்கு வந்து விட்டு, கீழ்ப்பாக்கம் போய் விட்டு, அப்படியே மயிலாப்பூருக்கு'' என்று ஆரம்பிப்பார்கள். இதைக் கேட்பவர்கள் மூளை குழம்பிப் போய் நிதானமிழந்து வண்டியை யார் வீட்டுக் கொலுவுக்காவது போய்க் கொண்டிருப்பவர்கள் மீது ஏற்றி விடக் கூடும்.

இன்னொரு விஷயம். பல வீடுகளில் இரண்டு வித அழைப்பு ஜாபிதாக்கள் இருக்கும். ஒன்றில் கல்யாணங்களுக்கும் மற்ற எல்லா விசேஷங்களுக்கும் அழைக்கப்பட வேண்டியவர்களின் பெயர்கள். இன்னொன்றில் நவராத்திரி போன்ற விசேஷங்களுக்கு மட்டும் கூப்பிடப்பட வேண்டியவர்களின் பெயர்கள். இந்த ஜாபிதாவில் ரயில் சிநேகிதம் என்பார்களே அது மாதிரி பீச் சிநேகிதம், சினிமாவில் பார்த்த சிநேகிதம், டாக்டரிடம் போகும் போது?? பார்த்த சிநேகிதம், நர்ஸிங்ஹோமில் சந்தித்த சிநேகிதம், பெண்ணின் பள்ளிக்கூட சிநேகிதம்-இப்படிப் பல விதங்கள் இருக்கும்.

அது எப்படி வேண்டுமானாலும் போகிறது. டிரைவராய் இருக்கும் புருஷன் தன் மனைவியைத் தனக்கு முன்பின் பழக்க மில்லாதவர்களின் வீட்டுக்கெல்லாம் அழைத்துக் கொண்டு போய் விட்டு வர வேண்டியிருக்கிறது. மனைவி கொலு பார்த்து விட்டுத் திரும்பும் வரையில் வண்டிக்குள் வியர்க்க விறுவிறுக்க உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டி யிருக்கிறது. கொலு பார்க்கப் போன இடத்தில் கொலுவைப் பார்த்தோம். பார்த்து விட்டு வெற்றிலே பாக்கு வாங்கிக் கொண்டு உடனே கிளம்பி விடுகிறோமென்று முடிகிறதா! அங்கே நமக்கு ரொம்ப ரொம்பத் தெரிந்த பேர் நாலு பேர் வந்திருக்கலாம். அவர்களுடன் மரியாதைக்கு இரண்டு வார்த்தையாவது பேசாமல் எப்படிக் கிளம்ப முடியும்?

அது வரையில் வண்டிக்குள் ஒருவர் சிரமப் பட்டுக் கொண்டு தெய்வமே என்று உட்கார்ந்திருப்பாரே என்பதற்காக இதெல்லாம்சொல்கிறேன். அவருக்கோ அந்த வீட்டில் ஒரு ஈ, காக்கையைக் கூடத் தெரியாது. அழைப்பு அனுப்பியவர்கள் ஒன்று செய்யலாம். அப்படி வண்டி ஓட்டி வருபவர்களுக்கு ஒரு தனி இடம் கொடுத்து அவர்களை உட்காரச் செய்யலாம். ஒரு பொட்டலம் சுண்டலைக் கொடுத்தால் கொறித்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஸ்திரீகளுக்கென்று ஏற்பட்டுள்ள தனிப் பட்ட பெரிய பண்டிகை நவராத்திரி ஒன்றுதான். இது அவர்கள் தங்கள் கவலைகளை மறந்து நாலு பேர் வீட்டுக்குப் போய் வரச் சந்தர்ப்பம் அளிக்கிறது. தவிர இந்தப் பண்டிகைகளில் பெரிய மனிதர்கள், ஏழைகள் வித்தியாசம் அவ்வளவாக வெளிப்படுவதில்லை. சொல்லப் போனால் இது பெண்ணுலகத்தின் ஜனநாயகப் பண்டிகை.

# ஈறு உபாதைகள் மற்றும் பற்சிதைவு போர்ஹான்ஸ் பற்பசையினால் வெற்றிகரமாக முறியடிக்கப்படுகின்றன

தாமாகவே விரும்பி எழுதப்பட்ட கடிதங்கள் * இவற்றை நிரூபிக்கின்றன.

* இந் நற்சாட்சிக் கடிதங்களை ஜாப்ரே மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.



தங்களுடைய போர்ஹான்ஸ் பற்பசையை நான் கடந்த 20 வருடங்களுக்கு மேலாக உபயோகித்துவருவதால், எனக்கு இன்று 65 வயதும் 5 மாதங்கள் ஆகியும் என்னுடைய 32 பற்களும் இன்னமும் வலுவுடனும், ஆரோக்கியத்துடனும் இருக்கின்றன. எனது தேதிவரை நான் எவ்விதமான பற்கோளாறினும் அவதிப்பட்டதில்லை.

சு. என். சு. அம்பலம்

எனக்கு போர்ஹான்ஸினால் ஏற்பட்ட நல்ல பலனைக் கண்டபின் இப்போது என் குடும்பத்தில் எல்லோரும் போர்ஹான்ஸையே உபயோகிக்கிறார்கள். அதற்கு முன்னால், நான் எப்பொழுதும் பல்வலி மற்றும் ஈறு உபாதையால் அவதிப்பட்டு வந்தேன். இப்போது போர்ஹான்ஸின் பயனால், என் பற்கள் வெண்மையாகவும், உறுதியாகவும் ஈறுகள் வலுவாகவும் இருக்கின்றன. பலவருடங்களாகவே எனக்கு ஈறுகளில் புண் ஏற்படவில்லை. அப்பப்பா! நான் வேறெந்தப் பற்பசையை உபயோகிப்பதாகக் கனவுகூடக் காணமாட்டேன்.

வி. என். டில்லி.

என்னுடைய பற்களின் வெண்மைக்கும், ஒளிக்கும் நான் ரொம்ப நாட்களாகவே உபயோகித்து வரும் போர்ஹான்ஸ் பற்பசைக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளேன். நான் 27 வயதுள்ள இளைஞன். வெற்றிலை, பாக்கு மற்றும் புகையிலை உபயோகிக்கிறேன். புகையிலைபோடுவதால் பற்களில் கறையும், பழுப்பும் ஏற்படுகின்றன என்பது உங்களுக்குத் தெரியும். ஆனால் போர்ஹான்ஸ் பற்பசை மந்திரஜாலம்போல, என் பற்களில் உள்ள கறையைப்போக்கி, அவற்றை வெண்மையாகவும், ஒளி வீசும்படியும் இருக்கச் செய்கிறது.

பி. பி. பங்களூர்.

போர்ஹான்ஸ்

ஒரு பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை.




இதற்கு உகந்த, சிறந்த சேர்க்கைக்கு,

**போர்ஹான்ஸ் டபிள்-ஆக்‌ஷன்** டூத் பிரஷ் உபயோகியுங்கள்.

- இந்த டூத் பிரஷ் மட்டுமே உங்கள் பற்களைச் சுத்தம் செய்வதோடு, ஈறுகளையும்
- இதமாகத் தடவிக்கொடுக்கிறது.



T 32 A. TAM

## முப்பத்தெட்டாவது அத்தியாயம்

"வீணாகப் பெரிய மனிதர்களைப் பகைத்துக் கொள்ளக் கூடாது. சாயங்காலம் நானும் உன் கூட வருகிறேன். மேற்கே கோச்சடைக்குப் போகிற வழியில் வைகைக் கரையோரம் உள்ள ஜமீன் மாளிகையில் ஜமீன்தார் தனியாகத்தான் இருப்பார். போய் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வந்து விடலாம். இனிமேல் நீ அந்த நாட்டியக்காரியைத் தேடிக் கொண்டு போகாதே.... அதெல்லாம் பெரிய இடத்து விவகாரம்.... ஜமீன்தாரின் கோபத்துக்கு ஆளாகக் கூடாது.... கண்ணாயிரமும், ஜமீன்தாரும் நினைத்தால் யாருக்கு என்ன கெடுதல் வேண்டுமானாலும் செய்ய முடியும். இந்தக் குத்துவிளக்குப் பத்திரிகையை ஜமீன்தார் விலைக்கு வாங்கறதுக்கு முன்னாலே ஒரு சமயம் இப்ப ஆஸ்பத்திரியிலே படுத்துக்கிட்டிருக்காளே இந்த நாட்டியக்காரப் பெண்ணைப் பேட்டி கண்டு வருவதற்காகக் கண்ணாயிரம் குமரப்பனையும் இன்னொரு உதவியாசிரியரையும் அழைச்சிக்கிட்டுப் போயிருந்தாராம். அப்படிப் போயிருந்தப்போ கண்ணாயிரத்தையும் வைச்சுக்கிட்டே அவரையும் ஜமீன்தாரையும் பத்தி இந்தக் குமரப்பன் ஏதோ குத்தலாகப் பேசினானாம். அந்தப் பகையை மனத்திலே வைத்திருந்து 'குத்துவிளக்கை' விலைக்கு வாங்கினதும் முதல் வேலையா அவனோட வேலைக்குச் சீட்டுக் கிழிச்சிருக்காங்க....." என்று தந்தை கூறியவற்றையெல்லாம் பொறுமையாகக் கேட்டுக்கொண்டிருந்த சத்தியமூர்த்தி இறுதியாக அவர் சொல்லிய செய்தியால் பொறுமை இழந்தான்.

"ஜமீன்தாரிடம் மன்னிப்புக் கேட்க வேண்டுமென்று நீங்கள் சொல்வதை எப்படி ஒப்புக்கொள்ள முடியாதோ அப்படியே குமரப்பனைப் பற்றி நீங்கள் சொல்கிற பொய்யையும் என்னால் ஒப்புக்கொள்ள முடியவில்லை அப்பா! குமரப்பன் உண்மையும் ஒழுக்கமும் இல்லாதவர்கள் எவ்வளவு பெரிய பணம் பதவி உள்ளவர்களாக இருந்தாலும் அவர்களைத் துச்சமாக நினைக்கிறவன். அவனுடைய பார்வையிலும் நினைப்பிலும் கண்ணாயிரமும் ஜமீன்தாரும் வெறும் நாய்கள்!.... 'காதுக்கு உத






வாத செருப்பைக் கழற்றி எறி' என்பதுபோல் குமரப்பனை குத்து விளக்கு வேலையைத் தனக்கு வேண்டாமென்று விட்டிருக்கிறான். ஜமீன்தாரும் கண்ணாயிரமும் அந்த உண்மையைத் திரித்துக் கூறிக் கொண்டிருக்கிறார்கள். நீங்களும் அதை அப்படியே நம்புவதைப் பார்த்துத்தான் பரிதாபமா யிருக்கிறது....''

சத்தியமூர்த்தி இப்படித் தன் தந்தையை எதிர்த்துப் பேசும் போது உணர்ச்சி வசப்பட்டுக் குமுறும் மனநிலையோடு இருந்தான். தந்தையும் அவனும் இப்படித் தனியே பிரிந்து வந்து வீட்டின் பின்கட்டில் விவாதித்துக் கொண்டிருந்த போது கூடத்து ஊஞ்சலில் குமரப்பன் தனியே உட்கார்ந்திருந்தான். கண்ணாயிரம் சிகரெட் பிடித்தவாறு குறுக்கும் நெடுக்கும் உலாவிக் கொண்டிருந்தார். தண்டபாணிக்



கார் விபத்துக்குப் பிறகு ஒருவர் தம் நண்பரைச் சந்தித்தார். அவருக்கு ஆறுதலளிக்கும் விதமாக, ''போனதை மறந்து இனி நடப்பதைப் பற்றிப் பேசு!'' என்றார்.

அடிபட்டவர்: நடப்பதா? இனி ஏது?

கூடத்தில் தனியே விட்டு விட்டு உள்ளே தந்தையிடம் அதிக நேரம் விவாதித்துக் கொண்டிருப்பதைச் சத்திய மூர்த்தி விரும்பவில்லை. அப்போது தந்தைக்கு அவன் கூறிய பதில் கண்டிப்பானதாயிருந்தது:

''ஜமீன்தாரிடம் அடிபணிவதோ, மன்னிப்புக் கேட்பதோ முடியாத காரியம். மனிதர்களுக்கும் அவர்களுடைய செல்வாக்குக்கும் பயப்பட்டு நடுங்கிய காலம் மலையேறி விட்டது. நியாயத்துக்கும் உண்மைக்குமே பயப்பட வேண்டிய புதிய சுதந்திரத் தலைமுறையில் நாம் வாழ்கிறோம். ஜமீன்தாரையும் கண்ணாயிரத்தையும் நீங்கள் பெரிய மனிதர்களாக நினைக்கிறீர்கள் அப்பா! நானும், குமரப்பனும், எங்களைப் போல் புதிய சிந்தனை வளத்தை ஒப்புக் கொள்கிற இளைஞர்களும் அவர்களைச் சமுதாய விரோதிகளாக நினைக்கிறோம்.''

''இப்படிப் பேசினால் உருப்படாமல்தான் போகப் போகிறாய்! எக்கேடும் கெட்டுப் போ.... ஆனால் ஒன்று.... மறுபடியும் எப்போதாவது அந்த நாட்டியக்காரியைத் தேடிக் கொண்டு போகாதே.... அவங்க பரம்பரை பரம்பரையா ஜமீன் குடும்பத்துக்குத்தான் பழக்கம்..... குடியிருக்கிற வீடு, வாசல் சொத்து சுகம் எல்லாம் ஜமீன்தார் செலவிலே அநுபவிக்கிறவங்க வேறே எப்படி இருக்க முடியும்? ஜமீன்தார் சின்ன வயசிலே தாரமிழந்தவரு...... அந்த இடத்திலே இந்தப் பெண்ணை வைத்துக் கொள்ளலாம் என்கிற அபிப்பிராயம் அவருக்கு இருக்கும் போலே தோன்றுகிறது. முத்தழகம்மா மகளும் மகா சௌந்தரியவதியா இருக்கா. அதனாலே ஜமீன்தார் முழு மனத்தையும் அவளிடம் பறி கொடுத்திருக்கார். அந்தப் பெண்ணை வைத்துச் சினிமாப்படம் கூடப் பிடிக்கப் போகிறாராம். அப்புறம் இன்னும் எங்கேயோ பெரிய 'நாட்டிய கலாகேந்திரம்னு' பரதநாட்டியத்தைப் பரப்பறதுக்கு ஒரு கலாசாலை வேறே வைக்கப் போகிறாராம். இதெல்லாம் உன்னை எச்சரித்து வைப்பதற்காகக் கண்ணாயிரம் எனக்குச் சொன்னார். பேரைக் கெடுத்துக் கொள்ளாதே! படித்தவனாக இலட்சணமாக விலகி இரு.... ஜமீன்தார் பகை நமக்கு வேண்டாம்....''

தந்தை இதைச் சொல்லி விட்டு அவன் பதிலை எதிர்பாராமல் கண்ணாயிரத்தோடு வெளியே புறப்பட்டுப் போய் விட்டார். அவர் போனதும் அம்மா அருகே வந்து, ''அப்பாவுக்கும் உனக்கும் என்னடா சண்டை?'' என்று தூண்டித் தூண்டிக் கேட்டாள். 'ஒன்றுமில்லை' என்று மறுப்பதுதான் முடிந்ததே ஒழிய அம்மாவுக்குத் தெளிவான பதில் எதுவும் சத்தியமூர்த்தியால் சொல்ல முடியவில்லை. அந்த வேளையில் ஊஞ்சல் பலகையில் உட்கார்ந்திருந்த குமரப்பன் வந்து, ''இந்தாடா, சத்தியம்! நீயும் உன் தந்தையும் உள்ளே பேசிக் கொண்டிருந்த போது தபால்காரன் இதைக் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போனான்'' என்று சொல்லி ஒரு கவரை நீட்டினான். கவரின்மேல் மல்லிகைப் பந்தல் கல்லூரி முத்திரை குத்தியிருந்தது. வார்டன் ஏதாவது அவசர வேலையாகப் பாலைக் காட்டுப்பக்கம் புறப்பட்டுப் போயிருப்பார். 'வார்டன் ஊரில் இல்லாதபோது உதவி வார்டனாகிய நீங்களும் வெளியூரில் போயிருப்பது நல்லதில்லை. உடனே புறப்பட்டு வாருங்கள்' என்று பிரின்ஸிபால் ஒரு குரல் அழுதிருப்பார் — அந்த அழுகைதான் இந்தக் கடிதமாயிருக்கும்' என்பதாக நினைத்துக் கொண்டே கடிதத்தைப் பிரித்தால் கடிதம் கல்லூரி அதிபர் பூபதியிடமிருந்து வந்திருந்தது. அவசர அவசரமாக எழுதியிருந்தார்.

'' அன்புக்குரிய சத்தியமூர்த்திக்கு, இன்று காலை எட்டு மணிக்கு உங்களைப் பார்க்க வேண்டுமென்று தேடி ஆள் அனுப்பினேன். நீங்கள் அதிகாலையிலேயே முதல் பஸ்ஸில் அவசரமாக மதுரைக்குப் போயிருப்பதாகத் தெரிந்தது. காலை ஒன்பதரை மணிக்கு இங்கிருந்து புறப்படுகிற மெயில் பஸ்ஸில் இந்தக் கடிதத்தை உங்களுக்கு அனுப்புகிறேன். இன்று மாலைக்குள் இந்தக் கடிதம் உங்கள் கைக்குக் கிடைத்து விடும் என்ற நம்பிக்கையில் இதை இவ்வளவு

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிட்.
மதராஸ்-17

---

# சிறந்த தரத்துடன் சிக்கனமும்

## குடும்பத்தினர் அனைவருக்கும் கிடைக்கிறது



எத்தனை சிக்கனமானது! எத்தனை புத்துணர்ச்சி தருவது! இந்தப் பெரிய சைஸ் டாக்கில் டப்பாவுக்கு பெயர் பெற்ற கால்கேட்டின் சிறிய நாசி இட்டிருக்கிறது.



எத்தனை நறுமணமுடையது! எத்தனை நீடித்திருப்பது! ஸ்நானத்திற்கு பின்- வெளியே செல்லுமுன்- தாராளமாக உங்கள் உடலில் தூவிக்கொண்டு நளினமாய் விளங்குங்கள்.



எத்தனை சேர்த்தியானது! எத்தனை மிருதுவானது! கால்கேட் ஆல்-பர்ப்பஸ் டால்க்கை குழந்தை விரும்புகிறது. இளஞ்சருமத்திற்கு அது மிகவும் ஏற்றது.




# கால்கேட்

## ஆல்-பர்ப்பஸ் டால்க்

அபூர்வ மலர்களின் நீடித்திருக்கும் நறுமணங்கொண்டது

அவசரமாக எழுதுகிறேன். நானும் என் மகள் பாரதியும் இன்று பகலில் இங்கிருந்து கார் மூலம் மதுரைக்குப் புறப்படுகிறோம். இன்று காலை இவ்வளவு அவசரமாகப் புறப்பட்டுச் செல்லாமல் புறப்படுவதற்கு முன் நீங்கள் என்னைச் சந்தித்திருந்தால் உங்களையும் என்னோடு காரில் வரச் சொல்லி வற்புறுத்தியிருப்பேன். இந்தக் கடிதத்தில் மிகவும் மகிழ்ச்சிகரமான செய்தி ஒன்றை உங்களுக்குத் தெரிவிக்கப் போகிறேன். பல விதங்களில் நவபாரதத்துக்குத் தொண்டு செய்யும் தொண்டர்களையும், பிரமுகர்களையும் கௌரவித்துப் பாரதக் குடியரசுத் தலைவர் விருதுகள் வழங்குகிறாரல்லவா? இந்த ஆண்டு வழங்கப் போகிற விருதுகளில் தென்னிந்தியாவிலேயே சிறந்த கலைக் கல்லூரியைச் சிறந்த சூழ்நிலையில் மிகச் சிறந்த விடுதி வசதிகளுடன் நடத்தி வருகிற எனக்கும் ஒரு கௌரவம் கிடைக்கப் போகிறது.

உங்களுடைய கல்லூரி அதிபர் அடுத்த வாரம் விஜயதசமி நாளிலிருந்து 'பத்மஸ்ரீ'யாகி விடுவார். இந்தச் செய்தியை அதிகார பூர்வமாக அறிவிக்கும் தந்தி நேற்றிரவுதான் டில்லியிலிருந்து எனக்குக் கிடைத்தது. இன்று மாலையோ அல்லது நாளைக் காலையோ செய்தித் தாள்களிலும் இச்செய்தி வெளி வந்து விடும். நானும் என் மகள் பாரதியும் இன்று பகல் இங்கிருந்து காரில் புறப்பட்டு இன்று மாலை அல்லது இரவு மதுரைக்கு வந்து விடுவோம். நாளை மாலை மதுரையிலிருந்து விமானம் மூலம் சென்னை சென்று அங்கிருந்து இரவு விமானத்தில் உடனே டில்லிக்குப் புறப்படலாம் என்று திட்டம் போட்டிருக்கிறேன். மதுரைக்கு வருகிற வழியில் நிலக்கோட்டையிலும், சோழவந்தானிலும் சில வியாபார நண்பர்களைச் சந்தித்துப் பேசிவிட்டு வரவேண்டியிருப்பதனால் நான் எந்த நேரத்தில் சரியாக மதுரைக்கு வந்து சேருவேன் என்பதை உறுதியாகச் சொல்ல முடியவில்லை. ஆனாலும் நான் மதுரையில் தங்குகிற பிரமுகருடைய பங்களாவின் விலாசத்தைக் கீழே குறிப்பிட்டிருக்கிறேன். இன்றிரவு ஏழு மணி சுமாருக்கு உங்களை அங்கே எதிர்பார்க்கிறேன். அல்லது நாளைக்குக் காலையிலாவது கட்டாயம் வந்து சந்தியுங்கள். எப்படியும் நான் டில்லிக்குப் புறப்படுமுன் உங்களை அவசியம் பார்த்துப் பேசியாக வேண்டும்...'' என்று ஆங்கிலத்தில் சுருக்கமாக எழுதப்பட்டிருந்த அந்தக் கடிதத்தின் இறுதிப் பகுதியில் அது முழுவதும் காரியக் கடிதம் இல்லை — என்பதை நிரூபிப்பது போலச் 'சத்தியமூர்த்தியும் அவன் பெற்றோர்களும் சுகமாயிருப்பார்கள் என்று தாம் நம்புவதாக' ஒரு வரி சேர்த்திருந்தார் பூபதி. காலாண்டு விடுமுறைத் தொடக்கத்தில் சத்தியமூர்த்தி மாணவர்களை அழைத்துச்சென்றிருந்த 'சோஷல் சர்வீஸ் காம்ப்' நன்றாயிருந்ததாகத் தாம் கேள்விப்பட்டதாகவும், எந்தக் கிராமத்தில் மாணவர்களால் சாலை செப்பனிடப்பட்டதோ அந்தக் கிராமத்து மக்களும், பஞ்சாயத்துத் தலைவரும் அதற்கு நன்றி தெரிவித்துக் கல்லூரி நிர்வாகத்தினருக்கு எழுதியிருப்பதாகவும் — குறிப்பிட்டு அவனைப் பாராட்டியும் ஒரு வாக்கியத்தை எழுதி அந்தக் கடிதத்தை முடித்திருந்தார் அவர் - கீழே மதுரையில் அவர் வந்து தங்கப் போகிற பங்களாவின் விலாசமும் தெளிவாகக் கொடுக்கப்பட்டிருந்தது.

''என்ன சங்கதி? நீ ஊருக்குப் புறப்பட்டு வந்ததைப் பற்றிப் பிரின்ஸிபால்




ஏதாவது தகராறு செய்கிறாரா?'' என்று கடிதத்தைப் படித்து முடித்த சத்தியமூர்த்தியை நோக்கிக் கேட்டான் குமரப்பன்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை! கல்லூரி அதிபர் பூபதிக்குப் 'பத்மஸ்ரீ' விருது கிடைத்திருக்கிறதாம். விஜயதசமியன்று டில்லியில் குடியரசுத் தலைவர் விருதுகளை வழங்குகிறாராம். டில்லிக்குப் போக விமானம் ஏறுவதற்காகப் பூபதி இன்று இங்கே வருகிறார். அவரைச் சந்திக்கச்சொல்லிக் கடிதம் எழுதியிருக்கிறார்'' என்றான் சத்தியமூர்த்தி. அவனும் குமரப்பனும் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும்போதே வீட்டு வாசலில் சங்கிதவிநாயகர் கோவில் தெருப் பையனின் தலை தெரிந்தது. சத்தியமூர்த்தி வாசற்பக்கம் சென்று பையனை எதிர் கொண்டான்.

''மோகினி அக்கா சொல்லியபடி மீனாட்சி கோவிலிலே அர்ச்சனை செய்



''ஐயய்யோ! இட்டிலியிலே குண்டூசி இருந்தாப்பலே இருக்கு; விழுங்கிவிட்டேனே!''

''அதைத்தான் ஐயா தேடிண்டிருக்கேன். எங்கே இருக்குன்னு? எக்ஸ்ரே எடுத்துப் பார்த்து, ஆபரேஷன் பண்ணிண்டு, எடுத்துக் கொடுத்துடறேளா?''

தாச்சு. நவராத்திரிக் கூட்டம் கோவிலே நிலைகொள்ள வில்லை. உள்ளே போய் அர்ச்சனை முடிஞ்சு வெளியில் வர நேரமாயிடிச்சு. நீங்க சாயங்காலம் ஆஸ்பத்திரிக்குப் போகப் போறதாகச் சொல்லியிருந்தீங்களே........ போனு அக்காவிடம் இந்த அர்ச்சனைப் பிரசாதத்தைக் கொடுத்திடுங்க....'' என்று அர்ச்சனை செய்து வாங்கிய குங்குமப் பொட்டலத்தையும், இலையில் சுற்றிக் கட்டியிருந்த பூவையும் சத்தியமூர்த்தியிடம் கொடுப்பதற்கு வந்தான் பையன். அப்போது சத்தியமூர்த்தி அவற்றைப் பெற்றுக் கொள்ளத் தயங்கினான்.

''அவசரமாக ஊரிலிருந்து வருவதாக எனக்குத் தெரிந்தவர் ஒருவர் கடிதம் எழுதியிருக்கிறார் தம்பி! நாளைக்கு மாலை விமானத்தில் அவர் டில்லி போய் விடுவார். அதனால் நான் இன்றிரவே அவரைப் பார்த்துப் பேசியாக வேண்டும். இந்த விவரத்தை அக்காவிடம் சொல்லி நீயே எனக்காக ஆஸ்பத்திரிக்குப் போய்ப் பிரசாதத்தைக் கொடுத்துவிட்டு வந்துவிடு'' என்று சத்தியமூர்த்தி கூறியதும் பையன் மறுக்காமல் அப்படியே செய்ய ஒப்புக் கொண்டான்.

''ஆஸ்பத்திரியில் பார்வை நேரம் முடிவதற்குள் சீக்கிரம் போக வேண்டும். தாமதமின்றிப் பக்கத்துப் பஸ் ஸ்டாப்பில் போய்ப் பஸ் ஏறிப் புறப்படு. முடிந்தால் மறுபடியும் நான் நாளைக் காலையில் வந்து பார்ப்பதாக உன் மோகினி அக்காவிடம் சொல்!'' என்று கூறிப் பையனை அனுப்பியபின் பூபதியைப் பார்க்கச் செல்லலாமென்பதாக நண்பன் குமரப்பனிடம் தெரிவித்தான் சத்தியமூர்த்தி.

''நீமட்டும் போய் வா சத்தியம்! உன்னுடைய கல்லூரி அதிபரை நீ பார்க்கச் செல்லும்போது நான் கூட வர வேண்டாம். இன்னொரு சேதி. இன்று இரவு இரயிலில் புறப்பட்டு மல்லிகைப்பந்தல் ரோடு வரை போய்த் தங்கிவிட்டு நாளைக் காலை முதல் பஸ்ஸிற்கு நான் மலை மேல் போகப் போகிறேன். உனக்கு இன்னும் நாலைந்து நாட்கள் லீவு இருப்பதால் நீ இஷ்டம் போல் புறப்பட்டு வரலாம். என் பெயரில் ஒரு கடையை வேறு அங்கே திறந்து வைத்துவிட்டு நான் இங்கே வந்து இப்படி எத்தனை நாள் உட்கார்ந்திருப்பது?'' என்று அன்று மாலையேதான் மல்லிகைப்பந்தலுக்குத் திரும்பத் திட்டமிட்டிருப்பதைத் தெரிவித்தான் குமரப்பன். நண்பன் கூறிய காரணம் சரியாக இருந்ததனால் சத்தியமூர்த்தி அவனைத் தன்னோடு தடுத்து நிறுத்திக்கொள்ள விரும்பவில்லை. ஏழரை மணிக்கு நண்பன் இரயிலேற வேண்டும். இரயில் நிலையம்வரை உடன் சென்று நண்பனை இரயிலேற்றி அனுப்பிவிட்டு அப்புறம் பூபதியை அவர் கொடுத்திருந்த விலாசத்தில் போய்ப் பார்க்கலாம் என்று எண்ணினான் சத்தியமூர்த்தி. முகம் கழுவி உடை மாற்றிக்கொண்டு நண்பன் குமரப்பனோடு அவன் புறப்படுவதற்குச் சிறிது நேரமாயிற்று. நடந்தே இரயில் நிலையத்திற்குச் சென்றார்கள் நண்பர்கள். டிக்கட் வாங்கிக்கொண்டு நிலையத்திற்குள் சென்ற பிறகும் இரயில் வந்து புறப்படுவதற்கு இன்னும் அரை மணி நேரத்துக்கு மேல் மீதமிருந்தது. பிளாட்பாரத்தின் கூட்டமில்லாத பகுதிக்குச் சென்று நண்பர்கள் இரயில் வருகிறவரை பேசிக் கொண்டிருந்தார்கள். தந்தைக்கும் தனக்கும் இடையே நடந்த சண்டையான விவாதங்களைப் பற்றி நண்பனிடம் சொல்லத் தொடங்கினான் சத்தியமூர்த்தி:—

''கண்ணாயிரமும், ஜமீன்தாரும் அப்பாவை நன்றாக முடுக்கி விட்டிருக்கிறார்கள். என்னிடம் வந்து சீறுகிறார். மோகினியைப் போன்றவர்களுடைய

வீடு, வாசல், உணவு, உடையெல்லாம் ஜமீன்தார் அவர்களுக்காக அளித்துக் கிடைக்கும் உதவிகளாம். அவளுடைய அழகும் கலைத் திறனும் ஜமீன் தாருக்கு உரியவைகளாம். அவளைப் பார்க்கப் போவதோ அவள் மேல் அனுதாபப் படுவதோ ஜமீன்தாரின் கோபத்தைக் கிளர்ந்தெழச் செய்யுமாம். 'அவளை மறந்துவிடு! வீணாக ஜமீன்தாரின் கோபத்துக்கு ஆளாகிச் சீரழியாதே!' என்று அப்பா என்னை எச்சரிக்கிறார். நானோ என் இதயத்தில் இருந்து ஒருகாலும் பிரிக்கவும், விலக்கவும் முடியாத பாசத்தை அவள்மேல் வைத்து விட்டேன். 'ஐ கேன் டை வித் ஹெர்-பட் நாட் லிவ் வித்அவுட் ஹெர்' (நான் அவளோடு சாகவும் முடியும் — ஆனால் அவளின்றி வாழ்வது முடியாத காரியம்) என்று ஜான் டிரைடன் பாடியிருக்கிறானே அப்படி இருக்கிறேன் நான். அவளுடைய தவிப்பும் வேதனையுமோ என்னைவிட அதிகம். ஜமீன்தார் சின்ன வயதில் தாரமிழந்தவராம். மோகினியை அந்த இடத்தில் வைத்து அவளுடைய அழகுக்கும் கலைத்திறனுக்கும் சொந்தம் கொண்டாட ஆசைப்படுகிறாராம்.''

சிறிது நேரம் ஒரு பதிலும் சொல்லாமல் சத்தியமூர்த்தி கூறியதை மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த குமரப்பன் நீண்ட பெருமூச்சு விட்டுப் பின் பேசலானான்.

''உன் நிலைமை புரிகிறது சத்தியம்! முழுவதும் புரிய வில்லையானாலும் உங்கள் வீட்டு ஊஞ்சல் பலகையில் நான் உட்கார்ந்திருக்கும் போதே ஏதோ பெரும் புயல் வீசிக் கொண்டிருக்கிறது என்று ஜாடை மாடையாகப் புரிந்தது. உன்னைக் கூட அங்கேயே இதைப் பற்றி நான் நடுவில் ஒரு முறை கேட்டேன். நீ ஏதோ சிந்தனையில் என் கேள்வியையே கவனிக்காமல் இருந்து விட்டாய். இரண்டு மூன்று நாட்களாக நான் ஓர் ஆச்சரியகரமான விஷயத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறேன். உன்னுடைய அழகு ஒளிரும் சிவந்த முகம் இந்தச் சில நாட்களாகக் கவலைகளால் வாடியிருக்கிறதடா சத்தியம். உன்னுடைய தாமரைப் பூப் போன்ற பாதங்கள் தூசி படிந்து பொலிவின்றித் தோன்றுகின்றன. உன் கண்களில் இடைவிடாத சிந்தனை தேங்கியிருக்கிறது. உலகத்துக்காகக் கவலைப் படும்போது ஒளி நிறைந்து தோன்றும் அதே மேதைகளின் முகம் தங்கள் சொந்தக் கவலைகளின்போது தானே வாடி



''நீ வேலை செய்யற வீட்டிலே முதல்லே நீதான் பேப்பர் படிக்கிறியாமே?''

''ஆமாம்! புதுப்புது ரகப் புடவை விளம்பரத்தையெல்லாம் பார்த்து எசமானியம்மாகிட்டே சொல்லிடுவேன், எங்கே விக்குதுன்னு.''

விடுகிற விந்தையை நினைத்தேன். உன்னுடைய படிப்பினாலோ, சிந்தனைகளினாலோ, நவீன இலட்சியங்களினாலோ நிச்சயமாக நீ ஓர் இளம் மேதை என்பது என் நம்பிக்கை. இந்த நம்பிக்கையை இன்று வரை நான் உன்னிடம் கூடச் சொல்லாமல் என் இதயத்தில் பரம இரகசியமாக ஒப்புக் கொண்டு பொதிந்து வைத்திருக்கிறேன். ஆனால் சில சமயங்களில் எனக்கு உன்னைப் பார்த்துப் பரிதாபமாயிருக்கிறது. நீயே உனக்கு ஒரு விலங்கைப் பூட்டிக் கொண்டு அழகு பார்க்க முயல்கிறாயோ என்றுகூடப் பயமாயிருக்கிறது. உனக்காக நான் கவலைப்படுகிறேன். சமூகப் பிரச்னைகளின் மேல் அன்பும், அனுதாபமும் கொண்டு கொதித்துக் குமுறிப் பேசிக் கொண்டிருந்த பழைய சத்தியத்தின் முகத்தை நினைத்து விட்டு இப்போது உன்னைப் பார்த்தால் உன் முகத்தில் ஏதோ ஒன்று குறைகிறதடா சத்தியம்! உண்மையான அன்பு—அதாவது காதல் கூட—பல சமயங்களில் மனிதன் தனக்குப் பூட்டிக் கொள்ளும் விலை மதிப்பற்ற விலங்காகத்தான் இருக்கிறது. உண்மையான அன்புதான் 'கயமை'

லைலாவுக்காகப் பைத்தியம் பிடித்து அலைய வைத்தது. தேவதாஸைப் 'பாரு'வுக்காக இரத்தம் கக்கிச் சாக வைத்தது. அம்பிகாபதியைக் கழுவேற்றியது. இராமனை இலங்கை வரை படையெடுத்துச் சென்று அலைய வைத்தது. சீதையைத் தூக்கிச் சென்றது போல் குடிசையைப் பெயர்த்துத் தூக்கிக் கொண்டு போகிறவர்கள்தான் இராமாயணக் காலத்தில் இராவணர்கள். ஆனால் இந்தக் காலத்திலோ உன்னுடைய மனத்திலிருந்து மோகினியைப் பிரித்தெடுத்துக் கொண்டு போக முயல்கிற மஞ்சள்பட்டி ஜமீன்தாரைப் போன்ற நாகரிக இராவணர்கள் சமூகத்தில் நிறைய இருக்கிறார்கள். உன்னையும், மோகினியையும் நீங்கள் இருவரும் அன்பு செலுத்துவதையும் நான் மிக அதிகமாக மதிக்கிறேன் சத்தியம்! ஆனால் உனக்கு முன்பாக வந்து நிற்கும் பிரச்னைகளையும், எதிர்ப்புக்களையும் பார்க்கும்போது என் உயிர் நண்பனாகிய நீ இன்னும் முகத்தில் ஒளியிழந்து, கண்களில் சிந்தனை தேங்கிக் கால்கள் நடை சோர்ந்து வாழ்க்கை வீதியில் அலைய நேரிடுமே என்றுதான் பரிதாபமாக இருக்கிறது.....''

குமரப்பன் மேலே பேசுவதற்குள் இரயில் வந்து நின்றுவிட்டதற்கான பரபரப்பும், ஒலிபெருக்கி அறிவிப்பும் கேட்டன. அவன் விரைந்து நடந்தான். சத்தியமூர்த்தியும் பின்தொடர்ந்தான். இரயிலில் இடம் பிடித்து ஏறிக் கொண்டான் குமரப்பன். இரயில் புறப்படு முன், ''உன்னுடைய நம்பிக்கைகளை நலியச் செய்வதற்காக இவ்வளவு நேரம் நான் பேசவில்லை. நீ நான் கூறியவற்றை எல்லாம் நிதானமாகச் சிந்தனை செய்ய வேண்டும்'' என்று குமரப்பன் சிரித்துக்கொண்டே சொல்லிவிட்டுப் போனான். நண்பன் இரயிலில் புறப்பட்டுப் போய் விட்டாலும் அவன் உண்டாக்கி விட்டுப் போன சிந்தனை கனக்கும் மனத்தோடு சத்தியமூர்த்தி இரயில் நிலையத்துக்கு வெளியே வந்தான். மணி ஏழரைக்கு மேலாகியிருந்தது. பூபதியைப் பார்ப்பதற்காக அவன் செல்ல வேண்டியிருந்த பங்களாவோ இரயில் நிலையத்து மேற்பாலத்தைக் கடந்து அரசரடிக்கும் அப்பால் கோச்சடைப் பகுதியில் இருந்தது. நடந்து சென்றால் உரிய நேரத்தில் போக முடியாது என்று தோன்றவே ஒரு சைக்கிள் ரிக்ஷாவை வாடகைக்குப் பேசிக் கொண்டு புறப்பட்டான் சத்தியமூர்த்தி. அரை மணி நேரப் பயணத்துக்குப் பின் மாபெரும் தோட்டத்தோடு கூடிய அந்தச் சலவைக் கல் மாளிகை வாசலில் போய் இறங்கிய போது அந்த இடத்தில் வந்து இறங்குவதற்கே சைக்கிள் ரிக்ஷாவைப் போன்ற ஒரு சாதாரண வாகனம் தகுதியற்றது போல் தோன்றியது. ரிக்ஷாக்காரனுக்குப் பணத்தைக் கொடுத்துவிட்டுக் கீழிறங்கியபோது, 'வெறும் ரிக்ஷாவில் வந்து 'கேட்'டுக்கு வெளியே இறங்குகிற பஞ்சைகளைப் பற்றி எனக்கென்ன கவலை?' என்று அலட்சியமாயிருப்பது போல் நின்ற கூர்க்காவைக் கவனித்தான் சத்தியமூர்த்தி. கூர்க்காவின் கவனத்தைத் தன் பக்கம் திருப்பி விசாரித்து முடிக்கவே மிகவும் சிரமப்பட்டான் அவன். கூர்க்கா சத்தியமூர்த்தியை உள்ளே அழைத்துக் கொண்டு போய் மாளிகையின் முன்புறம் 'ரிஸப்ஷன்' என்று எழுதப்பட்டிருந்த பகுதியில் அதற்காக அமர்த்தப்பட்டிருந்த ஓர் இளம் சட்டைக்காரப் பெண்மணியின் முன்னால் நிறுத்தினான். விளக்கு வெளிச்சத்தில் தேவலோகமாகத் தெரிந்தது அந்த மாளிகை. புல் வெளியிலும், தோட்டத்திலும்கூட இருளுக்கு இடமே இல்லாதபடி மின்சார விளக்கொளி வெள்ளமாகப் பரவ ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. முன்புறம் சிறிதும், பெரிதுமாகப் பல கார்கள் நின்றன. அங்கு செய்யப்பட்டிருந்த ஆடம்பரச் செலவைப் பார்க்கும்போது, ''ஏழைகள் புதிது புதிதாகக் கவலைப்பட்டுச் செலவுக்குப்பணம் தேடுகிறார்கள். பணக்காரர்களோ புதிது புதிதாக யோசித்துப் பணத்துக்குச் செலவு தேடுகிறார்கள்'' என்று குமரப்பன் அடிக்கடி சொல்கிற வாக்கியம் நினைவுக்கு வந்தது. ''ஹூம் டு யூ வாண்ட் டு ஸீ'' (நீங்கள் யாரைப் பார்க்க வேண்டும்?) என்று கடுகடுப்பாகக் கேட்டாள் அந்த ஆங்கிலோ இந்தியப் பெண்மணி. — சத்தியமூர்த்தி பூபதியின் கடிதத்தை எடுத்து நீட்டினான். அதை வாங்கிப் பார்த்து விட்டு அவனை உள்ளே அழைத்துச் சென்றாள் அவள். ஒரு சமயம் அரண்மனையைப் போல் தோன்றிய அந்த மாளிகையே இன்னொரு சமயம் ஒரு பெரிய 'நைட் கிளப்' போலவும் 'ஹோட்டல்' போலவும் தோன்றிச் சத்தியமூர்த்தியை மருட்டியது. உட்புறம் போய் ஹாலில் பார்த்த போதுதான் அவன் சிறிதும் விரும்பாத அல்லது எதிர் பாராத ஓர் உண்மை திடீரென்று புரிந்தது. ஹாலில் மஞ்சள்பட்டி ஜமீன்தாரும், கண்ணாயிரமும் பூபதியோடு சீட்டாடிக் கொண்டிருந்தார்கள். அடுத்த ஹாலில் பாரதியின் தலை தெரிந்தது. மதுரையில் உள்ள மஞ்சள்பட்டியாரின் பங்களா அதுதான் என்பதும், அங்கேதான் பூபதி வந்து தங்கியிருக்கிறார் என்பதும் மிகக் கசப்பான உண்மைகளாக அந்தக் கணத்தில் அவனுக்குத் தெரிய வந்தன. (தொடரும்)

# சிந்திக்கும் பாடப்புத்தகங்கள்

**தூமிலன்**

சென்னையில் இப்போது பாடப் புத்தகங்களின் காட்சி ஒன்றுகூட நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. ஆனால் அவை அமெரிக்க நாட்டுப் புத்தகங்கள். யூ. எஸ். ஐ. எஸ். அமெரிக்க வாசகசாலையிலுள்ள இந்தக் காட்சியை இந்தியாவில் அமெரிக்க ராஜ தூதராயிருக்கும் ஸ்ரீ செஸ்டர் பௌல்ஸ் அவர்கள் இந்த மாதம் பதினோராம் தேதி யன்று திறந்து வைத்தார்கள்.

“ஒரு நல்ல கதை இருக்கிறது: ஒரு நல்ல கவிதை இருக்கிறது. அவற்றைப் பையன்கள் படித்து அனுபவித்துவிட்டால் என்ன செய்கிறது? ஆபத்து வந்து விடுமே? அப்படி நேராதிருக்க ஒரு வழி கண்டுபிடித்திருக்கிறார்கள். அவற்றைப் பாட புத்தகத்தில் போட்டு விட வேண்டியதுதான்!” என்று ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் சொல்வதுண்டு.

அதென்னவோ பாட புத்தகமென்றால் மிகக் கெட்டிக்காரப் பையன்கூட மிரண்டு விடுகிறான். அந்த வார்த்தையே பல மாணவர்களைப் படிப்பில் உற்சாகம் இழக்கச் செய்து விடுகிறது.

‘விளக்கெண்ணெய் குடிக்கிறது போல முகத்தை வைத்துக் கொண்டிருக்கிறாய் என்று கூறுவதற்குப் பதிலாகப் பாட புத்தகம் படிக்கப் போவது போல முகத்தை வைத்துக் கொண்டிருக்கிறாயே’ என்று கூறுவதும் பொருத்தமாக இருக்கும்.

நமது பள்ளிக்கூடங்களில் வைக்கப்பட்டிருக்கும் பாடப் புத்தகங்களெல்லாம் பெரும்பாலும் “டெக்ஸ்புக் கமிட்டியாரால் அங்கீகரிக்கப்பட்டது” என்ற முத்திரை உள்ளவை. ஆனால், புத்தகத்தில் உள்ள விஷயங்களையும் அவை எழுதப்பட்டிருக்கும் விதத்தையும் ஆராய்ச்சி செய்து பார்த்தால் அந்த டெக்ஸ்ட் புக் கமிட்டியார் அங்கீகரித்தது புத்தகத்தையா அல்லது அதன் பிரசுரகர்த்தர்கள் போட்ட பெரிய கும்பிடையா, அல்லது வேறு எதையாவதா என்று எண்ணிப் பார்க்கத் தோன்றும்.

சில வருடங்கள் முன்னால் ஓர் அம்மணி ‘பாடப் புத்தகம் எப்படி எழுதக் கூடாது?’ என்பதற்கு உதாரணமாக விளங்கிய ஒரு பாடப் புத்தகம் எழுதினார். அது விஷயம் ஹைகோர்ட்வரை வந்து சந்தி சிரித்தது.

பாடப் புத்தகம் அச்சிட்டிருப்பதைப் பற்றி என்னத்தைச் சொல்ல? இப்போது மிக நன்றாக அச்சடிக்கப்படும் பத்திரிகைகள், புத்தகங்களுக்கு ராஷ்டிரபதி பரிசு என்று வழங்குகிறார்கள். இதே போல் மிக மட்டமாகத் தயாரிக்கப்படும் பாடப் புத்தகத்துக்குப் பரிசு கொடுக்க ஏற்பாடு செய்தால் பெரும்பாலான பாடப் புத்தகங்கள் அதைப் பெற அருகதையுள்ளவையா யிருக்கும்.

பாடப்புத்தகம் என்ற மாத்திரத்தில் நமக்கு அதன் இத்தகைய எல்லா அருமை பெருமைகளுமே ஞாபகத்துக்கு வருகின்றன.

இந்தக் காட்சியைப் பார்க்கச் சென்ற போது முதலில் பெரிய ஏமாற்றமடைய வேண்டியிருந்தது. பாட புத்தகங்கள் என்று நாம் கருதுபவை ஒன்றுமே கண்ணில் படவில்லை.

புத்தகங்களைப் புரட்டி இரண்டாவது பக்கத்தைக் கவனித்தால் அங்கே ‘டெக்ஸ்ட் புக் கமிட்டியாரால் அங்கீகரிக்கப்பட்டது’ என்பது போன்ற முத்திரை வாசகம் கண்ணில் படவில்லை. ‘டபிள் கிரௌன் 24 பவுண்டு வெள்ளைக் காகிதத்தில் அச்சிடப்பட்டது’ என்ற வழக்கமான உறுதிமொழியையும் காணோம்.

அச்சடிப்போ! அது ஒரு பக்கத்தில் ஒரே கறுப்பாகவும், இன்னொரு பக்கத்தில் ஒரே மங்கலாகவும், மற்றொரு பக்கத்தில் பாதி கறுப்பாகவும், பாதி மங்கலாகவும் இப்படி விதம் விதமாக இல்லை. பெரியவர்கள், சிறுவர்கள் இவர்களின் உருவப் படங்கள் கிட்டத்தட்ட ஒரே பரிமாணமுள்ளவையாயும் ‘தைராயிட் கிளாண்ட்’ வியாதியினால் உடல் வளர்ச்சி பாதிக்கப்பட்டவர்களின் உருவங்களைப் போன்று மில்லை.

நாம் மிக மிகச் சிறந்த முறையில் வெளியான ‘தீபாவளி மலர்’ என்று கருதும் பத்திரிகை மலர்களைப் போல் பன்மடங்கு அழகான வண்ண மலர்கள்தாமிருந்தன. அவைதான் மாணவர்களுக்கான பாடப் புத்தகங்கள் என்ற எண்ணம் மனத்தில் பதியச் சிறிது நேரம் பிடித்தது.

குழந்தைகளுக்கான பாடப் புத்தகங்கள் பெரிய அளவில் இருக்கின்றன. ஒன்று முதல் பத்துவரை கற்றுக் கொள்வதற்கு மட்டும் ஒரு புத்தகம்; ஏ பி ஸி டி முதலிய எழுத்துக்களைப் பார்த்துத் தெரிந்து கொள்வதற்கு மட்டும் ஒரு புத்தகம். பிறகு அவற்றை எழுதுவதற்கு ஒரு தனிப் புத்தகம். இதே போன்று அறிவு வளர்ச்சி படிப்படியாக அதிகரிக்கும் முறையில் புத்தகங்கள் இருக்கின்றன. எலிமெண்டரி ஸ்கூல் மாணவர்களுக்கு விஞ்ஞானம், பாட்டு, கதை, சரித்திரம், பூகோளம், சுகாதாரம் முதலிய ஒவ்வொரு பாடத்துக்கும் தனித் தனிப் புத்தகம். புத்தகம் முழுதும் சாதாரணப் படங்களும், வர்ணப் படங்களும் நிறைந்திருக்கின்றன. படிக்காவிட்டாலும் தங்கள் கையில் அந்த அழகான புத்தகங்களை வைத்துக்கொண்டிருக்கவே சிறுவர்கள் ஆசைப்படுவார்கள். முதன் முதலில் அத்தகைய ஆசை தோன்ற

வேண்டும். பாடப் புத்தகம் என்றால் பயமோ வெறுப்போ தோன்றக் கூடாது என்பதற்காகவே புத்தகங்கள் தயாரிப்பதில் கவனம் செலுத்தியிருக்கிறார்கள்

பாடப் புத்தகம் என்று எதற்காக எழுதுவது?

'பாட புத்தகங்கள் என்பன அவற்றைப் பயன் படுத்துபவர்களுக்கென்று ஏற்பட்டவை. அவை ஏற்கனவே விஷயம் தெரியாதவர்களுக் கென்று ஏற்பட்டவை. புத்தகம் எழுதும்போது அவற்றை உபயோகிப்பவர்களைப் பற்றிக் கருத்தில் கொண்டே எழுத வேண்டும்'.



சென்னை அமெரிக்க நூல் நிலயத்தில் பாடப் புத்தகக் கண்காட்சியை அமெரிக்கத் தூதர் செஸ்டர் பௌல்ஸ் 11-9-63 தேதி தொடங்கிவைத்தார்.

இந்தக் கொள்கையினின்றும் சிறிதுகூட வழுவாமல் புத்தகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. ஏழு வயதுப் பையனுக்கு என்ன என்ன விஷயங்கள் தெரியும், எட்டு வயதுப் பையன்களுக்கு எது எளிதில் புரியும், ஒன்பது வயதுப் பையனுக்கு எப்படிச் சொல்லவேண்டும் என்பதைப் பற்றி சாஸ்திரீய முறையில் நன்கு ஆராய்ச்சி செய்து பார்த்து அந்த முடிவுகளுக்கேற்ப எழுதியிருக்கிறார்கள்.

'மாணவர்களுக்குப் பாடங்களில் சொல்லப்பட்டிருப்பது எளிதில் புரிபட வேண்டும். படிப்பது ஒரு தண்டனை போலிருக்கக்கூடாது. எல்லாம் கூடியவரை தற்கால வாழ்க்கைக் கொத்ததாய் இருக்க வேண்டும்.' - இவை போன்ற பல அம்சங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதியிருக்கிறார்கள்.

சரித்திரப் பாடம் படிக்கும் தமிழ் மாணவன் ஒருவன்,

'இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்னர் அசோக சக்கர...'
'இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்னர் அசோக சக்கர...'

என்று நெட்டுருப் பண்ண ஆரம்பிக்கிறான்.

'வர்த்தி என்பார் இந்தியாவின்கண் செங்கோ...'
'வர்த்தி என்பார் இந்தியாவின்கண் செங்கோ...'

என்று தொடர்ந்து கூறுகிறான்.

'லோச்சி வந்த காலே...'
'லோச்சி வந்த காலே...'

என்று பல்லவி பாடிக்கொண்டே போகிறான்.

அமெரிக்கப் பாடப் புத்தகங்களைப் படிக்கும் சிறுவர்கள் இப்படி நெட்டுருப் பண்ண வேண்டிய அவசியமே இல்லை. அப்படிச் செய்யவும் மாட்டார்கள். ஏனென்றால் பாடம் சிறுவனுக்கு எளிதில் புரியும்படியாகக் கதை மாதிரி எழுதப்பட்டிருக்கிறது.

தமிழ்க் கணக்குப் புத்தகம் ஒன்றில் 'மை(மயி)லாப்பூரிலிருந்து மாம்பலம் ஒரு தரம் செல்ல ஒரு பஸ் எடுத்துக்கொள்ளும் நேரம் 25 நிமிடம் எனில் 16 தரம் செல்ல எடுத்துக்கொள்ளும் நேரம் என்ன?' என்று ஒரு கணக்குப் போட்டிருக்கிறது.

இதில் முதலில் 'மயிலாப்பூர்' என்றிருக்க வேண்டும். இரண்டாவதாக 'எடுத்துக் கொள்ளும் நேரம்' என்பது **'It takes'** என்ற ஆங்கில வார்த்தைகளின் மொழிபெயர்ப்பு. மூன்றாவதாக '25 நிமிடம்' என்பது சரியா என்பது சந்தேகாஸ்பதமான விஷயம். நான்காவதாக, 'பஸ் 16 தரம் போகிறது என்றால் அது மாம்பலத்திலிருந்து திரும்பி வராமல் எப்படிப் போக முடியும்?' என்று சிறுவர்கள் யோசனை செய்து பார்ப்பார்கள். கதைக்குச் சில சமயம் கால் இல்லாமல் இருக்கலாம். பாடப் புத்தகக் கணக்காயிருந்தாலும் அதற்குக் கட்டாயம் கால்கள், கைகள் இருக்க வேண்டும்.

சிறுவர்கள் மனத்தில் எவ்வளவு குழப்ப முண்டாக்க முடியுமோ அவ்வளவு குழப்பத்தை உண்டாக்கும் முறையில் பையன் படிக்கும் புத்தகத்தில் தரப்பட்டிருக்கிறது. "அட பயலே! நீ புரிந்துகொண்டுவிடலா மென்று பார்க்கிறாயா?" என்று சவால் விடுவதுபோல் இருக்கிறதல்லவா?

அமெரிக்கப் பாடப் புத்தகத்தில் கொடுக்கப் பட்டிருக்கும் கணக்குகள் மிக மிக எளிய நடையில் எழுதப்பட்டிருக்கின்றன. அதே சமயத்தில் கணக்கிலில்லாத வேறு விஷயங்களையும் சிறுவர்கள் தெரிந்துகொள்கிறார்கள்:

## லாபம்தான் !

அந்த மனிதர் தம்மையும் அறியாமல் டைரக்டர் ஸெஸில் பி டிமில்லிக்கு ஒரு பாடம் கற்பித்து, அவரது கம்பெனி நொறுங்கிவிடாமல் காப்பாற்றியிருக்கிறார்.

அன்று டிமில்லி காமிராவினுள் பிலிம் சுருளை நுழைத்துக் கொண்டிருக்கும்போது அருகில் அந்த மனிதர் நின்று சிகெரெட் பிடித்துக்கொண்டிருந்தார். பிலிம் சுருளில் ஒரு சிறிது மடங்கிப் போய் விட்டது. மடிந்து போன பகுதியை டிமில் கிழித்துத் தூர எறிந்தார். அருகில் நின்ற அந்த மனிதர் அந்தப் பிலிம் சுருளை எடுத்துப் பொழுது போக்குவ தற்காகத் தம் எரியும் சிகெரெட் பாகத்தை அதன் மேல் வைத்தார். அடுத்த கணம் அந்தக் கிழிந்த பிலிம் துண்டு மறைந்து விட்டது; புகைச் சுருளாகப் போய் விட்டது. அதைக் கண்டதும் ஸெஸில் பி டிமில்லிக்கு, 'நமது வேலையனைத்தும் இப்படிப் புகையாகப் போய்விடுமோ? முதலீடு அனைத்தும் ஒரேயடியாகப் புகைந்து போய்விடுமோ' என்று கவலையாகப் போய் விட்டது. உடனே ஸெஸில் பி டிமில்லி, படத்தின் ஒவ்வொரு காட்சியையும் இரண்டு நெகடிவ்கள் எடுக்க வேண்டும் என்று உத்தரவு போட்டார்.

பிலிம் நெகடிவ்கள் இருட்டறையில் வைக்கப் பட்டிருந்தன. ஒரு நாள் காலையில் அங்கு சென்றிருந்த போது டிமில்லியின் கால் எதிலேயோ பட்டு உரசியது போல் சத்தம் எழுந்தது. குனிந்து பார்த்தார் டிமில்லி. அவை யனைத்தும் அவர் தயாரித்த படத்தின் பிலிம் சுருள்கள்தான் எனக் கண்டார். அவை காய்ப்பட்டுக் கசங்கி உரு மாறிப் போய்ச் சிதைந்து கிடந்தன. அதற்கு முன்பே டிமில்லியின் உத்தரவுப்படி இன்னொரு நெகடிவ் எடுத்து வைத்திருந்ததால் நல்லதாகப் போயிற்று. அவர் கம்பெனி பயந்த நஷ்டத்திலிருந்து தப்பியது !

"மோட்டார் வண்டிகளைச் சரியான வெளிச்சத்துடன் ஓட்டாததால் ஒரு வருஷத்தில் 460 விபத்துக்கள் ஏற்பட்டன. ஐந்து வருடத்துக்குப் பின்னர் 395 ஏற்பட்டன. விபத்துக்கள் எத்தனை விகிதம் குறைவு?"

"மாக்ஸுக்குப் பன்னிரண்டு வயதான போது அவன் எடை 70 பவுண்டு. ஒரு வருடங்கழித்து அவன் எடை 75 பவுண்டு. எடை எத்தனை விகிதம் உயர்ந்தது?"

முதல் கணக்கிலிருந்து மோட்டார் வண்டிகளின் விளக்கு வெளிச்சம் சரியில்லாததால் விபத்துக்கள் ஏற்படக் கூடும் என்று தெரிகிறது: இரண்டாவது கணக்கிலிருந்து பன்னிரண்டு வயதான ஒரு பையனது எடை சுமாராக 70 பவுண்டு இருக்கும் என்று மாணவன் அறிந்துகொள்கிறான்.

கணக்குகள் அநேகமாக இந்த முறையில் தான் அமைக்கப்பட்டிருக்கின்றன. சரித்திரம் விஞ்ஞானம், பூகோளம், கதை எந்தப் பாடமாயிருந்தாலும் சரி, அதிலுள்ள விஷயம் மாணவனுக்கு மிக எளிதில் புரிய வேண்டும்; அது கூடியவரை அவனது தினசரி வாழ்க்கையில் அடிபடும் விஷயங்களாக இருக்க வேண்டும் என்பதைப் பாடப் புத்தகாசிரியர்கள் தவறிப்போய்க்கூட மறந்து விடுவதில்லை. எந்த வயதுள்ள பையன்களுக்காகப் புத்தகங்கள் எழுதுகிறார்களோ, அந்த வயதுள்ள பையன்களின் நிலைமையில் அவர்கள் தங்களை வைத்துக் கொண்டு எழுதுகிறார்கள்.

சிறுவர்களுக்கான ஒவ்வொரு பாடப் புத்தகத்துக்கும் கூடவே உபாத்தியாயருக்கென்று ஒரு தனிப் பாடப் புத்தகமும் இருக்கிறது. பையனது பாடப்புத்தகம் 50 பக்கமிருந்தால் உபாத்தியாயருக்கான புத்தகத்தில் 150, 200 பக்கங்கள் இருக்கின்றன. உபாத்தியாயருக்கு எதற்காகப் புத்தகம்?

"ஓர் உபாத்தியாயர் எவ்வளவோ கெட்டிக்காரராயிருக்கக் கூடும். ஆனால் அவர் சொல்லிக் கொடுக்க வேண்டிய எல்லா விஷயங்களையும் நினைத்த மாத்திரத்தில் வரிசைக் கிரமமாக ஞாபகப்படுத்திக்கொண்டுவிட முடியாது. என்னென்ன கேள்விகள் கேட்க வேண்டும், என்னென்ன பாடப் பயிற்சிகள் அளிக்க வேண்டும் என்பதையும் நினைவிலிருத்திக் கொள்ள முடியாது. இந்தப் புத்தகத்திலிருந்து அத்தகைய விவரங்களை எளிதில் பார்த்துக் கொள்ளலாம்...." என்று உபாத்தியாயர்களுக்கான பாடப் புத்தகங்களின் முகவுரையில் கூறப்பட்டிருக்கிறது.

எலிமெண்டரி ஸ்கூல், ஸெகண்டரி ஸ்கூல் மாணவர்களும் உபாத்தியாயர்களும் உபயோகிக்கக்கூடிய ஆயிரத்துக்கு மேற்பட்ட புத்தகங்கள் இந்தக் காட்சியில் வைக்கப் பட்டிருக்கின்றன. இதை ஏற்பாடு செய்த பெருமை, அமெரிக்க வாசகசாலையை அறிவு வளர்ச்சிக்கான ஒரு கலாசாலையைப் போல் ஆக்க, ஏதாவது புதிது புதிதாகச் செய்துவரும் அமெரிக்க லைபரேரியன் மிஸ்ஸஸ் எவலின் மக்கேப் என்ற அம்மையாரையும் பிரதம லைப்ரேரியன் திரு ஆர். திருவேங்கடத்தையும் சேர்ந்தது.

இந்த மாதம் 30ந் தேதி வரை இருக்கும் இந்தப் பாடப் புத்தகக் காட்சியை எல்லா ஆசிரியர்களும் புத்தகப் பிரசுரகர்த்தர்களும் அவசியம் பார்த்தாக வேண்டும். அந்தப் புத்தகங்களைப் போன்று பாட புத்தகங்களை நாம் நமக்குள்ள வசதிகளைக் கொண்டு தற்சமயம் அச்சிடுவதற்கில்லை. அச்சுவடிப் புத்தகம் ஒன்றுக்கே ஏழெட்டு ரூபாய் பிடிக்கும்.

ஆனால் புத்தகங்களை எளிய நடையில் சிறுவர்களுக்குப் புரியும்படியாக எழுதும் ரகசியத்தைத் தெரிந்துகொள்ளவாவது முயற்சி செய்யலாமே?

## நவராத்திரி — தீபாவளி விசேஷ விற்பனை

உங்களுக்குத் தேவையான

பட்டுச் சேலைகள், பாவாடைகள், சோளிகள் முதலியன

வாங்க நம்பிக்கையான இடம்

# P. B. லக்ஷ்மண ஸா & பிரதர்ஸ்

( ஏர் - கண்டிஷண்ட் — ஷோ ரூம் )

பட்டு ஜவுளி உற்பத்தியாளர்கள், வியாபாரிகள்

| | |
|---|---|
| 109, ஐயா முதலித் தெரு<br>சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2<br>போன் : 86966 | 307, லக்கம்ஸி கப்பு ரோட்<br>( உடுப்பி போர்டிங் அடியில் )<br>மாதுங்கா (C. R.) பம்பாய்-19 |

தயாரிப்பு பிராஞ்சு : 16, மேட்டுத் தெரு, காஞ்சிபுரம்

---

# B·I



# S. S. ரஜுலா

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
|---|---|
| 1963 அக்டோபர் 15 | 1963 அக்டோபர் 16 |
| 1963 நவம்பர் 8 | 1963 நவம்பர் 9 |

கம்பெனியின் சென்னைக் காரியாலயத்தின் மூலம் விற்பனை செய்யக்கூடிய பர்த் வசதியற்ற மற்றும் பங்க் வசதியுள்ள மேற்கண்ட கப்பல் பிரயாணத்துக்குரிய டிக்கட்டுகள் எல்லாம் விற்பனை ஆகிவிட்டன. இருந்தாலும் இவ்வகுப்பு டிக்கட்டுகள் கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம் பெற்ற பாஸேஜ் புரோக்கர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

| C. M. குட்டி | AL. கரி செட்டியார் | கோனா டிராவல்ஸ் |
|---|---|---|
| 38, அங்கப்ப நாயக்கன் தெரு<br>சென்னை -1 | கந்தோலிக் சென்டர் பில்டிங்ஸ்<br>6, அரமனைக்காரத் தெரு<br>சென்னை -1 | மாஸ்கட் ஹோட்டல்<br>திருவனந்தபுரம் |

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா, நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விபரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும் :

| | |
|---|---|
| **பின்னி & கோ. (மதராஸ்) லிட்.**<br>7. அரமனைக்காரத் தெரு. சென்னை -1 | **மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.**<br>முதல் லைன் பீச் ரோடு. நாகப்பட்டினம் |

ஏஜெண்டுகள் : பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்

இத்தனை சுறுசுறுப்பாக
நான் என்றுமே
இருந்ததில்லை!

சக்திக்கும்
வலிமைக்கும்
போர்ன்-வீடா




# BOURN-VITA

தயாரிப்பாளர்கள் Cadbury's



# எம். யூ. ஸி. விழாப் பந்தயம்

சென்னை கோட்டை ஸ்டேஷனுக்கு எதிர்ப்புறம் உள்ளது மெட்ராஸ் யுனைடெட் கிளப் மைதானம். இந்த மைதானத்தில் எப்பொழுதும் கிரிக்கெட், ஹாக்கி விளையாட்டுக்கள்தான் நடைபெறுவது வழக்கம். திரு ஜே. கப்புசாமி, திரு ராமசாமி, ராவ் முயற்சியினால் கால் பந்தாட்டமும் இடம் பெற்றுப் பல போட்டிகளும் தொடர்ந்து நடைபெற்றுள்ளன.

எம். யூ. ஸி. கிளப் சரித்திரப் பிரசித்தி பெற்றது. இந்தக் கிளப் நடத்திய போட்டியில் கலந்துகொண்டு ஆடிய தஞ்சாவூர் கிட்டுவின் ஆட்டத் திறமையைக் கண்டு கிழக்கு வங்காளக் கோஷ்டியிலும் பிறகு ரஷ்யாவிலும், ஒலிம்பிக்கிலும் ஆடும் வாய்ப்புப் பெற்றார் என்றால் இந்தக் கிளப்புக்குப் பெருமைதானே? மற்றோர் ஆட்டக்காரர் சைமன் ஜாகர்த்தா, ஆசிய, ஒலிம்பிக் போட்டிகளில் கலந்து கொண்டவர். இந்தக் கிளப்பினர் நடத்திய போட்டிகளில் கலந்து கொண்டு பெருமேறியவர்தான். இரு ஒலிம்பிக் ஆட்டக்காரர்களைப் பெறக் காரணமாயிருந்த இந்தக் கிளப்பினரும், எம். யூ. ஸி. கால் பந்தாட்டக் காரியதரிசி செல்வராஜும் பாராட்டுக்குரியவர்கள்.

எம். யூ. ஸி. கால் பந்தாட்ட வெள்ளி விழாப் போட்டியில் பங்களூர், இலங்கை, சென்னையில் உள்ள பல கால் பந்தாட்டக் கழகங்களும் பங்குபற்றின. இறுதி நாளன்று பங்களூர் எம். ஈ. ஜி. கோஷ்டியினரும், சென்னை ரயில் பெட்டி கட்டும் தொழிற்சாலை குழுவினரும் ஆடி, ஆட்டத்துக்கு விறுவிறுப்பூட்டினர். இரண்டு கோஷ்டிகளுமே வெகு நன்றாக ஆடின. எம். ஈ. ஜி. கோஷ்டியில் ராமகிருஷ்ணனும், [illegible] எப்படியாவது ஐ. ஸி. எப். கோஷ்டி மீது 'கோல்' போட்டுவிட முயன்றனர். ஐ. ஸி. எப். கோலி ஜோதி அன்று பந்தைத் தடுத்தாட்கொண்டு வெற்றிக்கு வழி வகுத்தவர்களில் முதன்மையானவர். எத்தனை எத்தனையோ கஷ்டமாக அடிக்கப்பட்ட பந்தையெல்லாம் அவர் துள்ளிக் குதித்து அநாயாசமாக அள்ளிப் பிடித்த விதத்தை வியக்காதவர் இல்லை. இந்தத் தருணத்தில் ஐ. ஸி. எப். முன்னணி ஆட்டக்காரர்கள் பந்தோடு முன்னேறி, தாமஸ் கையில் பந்தைக் கொடுக்க வெற்றிக் 'கோல்' போட்டு அவர் பெயரைத் தட்டிக்கொண்டார். அவர்களது வெற்றியைக் குலைக்க எம். ஈ. ஜி. கோஷ்டியினர் கடைசிவரை போராடியது அனைவருக்கும் விருந்தாக அமைந்தது. ஐ. ஸி. எப். கோஷ்டியில் அடிபட்டு இரத்தம் பெருக்கெடுத்தோடிக்கொண்டிருக்கும் நிலையிலும் கட்டுக் கட்டி ஆடிய கணபதி அனைவரது அனுதாபத்தையும் பெற்றார்.

இந்த வெள்ளி விழா வைபவத்துக்குச் சென்னை கவர்னர் தலைமை வகித்தார். ஸ்ரீமதி விஷ்ணுராம் மேதி வெற்றி பெற்றவர்களுக்குக் கோப்பைகளை வழங்கினார். நடிகர் திலகம் சிவாஜி கணேசனும், டைரக்டர் பீம்சிங்கும் இறுதியாட்டத்தில் கலந்து கொண்டவர்களுக்கு மாலையிட்டதும், பெரிய வெள்ளிக் கோப்பை பரிசளித்ததும் நடிகர்களுக்கும் கால் பந்தாட்டத்தில் அக்கறை ஏற்பட்டிருக்கிறது என்பதை எடுத்துக் காட்டின. அன்று நடந்த கால் பந்தாட்டப் போட்டிக்கு ஸ்டேடியம் நிரம்பி வழிந்ததோடு, வைத்தியக் கல்லூரி மாடிகளிலும் மக்கள் திரளாக நின்று பார்த்தது ஆட்டம் உயர்ந்துவிட்டதைத் தெளிவாகக் காட்டியது.

எம். யூ. ஸி. கால் பந்தாட்ட வெள்ளி விழாக் கொண்டாட்டத்தை யொட்டி ஓர் அழகான மலரும் வெளியிட்டிருக்கிறார்கள். இம்மலரில் கால் பந்தாட்டத்தைப் பற்றிப் பல தகவல்களும், படங்களும் மனத்தைக் கவரும்படி அமைந்திருக்கின்றன.—குண்டுமணி

சம்பகத்தைச் சாரங்கன் மணம் செய்து கொண்டு முழுசாக இன்னும் மூன்று வருஷங்கள்கூட ஆகவில்லை. அவன் முழு விருப்பத்துடன் சம்பாவையே தேர்ந்தெடுத்து அவளைத் தன் வாழ்க்கைத்துணைவியாக ஆக்கிக் கொண்டான். ஒரு வித கலக்கமுமின்றி அவர்களது இல்லறமும் பூவிதழ் மேல் நடப்பது போல் வளர்ந்து சென்றது. திடுமென அந்த இன்ப வாழ்வின் வான் விளிம்பில் கரும் புயலின் சின்னம் தோன்றியது. புறாக்களைப் போல் கூடிக் குலவியிருந்த இவர்களது வாழ்வின் கூடு அந்தக் கடும் புயலில் சிக்குண்டு சிதைந்து போகும் நிலைக்கு வந்தது.

தவறு சாரங்கன் பேரில்தான். தன் வாயாலேயே அவன் கெட்டான். ஆபீஸில் நடந்த ஒரு விஷயத்தைக் குறித்து அவன் சம்பகத்திடம் பேசாமல் இருந்திருக்கலாம். அப்பாவி, அவனுக்கு எதையும் மறைக்கத் தெரியாது. தன்னுடன் ஒருமித்திருக்கும் ஆசை சம்பகத்தின் மனத்துள் அந்தப் பேச்சு ஒரு பெரும் விஷத்தை, சந்தேகத்தின் சுவாலையை எழுப்பி விடுமென அவன் நினைக்கவேயில்லை. விஷயம் வேறொன்றும் இல்லை. அவனுடைய ஆபீஸில் புதிதாக ஒரு டைப்பிஸ்டு பெண் வந்திருக்கிறாள். அவள் நல்ல அழகி. அவள் அணிந்த 'வாயில்' சேலை அவளுடைய வனப்புக்கும் மேனிக்கும் பொருத்தமாக இருந்ததைக் குறித்துச் சகஜமாக ஒரு நாள், அவன் ஆபீஸிலிருந்து திரும்பி வந்ததும் சம்பகத்திடம் கூறினான். அவ்வளவுதான். லங்காதகனத்தின் முதல் படலம் தொடங்கி விட்டது. ஒரு நாடகத்தின் முதல் அங்கம், இரண்டாம் அங்கம், இப்படி ஒவ்வோர் அங்கமாக ஐந்தாம் அங்கம் வரைக்கும் முற்றி விட்டது. ஒரு வார்த்தையிலிருந்து இன்னொரு வார்த்தை. இப்படி இவர்களிடையே மனஸ்தாபம் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே போயிற்று. சாந்தமான சம்பகம், உக்கிரமாகி விட்டாள். பெண் பாலரே எப்போதும் சட்டென—அற்ப விஷயமாய் இருக்கும்—தம் புருஷர் மீது இல்லாததையெல்லாம் கற்பனை செய்து கொண்டு, சந்தேகத் தீயில் தம்மைப் பொசுக்கிக் கொண்டு தம் கணவர்களையும் சுட்டு எரிப்பார்கள். ஒரு தரம் இந்தச் சந்தேகம் எழுந்து விட்டாலோ அது அழிவதே இல்லை. பெரும் விபரீதத்துக்கும் வழி செய்து விடுகிறது. கணவனை இம்சிக்கும் அளவுக்குக் கொடுமையும் பகையும் பெண்கள் உள்ளத்தில் குடிபுகுந்துவிடுகின்றன.

இந்த மாதிரி இரண்டு வாரம் கழிந்தது. வழக்கம் போல் சாரங்கன் வீடு திரும்பியதும் சம்பகம் அவனுக்குக் கோக்கோ கொண்டுவந்து தந்தாள். சர்க்கரை சற்றுக் கம்மியாக இருக்கவே கோக்கோ கசந்தது சாரங்கனுக்கு. "சர்க்கரை போட மறந்து விட்டாயா ?" என்றான் சாரங்கன் சகஜமாக. கடக்கடப் பதில் வந்தது அதற்கு, சம்பகத்திடமிருந்து:

"உங்கள் ஆபீஸ் டைப்பிஸ்டு பெண் இப்படிச் செய்திருந்தால் நீங்கள் கப்சிப்பென்று குடித்துவிட்டு, 'ரொம்ப ஜோராக' இருக்கே என்பீர்கள் இல்லையா?

"நான் சர்க்கரை நிறையப் போட்டால்கூட உங்களுக்குக் கசக்கத்தான் செய்யும். நான்தான் உங்களுக்கு வேம்பாகிவிட்டேனே, உங்கள் கண்ணுக்கு. அலட்சியமாகி விட்டேனே!" இவ்வாறு மேலும் அடுக்கிக் கொண்டு போனாள் சம்பகம்.

"சம்பா, இதென்ன உளறுகிறாய்...என்னை நீ புரிந்து கொள்ள வில்லை இன்னும்..." என்றான் சாரங்கன்.

"உங்களை இன்னும் எப்படிப் புரிந்து கொள்ளணுமாம்....?" என்றாள் சம்பகம்.

சம்பகத்தின் முகம் குங்குமம் போல் சிவந்து தோன்றியது. சாரங்கன் அவளையே நோக்கினான். அவளுக்கு என்ன நேரிட்டதென்பதே அவனுக்குப் புரியவில்லை.

"சம்பா, திடுமென உனக்கு என்ன? அந்த டைப்பிஸ்டு பெண்ணுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்....?" என்றான்.

"எனக்கு எப்படித் தெரியும் அந்தச் சம்பந்தத்தைப் பற்றி? நான் வெளியே வந்து உங்களுடைய திருவிளையாடல்களை யெல்லாம்







கவனிக்கிறேனு...: உங்களை நம்பினேனே, என் மடத் தனத்தைச் சொல்லனும்'' என்றாள் சம்பகம் பரபரப்புடன்.

வெகு நேரம் சாரங்கன் பேசவில்லை. மாலை மழுங்கியும் அறையினுள் விளக்கு ஒளிரவில்லை. சம்பகம் ஜன்னல் பக்கமாகத் திரும்பி வெளியே தெருவை நோக்கிக் கொண்டிருந்தாள். சோபாவில் சாய்ந்தபடி சாரங்கன், யோசனையில் மூழ்கியிருந்தான். ஏன், தன் அஜாக்கிரதையை நினைத்து வருந்திக்கொண்டுதான் இருந்தான்.

அறையினுள் நல்ல இருட்டு. அரை மணி நேரம் பொறுத்துச் சாரங்கன் தன் இடத்தை விட்டு எழுந்து, ஜன்னல் புறமாக வந்து, ''சம்பா, இதைக் கேளேன், சம்பா—'' என்று குரல் தழுதழுக்கச் சம்பாவின் தோளைத் தொட நகர்ந்தபொழுது, அவன் கையில் ஜன்னல் கர்ட்டன் தொங்கும் குமிழ்தான் பட்டது. திடுக்கிட்டான். உணர்ந்தான், சம்பா அங்கு இல்லை என்பதை. மீண்டும் அந்தச் சோபாவிலேயே போய்ச் சாய்ந்தான்.

குளிக்கும் வேளை, சாப்பிடும் நேரம் இவைகளை அறிவிக்கவே இடுமெனச் சம்பகம் வருவாள்; நின்று ஒரு வார்த்தை சாரங்கனுடன் பேச மாட்டாள். ஆபீசுக்குச் செல்லச் சாரங்கன் தன் 'ஸ்கூட்டரில்' ஏறிக் கிளம்பும்போது, அந்த அசடி மாடி ஜன்னலில் சற்று முகம் காட்டுவாள். ஆனால் சாரங்கன் தன்னை நோக்குவது தெரிந்ததும் உடனே தலையை இழுத்துக்கொள்வாள். இரவு பள்ளியறையிலும் இதே நிலைதான். கட்டிலில் படுப்பவள் தரையில் பாயை விரித்துப் போட்டுப் புரளுவாள். எப்போதாவது சாரங்கன், வாயைக் கிளறினால், அவன் நெஞ்சம் புண்ணாகும்படி அவனையும், அந்த டைப்பிஸ்டுப் பெண்ணையும் பிணைத்து ஏதாவது கூறுவாள் சம்பகம்.

எத்தனை நாட்கள் இம்மாதிரி நரக வேதனைப்படுவது; இதற்கு ஒரு முடிவு காண இருதரப்பிலுமே துடி துடித்தனர். வர வரப் பேச்சு நின்று விட்டது இவர்களிடையே. ஏதாவது கேட்டால், சுருக்கமான பதில்.

த.நா.குமாரசாமி

ஆனால் ஒருவர் முகக் குறிப்பை மற்றவர் கள்ளத்தனமாகக் கவனிக்காமலிருப்பதில்லை.

ஒரு ஞாயிற்றுக் கிழமை, இதைக் குறித்து அவர்களே ஒரு வழி செய்துகொண்டனர். ''ஒருவரை யொருவர் பார்த்துக் கொள்ளவே நாம் கூசிக்கொள்ளுகிறோம். பேசவுந்தான். ஆனால் இந்த வீட்டில் நீயும் நானும் இருந்தாக வேண்டும். மனத்தில் உள்ளதை எப்படி வெளியிடுவதென இருவருமே வழி தெரியாமல் அலைகிறோம். சிறு காகிதத்தில் நம் எண்ணத்தை எழுதி, நமக்கு வேண்டியதை நிறைவேற்றிக் கொள்ளுவோம். இதனால் நாம் முகம் கவிழ்த்து ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளுவதும் நிற்கும்'' என்றான்சாரங்கன்.

''நல்லது அப்படியே செய்யலாம்'' என்றாள் சம்பகம், சுவரை நோக்கி; அவள் கண்களில் மளமளவென்று நீர் வழிந்தது.

சிறு நோட்டுப் புத்தகத்தை எடுத்து மேஜை மீது வைத்தான் சாரங்கன். அதில் ஒரு பென்சிலையும் செருகினான்.

சாரங்கன் ஏதாவது தனக்குத் தேவைப்பட்டாலோ, ஏதாவது மனம்விட்டுச் சொல்ல வேண்டியிருந்தாலோ அந்த நோட்டுத்தாளில் எழுதுவான். அவன் இராத சமயமாக அல்லது சம்பகம் அதற்குப் பதில் எழுதுவதற்கு அவன் சற்று வேறு பக்கமாக நகர்ந்த போது, அவள் அதற்குப் பதில் எழுதுவாள்.

இப்படிச் சில நாட்கள் பேச்சின்றி எழுத்து மூலமாக இவர்களுடைய இல்லறம் நடந்தது.

''இந்தப் புதிய ஏற்பாட்டின்படி உங்கள் மனசுக்கு அமைதி வந்திருக்கிறதா?'' என்று காகிதத்தில் எழுதிக் கேட்டாள் சம்பகம்.

''நான்தான் உன் அமைதியைக் குலைத்ததாக நீ நினைக்கிறாய். இல்லாததை நீ இருப்பதாக எண்ணி நரகத்தை எழுப்பிக் கொண்டாய். வேறு என்ன செய்வது நான்?'' என்று அந்தக் கேள்விக்குக் கீழே தன் பதிலை வரைந்தான் சாரங்கன்.

ஒரு நாள், ஆபீஸிலிருந்து சாரங்கன் திரும்புவதற்குச் சற்றுத் தாமதமாகிவிட்டது. ஒருவேளை வேணுமென்றே அப்படிச் செய்தானோ என்னவோ? வந்ததும் அவன் மேஜையை நோக்கினான். காகிதத் தாள் இருந்தது. அதில் பெரிய எழுத்தில் ''ஏன் இத்தனை நேரம்?'' என்று எழுதியிருந்தது. அவனைக் கண்டதும் சம்பகம் சரேலென உட்புறம் மறைந்தாள்.

சம்பகத்தின் மனம் இதனால் இளகும் என்று நினைத்தவன், அவள் சட்டென முகம் காட்டாமல் மறைந்ததால், வெறுப்புற்று, சரசர வென்று அவள் விட்டுச் சென்ற அந்தக் காகிதத்தின் கீழ் ''அப்படித்தான் நாழிகையாகும்; என் இஷ்டம்'' என்று சற்று ரோஷமாகவே தன் மனத்தை வெளிப்படுத்தி எழுதினான். சம்பகம் அதைப் படிப்பதற்கென வராந்தாப் பக்கம் போய் நின்றான். சம்பகம் அறையினுள் வந்து, காகிதத் துண்டில் எழுதியிருப்பதைப் படித்தாளோ இல்லையோ குபீரென அவள் உடலெங்கும் ரத்தம் கொதித்துப் பரவியது. தொண்டையில் அழுகை அடைத்தது: காகிதத்தில் படபடவென்று ''பசியாக இருந்தால், சாதம் போடுகிறேன்'' என்று எழுதினாள். சாரங்கன் திரும்பி வந்து, சீட்டைப் படித்தான். ''தேவையில்லை'' என்று எழுதினான். அவன் மனத்தில் எத்தனையோ வேதனை புகைகினும், அதையெல்லாம் அவனுடைய எழுத்துக்கள் வெளியிடவில்லை.

சம்பகம் தன் கணவனை ஒருதரம் முறைத்துப் பார்த்துவிட்டு நெஞ்சு விம்ம உட்புறம் சென்றாள்.

இரவு வெகுநேரமாகி விட்டது. பசி தின்னவே, சாரங்கன் சமையலறைப் பக்கம் எட்டிப் பார்த்தான். வழக்கமாகச் சம்பகமும் சாரங்கனும் சேர்ந்தே சாப்பிடுவது வழக்கம். பிணக்குக்குப் பிறகும் இந்த வழக்கம் இருந்தே வந்தது. சமையற்காரப் பெண் பரிமாறுவாள். இருவரும் மௌனமாகச் சாப்பிட்டு விட்டுப் போவார்கள். ஆனால் அன்று ஒரு மாறுதல் தோன்றியது. சமையலறையில் ஒரு தட்டில் அன்னமும் வியஞ்சனங்களும் பரிமாறியிருந்தன. சம்பகம் அங்கு இல்லை. சமையல்காரி மட்டும் வெளிப்புறமாக இருட்டில் நின்றுகொண்டிருந்தாள். அன்று சாரங்கன் தனியாகவே சாப்பிடவேண்டியதாயிற்று. சம்பகம் சாப்பிட்டாளா இல்லையா என்றுகூட அவன் கேட்கவில்லை.

தன் அறைக்கு வந்ததும் சாரங்கன் காகிதத்தில் ''இது முதல் தடவை உன்னை விட்டு விட்டு நான் சாப்பிடுவது. இப்படியே நம்மிடையே பகை வளருமானால், நாம் எதற்காக ஒன்றாகத்தான் இந்த வீட்டில் இருக்க வேண்டுமோ? நான் இந்த வேதனையை அனுபவிப்பதை விட இறந்துபோய்விடலாம். நான் சாம்பலான பிறகு உன் மனம் குளிர்ந்து போகும். ஆகவே....'' என்று எழுதினான். இந்த ''ஆகவே''க்கு அவசியமில்லை. கடைசியில் இரண்டு பேரும் உயிரை விடப் போவதில்லை. நெருங்கி ஒருவரையின்றி அமையாத அந்தப் பழைய நிலைக்கு வருவதற்கே இப்படி இருவர் நெஞ்சமும் சுற்றிச் சுற்றிக் கண்ணும் பூச்சி ஆடினபோலும்.

மறுநாள் ஆபீஸிலிருந்து உரிய நேரத்துக்கு வீடு திரும்பி விட்டான் சாரங்கன். அவன் வேறு உடை மாற்றிக்கொள்வதற்குள் மேஜையில் இருக்கும் காகிதத்தைக் கவனித்தான். வெளுப்பாகவே மாசு மறுவின்றி இருந்தது அதன் இதயம். நிம்மதியான தூக்கம் வந்தது அவனுக்கு. அன்று ஆபீஸில் ஏராளமான வேலையானதால் அலுப்பு வேறு. மெல்லிய கை தன்னைச் சுற்றி வளைத்துக் கொள்ளாதா என்று ஏங்கினான். இந்த நாடகத்தின் கடைசி அங்கத்தின் திரை விழுமென்று அவன் காத்திருந்தான்.

சற்றுப் பொறுத்து....

குளிர்ந்த நீரில் குளித்துவிட்டு அவன் வேறு உடை அணிந்துகொண்டு, ஒரு சாய்வு நாற்காலியில் சற்றுச் சாய்ந்தான். கண்களில் கலக்கம்; அது தூக்கத்தினால் அல்ல; அயர்ப்பில் எதிர்ப்புறம் இருந்த அறையின்

# Don't abandon that crooked tube well!

Pumping water from a crooked tube well is as easy as pumping it from any regular tube-well. Myers Ejecto Pump makes it so! The only moving part used with this pump within the well is a spring controlled foot valve. No rods or bearings to wear out.



**Myers**

## EJECTO PUMP

- Min. bore 2"
- Max. depth 300 ft.

For higher capacities WASP Ejecto Pumps are available.

Write for particulars

**WATER SUPPLY SPECIALISTS PVT.LTD.**

**330, Thambu Chetty Street, Madras-1**

பட்டுத் திரை காற்றில் மெல்ல அசைந்தது. சம்பகந்தானோ என்று நினைக்கவே அவனுக்கு உடலெல்லாம் புல்லரித்தது. சம்பகம் இல்லை; அவள் உடுத்தும் சேலையை ஒத்த அந்தத் திரைச் சீலைத் துணிதான் இந்த மருளை எழுப்பிவிட்டது.

உள்ளே யாரோ வருவதுபோல் சத்தம் கேட்டது. அந்தச் சமையல்காரப் பெண்ணினுடையதுதான். இவ்வொரு மாறுதல் தென்பட்டது. எப்போதும் இந்த மனத்தாங்கல் ஏற்பட்ட பின்னரும் சம்பகமே — விளக்கு ஸ்விச்சுக்கு அருகில் சாரங்கன் இருப்பினும்— மெல்ல வந்து, அவன் தலைக்கு மேல் இருக்கும் பித்தானை டப்பென்று அழுத்துவாள். விளக்கு அறையினுள் பெருகிடும். ஆனால் இன்று அப்படி இல்லை. சமையலறையிலிருந்து சம்பகத்தின் குரல் கேட்கவே இன்னும் வானத்தில் மேக மூட்டம் இருப்பதை உணர்ந்தான் சாரங்கன். வெகு நேரம் காத்திருந்தான். அவனுக்குக் கடும் பசி. ஆபீஸிலிருந்து வேளைக்குத் திரும்பி விட்டான். ஆனால் ஒரு மணி நேரமாகியும், சிற்றுண்டியைக் காணவில்லை. தன்னையும் மீறி அவன் "ஏதாவது வயிற்றுக்கு உண்டா?" என்று சற்று உரக்கவே குரல் கொடுத்தான். சமையல்காரப் பெண் ஒரு தட்டில் சர்க்கரைப் பூரியும், ஒரு கோப்பையில் கோக்கோவும் கொண்டு வந்து மேஜை மீது வைத்துவிட்டு, அர்த்தம் தொனிக்கும் சிரிப்புடன் உட்புறம் சென்றாள்.

ஆனால் சாரங்கன் அந்தச் சிற்றுண்டியைத் திரும்பிக்கூட நோக்கவில்லை. அவனுக்கு எதுவோ மண்டை வெடித்துவிடும்போலிருந்தது. வெறி பிடித்தவன் போல் மேஜை மேலிருந்த வெற்றுத் தாளில் வரைந்தான்: "நான் முக்கிய காரியமாக வெளியே போகிறேன். திரும்பி வர எத்தனை நேரமாகுமோ தெரியாது. இராத்திரி இரண்டானாலும் ஆகும். எனக்காக யாரும் காத்துக் கண் விழிக்க வேண்டியதில்லை." அரை நிமிஷத்துக்கு மேல் அங்கு நிற்கவில்லை சாரங்கன். தடதடவென்று கீழே இறங்கி வெளியே சென்றான்.

இந்தப் பக்கம் சம்பகத்தின் நெஞ்சினுள் அடித்த ஒரு வேதனைப் புயலைச் சொல்லி முடியாது. போதாக் குறையாக அன்றிரவு ஒரே மழை இருட்டு. சாரங்கன் சீக்கிரமே திரும்பிவிடுவானென்று நினைத்தாள். அவள் பட்டினி கிடந்தாள். கடிகாரத்தில் மணி பன்னிரண்டு அடித்தபோது அவள் இதயம் நடுக்குற்றது. ஏன் அவர் இன்னும் வரவில்லை? கடிதாசியில் எழுதியது போல் என்னமாவது நடந்திருக்குமோ? நான் இவ்வளவு தூரம் அவர் மனசை நோகச் செய்திருக்கக்கூடாது. அவர் வராமலே இருந்தால் என் கதி என்ன?' இவ்வாறு பெருங் குழப்பம் அவளை உலுக்கி விட்டது. மணி ஒன்றும் ஆகியது. நடுநிசி. வராந்தாவில் வந்து நின்றாள். இருள் கவிந்த தெருக் கோடியைக் கூர்ந்து நோக்கினாள். ஒரு மின்னல் வெட்டியது. 'அதோ வருவது அவர்தானா?' அவள் நெஞ்சினுள் என்னவோ



"நானும் தினமும் நூற்றுக் கணக்கிலே 'செக்ஸ்' எழுதறேன்!"
"அது சரி, கையெழுத்துப் போடறது யாரு?"

பனுவாக இறங்கியது. சற்று நேரத்துக்கெல்லாம் மாடிப் படியில் காலரவம் கேட்டது. சம்பகத்தின் நெஞ்சு 'திக்திக்'கென்று அடித்துக் கொண்டது. ஓடிப்போய் வெளிக் கதவைத் திறந்தாள். தள்ளாடிக்கொண்டே ஓர் உருவம் உள்ளே வந்து தொப்பெனத் தரை மீது சாய்ந்து 'உம்...உம்.... தலை வெடித்துப் போகிறது. அப்பா... முடியவில்லை' என்று சாரங்கன் முனகுவது சம்பகத்தை என்னவோ செய்துவிட்டது. இருந்தும் சம்பகம் வெற்றுத் தாளைத் தேடினாள்; 'உங்களுக்கு என்ன உடம்பு... இப்படி ஏன் அரற்றுகிறீர்கள்' என்று எழுதிக் கேட்பதற்கு அவளுக்கே வெட்கமாகி விட்டது. இன்னும் எதற்கு இந்தச் சோதனை?

சம்பகம் பேசத் துடித்தாள். சாரங்கன் வலி தாளாமல் முனகிக் கொண்டே யிருந்தான். தொண்டையில் இதுவரை தாழிட்டுக் கிடந்த துயர் வெடித்து வரச் சம்பகம் தன் கணவன் மீது கவிந்து அவன் முகத்தை மெல்ல வருடி "என்ன உங்களுக்கு.... எனக்குப் பயமாக இருக்கிறதே..." என்றாள். அவள் பிகுவெல்லாம் பறந்தோடிவிட்டது. சாரங்கனை மெல்ல அணைத்துக் கொண்டாள். அவனுடைய இதயத் துடிப்பை அவளுடைய மார்பு புரிந்து கொண்டது. அலை தூக்கிய வெள்ளமென இவளுடைய கண்ணீர் சாரங்கனின் கன்னங்களைத் தெப்பமாக்கின. வெளியே இடியும் புடையுமாய்ப் பெருமழை கொட்டிற்று. "அம்மாடா....ஆ..." என்று சாரங்கனுடைய குரல் மெல்ல வந்தது.

அவனுடைய மோவாயைத் தொட்டுச் சம்பகம், "எப்படி இருக்கு இப்போ.... ஏன்னா?" என்றாள்.

சாரங்கனின் கை அவளை அணைத்துக் கொள்ளத் துடித்தது. அவன் செய்தது அத்தனையும் நடிப்பு என்பதை அந்தப் பேதை அறிவாளா? 'ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னும் கூடலில் காணப்படும்'.

# நிமிஷக் கதைகள்...

இந்தியாவில் அமெரிக்கத் தூதராகப் பணியாற்றிய பேராசிரியர் கால்பிரேயித் விடைபெற்றுத் தம் தாயகம் செல்லும் வழியில் சென்னைக்கும் வந்திருந்தது நினைவிருக்கலாம். தாம் சென்னையில் தங்கிய ஒரு மணி நேரத்துள் அவர் சென்னையைப் பற்றி வெகுவாகப் புகழ்ந்தார். சென்னை நகரத்தின் அழகைப் பற்றியல்ல; சென்னை மாகாணத்து மக்கள் அறிவு வளர்ச்சியில் ஆர்வம் மிக்கவர்கள் என்பதாகக் கூறினார்.

பேராசிரியர் கால்பிரெய்த் பேராசிரியராகப் பாரத நாட்டுக்கு முதன் முதல் வந்தபோது, சுங்க அதிகாரிகள் அவர் பொருள்களைச் சோதனை போட்டார்களாம். சோதனை போட்ட சுங்க அதிகாரி சென்னை மாநிலத்தைச் சேர்ந்தவராம். ஸ்ரீ கால்பிரெய்த்தின் அநுமதிச் சீட்டு ஆகியவைகளைப் பார்வையிட்டவருக்கு அவர்தாம் கால்பிரெய்த் என்பது தெரிய வரவே, தமது சுங்க இலாகா வேலையை அப்படியே போட்டு விட்டுத் தமது மேஜை டிராயரிலிருந்து ஒரு புஸ்தகத்தை எடுத்து வந்தாராம். 'எனக்குச் சில இடங்களில் இதன் பொருள் விளங்கவில்லை. தயவு செய்து விளக்க வேண்டும்' என்று கூறி அவர் கையில் கொடுத்தாராம்.

புரட்டிப் பார்த்தால் அது ஸ்ரீ கால்பிரெய்த் எழுதிய நூலாக இருந்தது. இந்தச் சென்னை மாகாணத்தவர்கள் எத்தனை அக்கறையோடு ஒரு விஷயத்தைப் பயில்கிறார்கள் என்று மகிழ்ந்த ஸ்ரீ கால்பிரெய்த் அவரது சந்தேகங்களைப் போக்க முற்பட்டாராம். படிப்பில் ஆர்வம் கொண்ட அவரும் உள்ளிப்பாக அவர் சொல்வதைக் கேட்டு ஐயந் திரக் கற்ற பின்னரே அவரை விடைகொடுத்தனுப்பினாராம்.

✽ ✽

'பொறுப்புள்ள பணியாளர்கள் தேவை.'

பத்திரிகையில் வந்த இந்த விளம்பரத்துக்கு ஒருவர் விண்ணப்பித்துக் கொண்டு எழுதியதாவது :

''என்னைப் போன்ற பொறுப்பாளியை இந்த உலகத்திலேயே காண முடியாது. என்னைக் காட்டிலும் இந்த வேலைக்கு அருகதையானவர்கள் வேறு யாரும் இருக்க முடியாது. ஏனெனில், நான் எங்கெல்லாம் வேலை பார்த்தேனோ, அங்கெல்லாம் நேரும் தவறுகளுக்கு என்னையே 'பொறுப்பாளி'யாக்கி யிருக்கிறார்கள். இதைக் காட்டிலும் நல்ல அத்தாட்சிப் பத்திரம் என்ன வேண்டும்?''



✽ ✽

பாடகர்: எனக்கு ஒரே ஒரு அறை வாடகைக்கு விட்டால் போதுமானது.

வீட்டுக்காரர்: தாராளமாகத் தருகிறேன். ஆனால் இந்த வீட்டுக்குள்ள முழு வாடகையையும் நீங்களேதான் கொடுக்க வேண்டும்.

பாடகர்: அநியாயம்! ஓர் அறையில் குடியிருப்பதற்கு வீடு முழுவதற்குமுள்ள வாடகை கொடுப்பதென்றால் அது அக்கிரமமில்லையா?

வீட்டுக்காரர்: எப்படி? நீங்கள் குடிவந்து விட்டால், மற்றவர்கள் குடியிருக்க வரமாட்டார்களே! முழு வீடும் காலியாகத்தானே இருக்கும்? எனவேதான் முழு வாடகையையும் கொடுக்க உங்களுக்குச் சம்மதமா என்று கேட்கிறேன்!

✽ ✽

நான் ஒரு சொல்லேர் உழவன்.

பேனு வென்னும் கலப்பை பிடித்து உழுபவன்.

மசியென்னும் நீர்பாய்ச்சிக் காகித நாற்றங்காலை உழுகிறேன் நான்.

எண்ணம் என்னும் விதை தூவிப் பயிரைக் கருத்தாக வளர்க்கிறேன்.

வளர்ந்த நாற்றைப் பிடுங்கி வார, மாதப் பத்திரிகை என்னும் வயலிலே நடவு நடுகிறேன்.

'வந்தனம்' என்னும் சொல்லுடன் வயல் அதை ஏற்க மறுக்கிறது.

ஏற்றுக் கொள்ளப்படாத நாய்க் குடையாக என்னிடம் எத்தனையோ காளான்கள் உள்ளன.

'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்' என்னும் திருமறை என் விஷயத்தில் இப்படியா ஆக வேண்டும், ஆண்டவனே!

✽ ✽

அவசரம் அவசரமாக அந்த இளம் தம்பதிகள் நாடகக் கொட்டகைக்குள் நுழைந்தனர். திரை தூக்கி நாடகக் கொட்டகையில் விளக்கும் அணைந்தாகி விட்டது.

தங்கள் ஆசனத்தை ஒருவாறு தேடிக் கொண்டு அவர்கள் போனால், அங்கு முன்பே இருவர் உட்கார்ந்திருந்தனர்.

'நாம் ரிசர்வ் செய்த சீட்டில் வேறு நபர்கள் உட்கார்ந்திருக்கிறார்களே!' என்று எண்ணிய கணவன், பரிசோதகரிடம் டிக்கட்டைக் காட்டி, ''இது என்ன அநியாயம், சார்! எங்களுக்கு 'ரிஸர்வ்' செய்த இடத்தில் வேறு யாரோ உட்கார்ந்திருக்கிறார்களே!'' என்றான்.

டார்ச் விளக்கின் வெளிச்சத்தில் டிக்கட்டைப் பார்த்த பரிசோதகர், ''இது நேற்று ஆட்டத்துக்கு ரிசர்வ் செய்த டிக்கட் அல்லவா?'' என்றார்.

கணவனுக்கு அப்பொழுது தான் நினைவு வந்தது. தன் மனைவியைத் திரும்பிப் பார்த்து, ''நீ திரும்பத் தலையை வாரிப் பின்னிக்கொள்ள வேண்டாம். இருக்கிற அழகு போதும், ஆட்டத்துக்குப் போய் வந்து விடுவோம் என்று சொன்னேனே, கேட்டியா?'' என்றான். அவர்கள் ஆட்டத்தைக் கோட்டை விட்ட காரணம் இப்பொழுது புரிகிறதல்லவா?

# பிராஸோவினால்

## அதிகப் பிரகாசம்



பிரகாசமுள்ள பித்தளைச்
சாமான் உங்கள்
அறையின் அலங்காரத்தை
அதிகரிக்கச் செய்கிறது—
அறைக்கு ஒளி மிகுந்த
தோற்றத்தை அளிக்கிறது.
உங்கள் பித்தளைச்
சாமான் பளபளக்கும்
ஒளியுடனிருப்பதற்கு,
அதனைத் தவறாமல் பிராஸோ
கொண்டு மெருகிடுவதே
சிரமமற்ற வழியாகும்.
உபயோகிக்க சுலபமான
பிராஸோ சிக்கனமானதும் கூட!

உங்கள் பித்தளைச் சாமான்களை,

# பிராஸோவினால்

வாரத்திற்கு ஒரு முறை
ஒவ்வொரு வாரமும் மெருகிடுங்கள்




அட்லான்டிக் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)

BR-4

JWT/BR 5709

# படிக்குப் பாதி

"குறும்பன்"

கந்தன் சுத்தப் பட்டிக்காட்டு ஆசாமி. அவன் தன் சொந்த ஊரான காட்டுப்பட்டியைத் தவிர வேறு ஊரையே கண்டறியாதவன். நகரப் பகுதிக்குப் போகும் வாய்ப்பே இதுவரை அவனுக்குக் கிட்டவில்லை.

அவனுக்கு ஒரு தங்கை. அவளை நல்ல இடத்தில் கட்டிக் கொடுக்க வேண்டுமென்று அவன் முயன்றான். அவன் முயற்சி பலனளித்தது. நகரப் பகுதியில் நல்ல சம்பளத்தில் இருந்த வாலிபன் ஒருவன் அவன் தங்கையின் அழகையும் குணத்தையும் கண்டு மயங்கி அவளை மணக்க முன் வந்தான்.

கந்தனும் எவ்வளவோ விசாரித்த பின், அந்தப் பையன் நல்லவன்தான் என்று கண்டான். தங்கையைத் தைரியமாக அவன் கையில் பிடித்தும் கொடுத்தான்.

தங்கை அந்தப் பையனுடன் புகுந்த வீட்டுக்குப் புறப்படும்போது கந்தனால் அவளோடு போக முடியவில்லை. சாகுபடி வேலை தொடங்கவேண்டிய காலமாதலால் வேலை ஒழிந்திருக்கும் நேரத்தில் அவளை வந்து பார்ப்பதாக ஆறுதல் சொல்லி அனுப்பினான்.

இரண்டொரு மாதங்களில் அவனுக்குக் கைவேலை ஒழிந்திருக்கவே, தங்கையைப் போய்ப் பார்த்து வரத் திட்டமிட்டான். அப்படியே இதுவரை அவன் பார்த்தறியாத பட்டணத்தைப் பார்த்தாற் போலிருக்கும் என்றும் தோன்றியது.

புதிதாகப் பட்டணம் புறப்பட்ட கந்தனுக்கு அவன் தோழர்கள் என்னென்னவெல்லாமோ உபதேசம் செய்து அனுப்பினார்கள். 'பட்டணம் போக்கிரிகளிடம் ஜாக்கிரதையாக நடந்து கொள்' என்றான் ஒருவன். 'கடை கண்ணிகளில் போய் ஏதாவது பொருள் வாங்குவதென்றாலும் கவனமாக இரு. ஏமாந்துவிடாதே. ஒன்றுக்கு இரட்டை விலை சொல்லி உன் தலையில் பொருள்களைக் கட்டப் பார்ப்பார்கள்!' என்றான் இன்னொருவன். 'எதையும் படிக்குப் பாதியாகக் கேள்!' என்று உபதேசித்தான் மூன்றாமவன்.

நண்பர்களின் உபதேச மூட்டைகளோடு தன் கைக்கு வேண்டிய பொருள்களையும் எடுத்துக்கொண்டு புறப்பட்டான் கந்தன்.



தங்கையின் வீட்டை அடைந்த அவனுக்கு அளவற்ற மகிழ்ச்சி. வசதியாக வாழ்ந்தாள் எந்தக் குறையுமின்றி. அவள் கணவனும் கந்தனுக்கு விழுந்து விழுந்து உபசாரம் செய்தான்.

ஊரைச் சுற்றிப் பார்த்து வர ஆசை தோன்றவே, அன்று மாலை ஐந்து மணிக்குக் கடைத் தெருவை நோக்கிப் புறப்பட்டான் கந்தன். தங்கையின் கணவன் அலுவலகத்துக்குச் சென்றிருந்தமையால், கந்தன் தனியாகவேதான் சென்றான்.

அவன் புறப்பட்டபொழுது வானம் நிர்மலமாக இருந்தது. அவன் கடைத் தெருவை அடையவும் வானம் கும்மென்று இருட்டிக் கொண்டு வரவும் சரியாக இருந்தது. இரண்டொரு தூற்றல்களும் போட ஆரம்பித்தன.

ஒரு கடைக்குள் நுழைந்தான். அது குடைக் கடை. ஒரு குடை வாங்கினால் என்ன என்று தோன்றியது. ஊரிலும்தான் குடையில்லை, மழைக்காலத்துக்கு உபயோகமாக இருக்கும் என்று தோன்றவே ஒரு குடையைப் பொறுக்கி எடுத்து விலை கேட்டான்.

''எட்டு ரூபாய்'' என்றான் கடைக்காரன்.

''ரொம்ப அதிகம்! நான்கு ரூபாய்க்குத் தருவாயா?'' என்று கேட்டான் கந்தன்.

''ஆறு ரூபாய் என்றால் எடுத்துக்கொள்!'' என்றான் கடைக்காரன்.

''மூன்று ரூபாய்க்குத் தருவாயா?'' என்று கேட்டான் கந்தன். கடைக்காரனுக்கு வியப்பாக இருக்கவே அவன் முகத்தை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தான். பிறகு, ''வீண் பேச்சு எதற்கு? நான்கு ரூபாய்க்குச் சம்மதமானால் சொல்!'' என்றான் கடைக்காரன். கந்தன், ''இரண்டரை ரூபாய்க்குத் தா!'' என்றான்.

இந்த ஆள் மறை கழன்றவனாக இருப்பான் போல் இருக்கிறதே என்று எண்ணிய கடைக்காரன், ''ஏன், இனாமாகவே எடுத்துக் கொள்ளேன்!'' என்றான் ஆத்திரத்தோடு.

கந்தன் அவன் ஆத்திரத்தை இலட்சியம் செய்யவில்லை. ''எனக்கு ஆட்சேபமில்லை. ஒன்றை எடுத்துக்கொள்ளச் சொன்னால் எப்படி?'' என்றான்.

கடைக்காரன் விழித்தான் வியப்பு மிகுதியினால். 'கடை கண்ணிகளில் போய் ஏதாவது பொருள்கள் வாங்குவதென்றாலும் கவனமாக இரு. ஏமாந்துவிடாதே. ஒன்றுக்கு இரட்டை விலை சொல்லி உன் தலையில் கட்டப் பார்ப்பார்கள். எதையும் படிக்குப் பாதியாகக் கேள்!' என்ற நண்பர்களின் உபதேசம் கந்தனின் மூளையில் வேலை செய்து கொண்டிருந்தது. எனவே, ''இரண்டு கொடுத்தால் தாராளமாக எடுத்துக் கொள்கிறேன்!'' என்றான். நாம் இரட்டைக் குடைகள் மட்டும் கேட்டு, கடைக்காரனும் சம்மதித்து விட்டால், பேரத்தில் பெருந் தவறு செய்து விட்டதாகி விடுமோ என்ற கவலை அவன் மூளையின் ஒரு மூலையில் அப்பொழுது வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

# வாட்டர்பரீஸ்

# வைடமின் காம்பவுண்ட்

## சாப்பிடவேண்டியது எப்பொழுது?




■ எந்த சீதவெப்ப நிலையிலும், எப்பருவத்திலும் வயதுவந்தோர், சிறுவர் யாவரும் சுவைத்துப் பருகுவதற்கு உகந்த பொது டானிக் வாட்டர்பரீஸ் வைட்டமின் காம்பவுண்ட்.

■ வைட்டமின் பி காம்ப்ளெக்ஸ், மால்ட் எக்ஸ்ட்ராக்ட் மற்றும் உடல் நலம், தென்பு ஆகியவற்றுக்கு அவசியமான பொருள்கள் செறிந்தது வாட்டர்பரீஸ் வைட்டமின் காம்பவுண்ட். பசியைத்தூண்டுவதுடன், ஆரோக்கிய உணர்வை ஊட்டுகிறது அது.

# வாட்டர்பரீஸ்

# வைடமின்

# காம்பவுண்ட்

வோனர்-லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பெற்றது)

.WLY-9 TAM



கல்கி வாசகரில் ஒருவர் எழுதுகிறார்: அவர் வசிக்கும் பிராந்தியத்தில் வெறி நாய்கள் மிக அதிகமாம். அங்கு வெறி நாய்க் கடிக்கு இலக்காகும் அப்பாவிகள் அநேகராம். 'இந்த விஷ விஷயத்துக்கு நமது நாட்டு வைத்தியத்தில் சிகிச்சை சொல்ல வில்லையா? பிரம்ம வித்துக்களான மஹரிஷிகள் தெளிந்து உதவிய நல்லவா ஆயுர்வேதம்? திரிகாலக்ஞானிகளான அவர்கள் வெறி நாய்க் கடிக்கு வைத்தியம் தெரியாமல் போயிருப்பாரா? அவர்கள் இது விஷயமாகத் தெளிந்து தெரிவித்துள்ள விஷயங்களை எழுத வேணும்' என்று கேட்டுக் கொண்டுள்ளார்.

வெறிநாய்க்கடி விஷத்துக்கு விஸ்தாரமாகச் சிகிச்சை நமது சாஸ்திரங்களில் தெரிவிக்கப் பட்டிருக்கிறது. ஆனால் அதைச் செயலளவில் நடைமுறை வழக்கத்தில் கொண்டு வர வில்லை. அல்லது எனக்குத் தெரிந்த வரையில் இது ஏட்டுச் சுரைக்காயாகவே இருக்கிறது.

உற்ற பிணியைப் போக்குவது எதுவோ அதுதான் மருந்தெனத் தக்கது. அவ்விதம் போக்க வல்லவனே வைத்தியனாவான் என்று சரகாசார்யர் தெரிவிக்கிறார். இது எவ்வளவு பரந்த மனப் போக்கு என்று எண்ணி வியக்க வேண்டியதாகும். நோயாளிக்கு நோய் தீர வேண்டும் என்பதுதானே லட்சியம். அது எந்த முறையைச் சேர்ந்ததானாலும் என்ன? யார் கைப்படக் கிடைப்பதானாலும் என்ன? ஆகவே, போகாத ஊருக்கு வழிசொல்ல முயல வேண்டாம். பலன் தருகிற முறை என்று தெரிந்ததை ஏற்கக் கணக்கும் வேண்டாம்.

மற்றொரு நண்பர் ஓர் ஆசிரியர். நகரமும் அல்லாத கிராமமுமல்லாத ஏதோ ஓர் இரண்டுங்கெட்டான் ஊரில் இருப்பவர். பள்ளியாசிரியர் மட்டுமா? ஊரில் உள்ள மக்களுக்குப் பல வகையில் தொண்டாற்றுபவர். எடுத்ததற்கெல்லாம் ஊர் ஜனங்கள் ''வாத்தியாரய்யாவைக் கேளு'' என்பர். வெளியூரிலிருந்து யாருக்குக் கடிதம் வந்தாலும் 'வாத்தியார் ஐயா'தான் படித்துச் சொல்ல வேண்டும். என்ன பதில் எழுதலாம் என்று ஆலோசனை சொல்ல வேண்டும்; பதில் கடிதம் எழுதிக் கொடுக்க வேண்டும். சம்பந்திகள் தகராறு; அண்ணன் தம்பிகள் சண்டை. அப்பனும் மகனும் பூசல். கணவனும் மனைவியும் ஊடல் இவற்றுக்கெல்லாம் மாஜிஸ்திரேட்டாகவும், முன்சீபாகவும் இருந்து வழக்கைக் கேட்டுச் சமாதானமாகும் வகையில் நியாயம் வழங்க வேண்டும். இப்படிப் பல விதத்தில் அவ்வூர் மக்களுக்குத் தொண்டாற்றி வரும் இவருக்குச் சமீப காலத்தில் புதியதொரு பொறுப்பும் ஏற்கும்படியாயிற்று. அவ்வூர் மக்களுக்குச் சொற்பமான நோய்களுக்கு நாட்டு வைத்திய முறையில் தெரிந்த சிகிச்சைகளை ஓரளவு செய்து உதவி புரிவது தான் இப்புதிய பொறுப்பு. புரியாத விஷயங்களை ....? அருகில் நகரில் உள்ள ஆஸ்பத்திரிக்கு அனுப்பி விடுவார். ஆயினும் ஓரளவு முதலுதவியாக இவர் உதவி புரிய வாய்ப்பு உண்டு. இவ்வாசிரியர் கல்கியில் வந்த ''நாட்டு வைத்தியக் கட்டுரை''களை வைத்துக் கொண்டு, சுய முயற்சியாக அதற்கொரு அட்டவணை அகராதி என்று தயாரித்துக் கொண்டும் இருக்கிறார். எந்த விஷயத்தைப் பற்றிய கேள்வியாயினும் சரி, ''டக் டக்'' என்று அகராதியைப் புரட்டிக் கேள்விக்குத் தக்க பதிலைச் சொல்லிவிடுவார்.

இவர் கட்டுரை வரிசைகளில் எழுதப்படாமல் விட்டுப் போன வியாதிகளை ஒரு பட்டியலாக எழுதி, ''இவ்விஷயங்களைப் பற்றி எழுதுங்கள்'' என்று உருக்கமாகக் கேட்டுக் கொள்கிறார். அவர் கொடுத்துள்ள பட்டியலில் சிலவற்றைப் பற்றி எழுத இயலாது. வேறு சிலவற்றைப் பற்றி எழுதியாயிற்று. ஆயினும், பல் விஷயமாகவும் மாசிக தோஷங்



களைப் பற்றியும், அன்ன ரக்ஷணீயம் என்னும் விஷயமாகவும் மிகவும் உபயோகமான சில தகவல்களைப் பற்றிக் கட்டாயமாகவும் எழுதியாக வேண்டியதுதான்.

பல்லீறு பிருதுவாகி விடுவதால் பற்கள் கெட்டியாக நில்லாமல் நெகிழ்வதும், இவற்றினிடையில் சீழ் பிடித்தல் முதலிய உபத்திரவங்களும் ஏற்படுவதுண்டு. இதனால் வாயில் ஒரு வாடை ஏற்படவும் பேசும்போது அது வெளியே வீசவும் நேரிடும்.

புங்கம்பட்டைக் கஷாயத்தில் நல்லெண்ணெய் சேர்த்துக் கடுக்காயைக் கல்கமாகச் சேர்த்துக் காய்ச்சிய தைலத்தைப் பஞ்சில் எடுத்துப் பல்லீறுகளில் பூசி வாய்க் கொப்புளித்து வந்தால் பல்லீறு கெட்டிப்படும். ஆட்டம் கண்ட பற்கள் இறுகும். சீழ் முதலியவையும் ஒழியும்.

ஆலம் மொட்டு அல்லது அதன் விழுதின் நுனிய கணுக்களை மென்று கொண்டே இருத்தல்.... இருந்த பின் வாய் கொப்புளித்தல் என்னும் உபாயத்தினால் மேற்சொல்ல வகைப்பட்ட பல்லீறின் பிருதுத்தன்மையைப் போக்கிக் கெட்டிப்படச் செய்யலாம். சீழ் முதலியவை ஒழியும் என்பது மட்டுமல்ல; பேசும் போதும் சிரிக்கும் போதும், ஏன், சில சமயம் தூங்க விடும் போதுங்கூட வீசும் துர்க்கந்தம் நிச்சயமாகவும் தீர்ந்துவிடும்.

# பத்தினிக் கோட்டம்

அத்தியாயம் பதினொன்று

## 'எதற்கும் தயார்!'



ஜெகசிற்பியன்

உற்சாகமாக மகிழ்ச்சியுடன் நிமிர்ந்த மூத்தரையர் கலகலப்பான குரலில், ''ஆம், அன்பரே! வீராபிஷேக முடிசூட்டு விழா வைபவத்துக்குப் பின் நிகழவிருக்கும் அந்த மாபெரும் புனித நிகழ்ச்சியை நான் மட்டுமல்ல, இந்த நாடே ஆவலுடன் எதிர்பார்க்கிறது!'' என்றார்.

''அப்படி ஓர் அதியாய நிகழ்ச்சி நிகழவிருப்பதை அறிந்துதான் நாங்கள் அந்த வீராபிஷேக முடிசூட்டு விழா வைபவத்தில் கலந்துகொள்ள மறுக்கிறோம் நண்பரே! அது தான் நாங்கள் காஞ்சிக்கு வர மறுப்பதன் இரண்டாவது காரணம்!'' என்று இடிபோல் முழங்கினார் பழையாறைச் சோழர்.

முத்தரையர் இதைக் கேட்டு வெலவெலத்து விட்டார். ஒரு கணம் ஒன்றுமே தோன்றாமல் திகைப்புற்று நின்ற அவர் ''நீங்கள்....... நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று குழறினார்.

''பல்லவ மன்னர், ஆந்திர இளவரசியை மணக்கப் போவதை நாங்கள் வன்மையாக எதிர்க்கிறோம்!'' என்று சீறினார் பழையாறைச் சோழர்.

''திருமணம் என்பது ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் மட்டுமே உரிய சொந்த விஷயம்; அதில் மூன்றாம் மனிதர் தலையிடுவது நியாயமல்லவே!''

''இது சாதாரண குடிமக்களுக்குப் பொருந்திய நியாயம்; ஒரு மாபெரும் நாட்டின் மன்னரது திருமணம் அப்படிப்பட்டதல்ல; ஏனென்றால், அதிலே அந்த நாட்டின் எதிர்காலத் தலைவிதி அடங்கியிருக்கிறது.''

''உத்தமசீலியைப் பரமேசுவரவர்மர் மணப்பதால் பல்லவ நாட்டுக்கு அப்படி என்ன பாதகம் ஏற்பட்டு விடும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?''

''இதில் மாபெரும் சதி ஒன்று அடங்கியிருக்கிறது நண்பரே! நீங்களே நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள்: சமண சமயத்தைப் பரப்ப வேண்டும் என்ற நோக்கத்துடன் பல்லவ நாட்டுக்கு வந்தவள் உத்தமசீலி. அதே இலட்சியத்துக்காகத் தன் பொக்கிஷம் முழுவதையும் திறந்து கொட்டத் தயாராக இருப்பவன் ஆந்திர மன்னன். ஆனால் அந்த முயற்சி பலிக்கவில்லை. அதற்குப் பிறகுதான் ஆந்திர இளவரசி, பரமேசுவரவர்மரைக் காதலித்திருக்கிறாள்; விஷ்ணுவர்த்தன



னும் அவருக்குப் படையுதவி அளித்திருக்கிறான். இவற்றின் நோக்கம் என்னவாக இருக்கும்? பங்காளியின் மூலம் சாதிக்க முடியாத காரியத்தைக் காதலனின் வாயிலாகச் சாதிக்கலாம் என்பது இதிலிருந்து புலப்படவில்லையா? ஆந்திர இளவரசி ஒரு சாதாரணப் பெண் அல்ல; அவள் பயங்கரச் சதிகாரி. சமண சமய வெறி கொண்டவள். பல்லவ நாட்டை முழுக்க முழுக்கச் சமண சமயச் சார்புள்ளதாக்கிவிட வேண்டும் என்று அவள் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறாள். அதற்காகவே பரமேசுவரவர்மரின் மனத்தை

மயக்கி அவரைக் காதலிக்கவும் முற்பட்டிருக்கிறான். அவனுடைய காதல் உண்மையானதல்ல; அது வெறும் சதி நாடகம். சமண சமய வளர்ச்சிக்காக நடத்தப்படும் சூழ்ச்சி நாடகம். அதிலே அவன் பெரும் பகுதி வெற்றியடைந்து விட்டான். பல்லவ மன்னர் ஏமாந்து விட்டார். அவளை அவர் மணந்து கொண்டால் பல்லவ நாட்டிலே வெகு விரைவாகச் சமணம் பரவி விடும்; சைவ — வைணவம் பூண்டற்றுப் போகும். அத்துடன், இப்போது விடுதலை பெற்றிருக்கும் பல்லவ நாடு சளுக்கியரிடம் மீண்டும் நிரந்தரமாக அடிமைப்பட்டும் விடும். இந்தப் பரிதாப நிலைமை ஏற்பட நாங்கள் ஒரு போதும் அனுமதிக்க மாட்டோம். இத்தனை காலமும் நான் பல்லவ மன்னருக்குப் பக்கபலமாக இருந்து வந்ததற்கும், அவரை அரியணையில் அமர்த்தப் பாடுபட்டதற்கும் அடிப்படைக் காரணமே, இங்கு சைவம் தழைத்து ஓங்க வேண்டும் என்பதற்காகத்தான். சிவநேசச் செல்வரான பாண்டிய மன்னர் நெடுமாறர், பல்லவ நாட்டின் விடுதலைக்கு அனுகூலமாக நெல்வேலியில் சளுக்கியரை எதிர்த்துப் போரிட்டதற்கும் இதுதான் காரணம். எனவே, எங்களின் அந்த அடிப்படை இலட்சியம் சிதைவுறுவதற்கான எந்தக் காரியமும் நடைபெற நாங்கள் ஒருகாலும் சம்மதிக்க மாட்டோம்.'' — அனல் துண்டங்களைக் கக்குவதுபோல் இவ்வாறு பேசி நிறுத்தினார் பழையாறைச் சோழர்.

முத்தரையரின் உடல் வேர்த்துக் கொட்டியது. முகமோ சவமாக வெளுத்துச் சிறுத்தது. நெருஞ்சி முள் குவியலில் நிற்பதுபோல் நெளிந்து தவித்த அவர், ''நண்பரே! ஆந்திர இளவரசியைப் பற்றி ஏதும் அறியாமல் இப்படிப் பேசுகிறீர்கள்! அவள், பெயரில் மட்டும் உத்தமசீலி அல்ல; பெண் குலத்தின் புனித குண சீலங்களெல்லாம் ஒருங்கு சேர்ந்து உருவான உத்தம மங்கை அவள்!'' என்று கண் கலங்க, நாக்குழறக் கூறினார்.

பழையாறைச் சோழர் இதைக் கேட்டு உரக்கச் சிரித்தார். ''என் அருமை நண்பர் சந்திரலேகைச் சித்ராசரிடமிருந்து இத்தகைய பதிலே வரும் என்பது எனக்கு ஏற்கனவே தெரியும். ஆனால் இந்த விஷயத்தில் உங்களுடைய பேச்சையோ, என் மதிப்புக்குரிய சேதியக் கவிஞர் பராவாதிமல்லரின் கருத்தையோ நான் ஏற்க முடியாது. ஏனென்றால் நீங்கள் இருவருமே சமணர்கள் என்பதை நான் மறப்பதற்கில்லை'' என்றார்.

வேல் பாய்ந்த சிங்கம் போல் சிலிர்த்துத் திமிறி நிமிர்ந்தார் முத்தரையர். அவரது கண்கள் தீப்பிழம்பாகச் சிவந்தன. ''அன்பரே! உங்கள்மீது நான் அளவற்ற மதிப்பு வைத்திருக்கிறேன். இனியும் உங்களுடன் பேசி அந்த மதிப்பை அழித்துக் கொள்ள விரும்பவில்லை. ஆயினும் ஒரு விஷயத்தை உங்களுக்கு நினைவுபடுத்திவிட்டுச் செல்கிறேன்: பெருவள நல்லூர்ப் போரில் புறமுதுகிட்ட சளுக்கிய விக்கிரமாதித்தன் மட்டும்தான் கந்தலாடையைச் சுற்றிக்கொண்டு உயிர் தப்பி ஓடிப் போனானே தவிர, அவனுடைய மைந்தனான இளவரசன் வினயாதித்தனும், தளபதி வில்வேலியும் இங்கேதான் இன்னமும் தலை மறைவாகத் திரிந்து கொண்டிருக்கிறார்கள். இந்நிலையில் உங்களின் இந்தப் போக்கு எத்தகைய விபரீதத்தை விளைவிக்கும் என்பதை நீங்களே நன்கு சிந்தித்துப் பாருங்கள்.''

சரேலென்று திரும்பிய முத்தரையர், தம் புரவிமீது ஏறி அதைப் புயலெனச் செலுத்திச் சென்றார்.

இருண்ட வானத்தின் எங்கோ ஒரு மூலையிலிருந்து குமுறல் ஒலி கேட்டது. அவ்வப்போது மின்னற்கொடிகள் நெளிந்தோடி வானப் படுதாவைக் கிழித்துத் தைத்தன. யானைக் கூட்டம் போன்ற கருமுகில்கள் அங்குமிங்குமாக அலைந்து மின்னல் பிளக்கும் திசை நோக்கி உருண்டு சென்று குவிந்தன. திடீரென்று கிளம்பி வீசிய சூறைக் காற்று உயரமான மரங்களை உலுக்கிச் சுழற்றி இரண்டொரு கிளைகளை முறித்துச் சாய்த்து விட்டு ஓய்ந்தது.

இவை எல்லாம் பழையாறைச் சோழரின் கவனத்தைச் சிறிதும் ஈர்க்கவில்லை. சாலையின் தொலைதூரத்துக்கு அப்பால் முத்தரையருடைய குதிரை ஓடி மறைந்த பின்னும் அந்தத் திசைப் பக்கமே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்த அவர், ''ஹூம்! எல்லாம் முன் கூட்டியே திட்டமிட்டு நடத்தப்படும் நாடகம்! இதற்கெல்லாம் நானா ஏமாறுவேன்?'' என்று அலட்சியமாகத் தோளைக் குலுக்கிக்கொண்டு திரும்பி, அங்கே திகைத்துத். தலைகுனிந்து நின்று கொண்டிருந்த கோவிந்த வர்மனைப் பார்த்து, ''கேட்டீர்களா, இளவரசே? உங்களிடம் நான் சொன்ன மாதிரிதான் நடக்கப் போகிறது! வீராபிஷேக முடி சூட்டலுக்குப் பின் அந்தச் சூழ்ச்சிக்காரி ஆந்திர இளவரசியைத்தான் பல்லவ மன்னர் மணந்து கொள்ளப் போகிறாராம்!'' என்றார் வெடித்த குரலில்.

# வாழ்க்கை ஒளிகளின்
# வனப்பான அழகு



சான்போரைஸ்ட் பாப்ளின்ஸ்:
கோல்ட் ட்ரிங்க், ப்ளூபர்ட், எவர் ப்ரைட்,
குட் ஷைன்.

ஷர்ட்டிங்ஸ்: ஸ்டிரைப், டாப்பி, செக்ஸ், பைஜாமச

தோதீஸ்: ராஜா ஸ்பெஷல், ராணி ஸ்பெஷல்,
ப்ளாடினம், காம்ராஜ்





ஸூட்டிங்ஸ்:
காபர்டீன்

லெசவான கலர் புட்டாக்கள்:

ப்ரிண்ட்ஸ்:
ப்ரிண்டட் லான்ஸ், வாயில்ஸ், பாப்ளின்ஸ்,
ஸ்கிரீன் ப்ரிண்ட் ஸாரீஸ்

2x2 கவர்ச்சியான முழு வாயில்கள்—வீரேஸிலும்
புட்டாக்களிலும்

·SANFORIZED·

Arvind Quality Fabrics

## அரவிந்த்
மில்ஸ் லிமிடெட் அஹமதாபாத்

"அநியாயம்! அக்கிரமம்!" என்று பொங்கி வரும் ஆத்திரத்துடன் படபடத்தான் கோவிந்தவர்மன். "இந்த அநியாய காரியம் நடைபெற நாம் ஒரு போதும் இடம் தரலாகாது. எதற்கும் துணிந்து அந்தத் திருமணத்தைத் தடுத்தே ஆக வேண்டும்."

அவனுடைய துடிப்பு நிறைந்த பேச்சை ஆமோதிப்பவர்போல் பலமாகத் தலையாட்டிய பழையாறைச் சோழர் எதைப் பற்றியோ ஆழ்ந்து சிந்தித்தவாறு வெளிப்புற வாயிலை நோக்கி நடந்தார். கோவிந்தவர்மனும் அவரைப் பின்தொடர்ந்தான்.

"இளவரசே! உங்களுக்கு இந்தப் பல்லவ நாட்டின் தேசிய நலனிலும் ஆத்மீக நலனிலும் அக்கறை உண்டு அல்லவா?" என்று திடுமெனத் திரும்பிக் கேட்டார் பழையாறைச் சோழர்.

"அவற்றில் எப்போதுமே எனக்குப் பரிபூரண ஆர்வமும் அக்கறையும் உண்டு ஐயா!" என்று திண்மை வாய்ந்த குரலில் பதிலிறுத்தான் கோவிந்தவர்மன்.

"அவற்றுக்காக நீங்கள் எந்தத் தியாகமும் செய்யத் தயாராக இருப்பீர்கள், அல்லவா?"

"உயிர்த் தியாகத்தைவிடப் பெரிய தியாகம் என்ன இருக்கிறது? அதற்கும் நான் தயாராக இருக்கிறேன்!"

"இல்லை, இல்லை. அந்த மாபெரும் நலன்களைக் காக்க, அதனிலும் பெரிய தியாகம் ஒன்றைச் செய்ய வேண்டி நேரிடலாம்" என்று அடித்தொண்டையில் கரகரத்த பழையாறைச் சோழர், அவனைக் கூர்ந்து நோக்கியவாறு மேலும் சொன்னார்: "ஆம், இளவரசே! அந்தப் பணியில் நீங்கள் மூவேளிர்களாலும் தேசத் துரோகி என்ற பட்டத்துடன், உங்களுடைய ஆருயிர்ச் சகோதரரான பரமேசுவரவர்மரின் இரத்த சொந்தத்தையும் நிரந்தரமாக இழக்கும்படி நேரிடலாம்."

இதைக் கேட்டதும் கோவிந்தவர்மனின் உடல் அவனையும் அறியாமல் ஓர் அதிர்ச்சியுற்றுக் குலுங்கியது. தொண்டையில் ஏதோ ஒன்று வந்து அடைத்துக் கொண்ட மாதிரி திக்கு முக்காடித் திணறிய அவன், பின்னால் திரும்பி அந்த இல்லத்தின் சித்திரத் திண்ணைப் பக்கமாகத் தன் பார்வையை ஓட்டினான். இந்நேரம்வரை அங்கே தூணின் மறைவில் ஒடுங்கி நின்றுகொண்டிருந்த இளங்கோப்பிச்சி அப்போதுதான் விருட்டென்று உள்ளே ஓடுவது தெரிந்தது. அந்தக் காட்சியைக் கண்ட அக்கணமே அவனுக்கு ஏற்பட்ட திக்குமுக்காடலெல்லாம் மறைந்து ஒருவித மூர்க்காவேசம் முறுக்கேறவே, "என் தாய்த்திரு நாட்டின் அகப்புற நலன்களுக்காக எத்தகைய சொந்த பந்தத்தையும் இழக்க நான் தயாராயிருக்கிறேன்!" என்று தன் அகன்ற மார்பை நிமிர்த்திக் கொண்டு செருக்குடன் கூறினான்.

## அத்தியாயம் பன்னிரண்டு

# 'சம்புவராயா நில்!'

மகிழ்ச்சிப் பெருக்கால் கடகட வென்று நகைத்த பழையாறைச்சோழர் கம்பீரமாக நிமிர்ந்து, "சம்புவராயா!" எனக் குரல் கொடுத்தார்.

சற்றுத் தொலைவில் நின்றிருந்த ஆபத்துதவி சம்புவராயன் பணிவும் குழைவுமாக ஓடி வந்தான்.

"நான் சொன்ன காரியம் என்ன ஆயிற்று?"

"சோழ இளவரசியார் பயணப்படுவதற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து முடித்துவிட்டேன், பிரபு!"

"ஆமாம்; இளங்கோப்பிச்சியைப் பத்திரமாகப் பழையாறை அரண்மனையில் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டியது உன் பொறுப்பு."

"உத்தரவு, அரசே!"

உற்சாகத்துடன் திரும்பிய பழையாறைச் சோழர், "இளவரசே, புறப்படுங்கள்!" என்றவாறு தம் புரவியை நோக்கி நடந்தார்.

"தங்கள் திட்டம் என்ன என்பது பற்றி என்னிடம் எதுவும் சொல்லவில்லையே?...." என்று அடைத்த குரலில் இழுத்தான் கோவிந்தவர்மன்.

"அந்தப் பயங்கரத் திட்டத்தை வெளிப்படுத்த இது தருண மல்ல; அதற்கு இந்த இடமும் தோதுப்படாது. என்னோடு புறப்படுங்கள்: உரிய இடத்தில் உரிய நேரத்தில் அதை உங்களிடம் தெரிவிப்பேன்" என்றவாறு குதிரை மேல் ஏறி அமர்ந்தார் பழையாறைச் சோழர்.

தயங்கி நின்ற கோவிந்த வர்மன் தன்னை மீறிய ஓர் ஆவலுடன் பின்னால் திரும்பிப் பார்த்தான். இளங்கோப்பிச்சியின் நிழல்கூட அங்கே தென்படவில்லை. துயரப் பெருமூச்சு விட்ட

வீரும், தன் புரவி மீதேறிப் பழையாறைச் சோழருடன் புறப்பட்டான்.

**வி**ளக்கேற்றும் நேரத்தில் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தாள் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி. நெடுந்தூரப் பயணத்துக்குத் தயாராக வந்திருக்கிறாள் என்பதை அவள் அணிந்திருந்த ஆடை அணிமணிகள் புலப்படுத்தின. ஆனால் இந்நாள் வரை அவளது முகத்தில் குடிகொண்டிருந்த உல்லாச மகிழ்ச்சிக் களை இப்போது சிறிதும் காணப்படவில்லை. ஆனால் ஏதோ ஒரு திடமான முடிவு மட்டும் அவள் மனத்தில் உருவாகி யிருப்பது போல் தோன்றியது.

வாசலில் சிவிகையொன்று இறக்கி வைக்கப் பெற்றிருக்க, அதன் பின்னால் பணியாட்கள் அறுவர் நின்றிருந்தனர்.

வானத்தைக் கவலையுடன் அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்த சம்புவராயன், சோழ இளவரசியைக் கண்டதும், ''இடியும் மின்னலுமாக வானம் இருண்டு கிடப்பதைப் பார்த்தால் பலத்த மழை பெய்யும்போல் தோன்றுகிறது. எனவே, இளவரசியார் தம் பயணத்தைத் தள்ளி வைத்து நாளைக் காலை புறப்படுவது நலமாயிருக்கும் என்று கருதுகிறேன்'' என்றான்.

இளங்கோப்பிச்சி, ''கூடவே கூடாது; இன்றே, இப்போதே பயணப்பட்டாக வேண்டும்!'' என்று கூறிச் சரேலெனச் சிவிகையில் ஏறி அமர்ந்தாள்.

சிவிகை புறப்பட்டது.

இப்போதோ, இன்னும் கொஞ்ச நேரத்திலோ மழை வந்துவிடலாம் என்ற அச்சம் அந்தச் சிவிகை தூக்கிகளின் கால்களில் ஒரு விறுவிறுப்பை ஏற்றிவிடவே, அவர்கள் தம் சக்திக்கு மீறிய வேகத்துடன் விரைந்தனர். இடையிலே நீண்ட வாள் தொங்கலாட, வலது கையில் தீப்பந்தமும், இடது கையில் சட்டியுமாகச் சிவிகைக்கு முன்னால் வழி காட்டி ஓடிக்கொண் டிருந்தான் ஆபத்துதவி சம்புவராயன்.

எதிர்பார்த்த நேரத்துக்கு இரண்டு நாழிகை முன்னதாகவே, அந்தப் பல்லவபுரம் சாலையிலிருந்து தவத்துறைக்கு ஒரு சாலையும், பெருவளநல்லூருக்கு ஒரு சாலையும், காஞ்சிக்கு ஒரு சாலையுமாகப் பிரியும் நாற்சந்தி யொன்றை நெருங்கிக் கொண்டிருந்தது சிவிகை.

அது இரவின் இரண்டாம் சாம நேரம். சந்திரலேகை தஞ்சை மார்க்கமாகப் பழையாறைக்குச் செல்வதென்ற அவர்களுடைய பயணத் திட்டப்படி அந்த நாற்சந்தியை அடைந்ததும் தவத்துறைச் சாலைப் பக்கமாகச் சிவிகை திரும்பியது.

''சம்புவராயா, நில்!''

சட்டி வளையங்கள் 'ஜல், ஜல்' என்று ஒலியெழுப்பத் தீவட்டியைத் தூக்கிப் பிடித்தவாறு முன்னால் ஓடிக்கொண் டிருந்த சம்புவராயன் சட்டென்று நின்று சிவிகையை நோக்கிப் பரபரப்புடன் விரைந்து வந்தான். (தொடரும்)

## விளையும் பயிர்

அம்பாவுக்கு அப்பொழுது ஏறக்குறைய பத்து வயது இருக்கலாம். இந்தூரில் இருந்த அவள் தன் தந்தையுடன் பூனாவுக்கு வந்திருந்தாள். அங்குதான் அவள் முதன் முதலாகத் திரைப்படம் ஒன்றைப் பார்த்தாள். எப்படிப் படம் எடுக்கிறார்கள் என்பதைப் பார்க்கவேண்டும் என்ற ஆசை அவளைப் படம் எடுக்கும் கம்பெனி ஒன்றின் வாசலுக்கு இட்டுச் சென்றது.

'ஆர்ய பிலிம் கம்பெனி' என்று பெயர் தாங்கிய அந்தக் கம்பெனியின் வாசலில் காவல் நின்றவன் அவளை உள்ளே விடவில்லை. எனவே, பின்பக்கமாகச் சென்று காம்பவுண்டுச் சுவரில் தொற்றிக் கொண்டு, பார்க்கலானாள். வெளிப்புறத்திலிருந்து எழுந்த காவல்காரனின் கனத்த குரல் அவளைத் திடுக்கிடச் செய்தது. பதற்றத்தில் உட்புறமாகக் குதித்து விட்டாள்; கையில் இலேசாக அடிபட்டது.

படப் பிடிப்பை நிறுத்தி விட்டு அவளைத் தூக்கிச் சென்று, காயம் பட்டுச் சிராய்த்த இடத்துக்கு மருந்து போட்டுக் கட்டினார்கள். படத் தயாரிப்பாளர் சிறுமியான அவளை சந்தோஷப்படுத்த எண்ணி, 'நீயும் படத்தில் நடிக்கிறாயா அம்மா?' என்று கேட்டார். அடி, காயம், வலியை மறந்து 'இப்பொழுதே தயார்!' என்றாள் அவள்.



அவளுக்கு வேடம் போட்டு நடிக்க வைத்தார்கள். அக்கறையுடன் அந்தச் சிறுமி நடித்த முதல் படம் 'பதித — உத்தார்' என்பதாகும். அம்பா என்னும் பெயர் கொண்ட அந்தச் சிறுமி யார், தெரியுமா? இன்றையத் திரை வானின் மங்காப் புகழ் பெற்றிருக்கும் லலிதா பவார்தான். 'ஹிம்மதே மர்தா மததே குதா' என்னும் படத்தில் மூன்று வேடங்கள் தாங்கி நடித்திருக்கிறார். பல படங்களில் கதாநாயகியாக நடித்திருக்கிறார். கதாநாயகியின் தாயாக, வில்லியாக, ஏன், 'ஹம்ஷேர் பஹாதூர்' என்னும் படத்தில் ஒரு வாலிபனாகக் கூட நடித்திருக்கிறார் லலிதா பவார்.

ராம்நகரின் நாலாவது குறுக்கு வீதியில் உள்ள முதல் கட்டடத்தில்தான் இந்தக் கூட்டுறவு மளிகை ஸ்டோர்ஸ் இருக்கிறது... ஸ்டோரின் முன் பக்கம் நாற்காலியில் அமர்ந்தபடி 'அஷ்டாவதானம்' செய்து கொண்டிருக்கிறாரே வேலாயுதம், அவர்தான் அந்த ஸ்டோரின் ஸ்தாபகர். அவரே காஷியர். அவரே பில் எழுதுபவர். அந்த ஸ்டோரின் ஏக டைரக்டரும் அவரேதான். உள்ளே நான்கு வேலையாட்கள் எப்பொழுதும் பம்பரம் போல் சுழன்று கொண்டிருப்பார்கள். அந்த அளவுக்கு அங்கு வியாபாரம் உண்டு.

அந்தத் தெரு மகாஜனங்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதே ஸ்டோரின் முக்கிய லட்சியம். ஆகையினால் காலை ஆறு மணி முதல் இரவு பத்து மணி வரை சகல சாமான்களும் அங்கே சகாய விலைக்கு விற்கப்பட்டு

# கூட்டுறவு மளிகை!





வந்தன. 'க்யூ' வரிசை, ஞாயிறு விடுமுறை என்ற அநாவசிய அல்லல்களெல்லாம் அந்த ஸ்டோருக்குக் கிடையாது. அந்தப் பிராந்தியத்தில் உள்ள ஒவ்வொருவரையும் வேலாயுதம் நன்றாக அறிவார். ஆகவே அவரவரின் அவசரத்துக்குத் தகுந்தபடி முதலிலும், தாமதித்தும் சாமான்களைக் கொடுத்தனுப்புவார். விடுமுறை நாட்களில்தான் ஜனங்கள் சாவகாசமாகக் கடைக்கு வந்து சாமான்கள் வாங்க முடியும் என்பதை உத்தேசித்து, அந்த மளிகை ஸ்டோர் எல்லா நாட்களிலும் திறக்கப்பட்டிருக்கும்.

இன்னிசை இலக்கிய மன்றக் கூட்டுறவு மளிகை ஸ்டோர்ஸில் முதலீடு செய்திருந்த பங்குதாரர்களுக்கு ஆண்டுதோறும் பங்குத் தொகைக்கு மேலாகவே லாபப் பங்கீட்டுத் தொகை கிடைத்து வந்ததென்றால் அதற்கு ஸ்ரீமான் வேலாயுதத்தின் சலியாத உழைப்பும், சிக்கனச் சேவையும், அந்த ஸ்டோரின் மீது அவருக்கு இருந்த அபிமானமும்தான் காரணமாகும். அவர் ஓர் ஓய்வு பெற்ற ரயில்வே அதிகாரி. யாருடனும் அதிகமாகப் பேச மாட்டார். கருமமே கண்ணாக இருப்பவர். ஆனால் அந்த ஸ்டோரின் வரலாற்றைப் பற்றி மட்டும் யாராவது கேட்டு விட்டால் போதும். உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்க ஒரு மணி நேரமாவது அதன் வரலாற்றை உற்சாகமாக எடுத்துரைப்பார்.

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்பு ராம் நகர் காலனித் திட்டம் உருவாகிக் கொண்டிருந்த போது, இப்பொழுது இ. இ. ம. கூட்டுறவு மளிகை ஸ்டோர் இருக்குமிடத்தில் ஒரு சிறு கொட்டகைதான் இருந்தது. வீடு கட்டும் சங்கத்தார் அந்தக் கொட்டகையில்தான் தளவாடச் சாமான்களைப் போட்டு வைத்திருந்தார்கள்.

வீடு கட்டும் சங்கக் காரியதரிசியின் மகன் ராஜாராமன் அப்பொழுது கல்லூரிப்படிப்பை முடித்து விட்டு வேலை தேடும் முயற்சியில் இறங்கியிருந்தான். அவன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது, ஒரு சமயம் அங்குள்ள இலக்கிய மன்றத்தில் பத்து நிமிடங்கள் பேசுவதற்கு அவனுக்கு வாய்ப்பளிக்கப்பட்டது. ஆனால் ராஜாராமின் வாயிலிருந்து பத்து வார்த்தைகள் வெளி வருவதற்குள் பத்து நிமிடங்கள் பறந்தோடி விட்டன. சபையோருக்கு வணக்கத்தைக் கூட வாய் வார்த்தையாகச் சொல்லஇயலாமல் கைகூப்புதலின் மூலம் தெரிவித்து விட்டு, மூச்சுத் திணறத் தன் இடத்தில் போய் உட்கார்ந்தான். சிறந்ததொரு மேடைப் பேச்சாளனாக ஆகும் வரையில் காப்பியே சாப்பிடுவதில்லை என்று அப்பொழுதே ஒரு சபதம் எடுத்துக் கொண்டான் ராஜாராமன். அவன் இன்னும் காப்பி சாப்பிட்டதாகத் தெரியவில்லை. டீதான் சாப்பிட்டு வருவதாகக் கேள்வி!

ராஜாராமன் எடுத்துக் கொண்ட தீவிர முயற்சியினால் ராம் நகரில் இலக்கிய மன்றம் ஒன்று விரைவில் தொடங்கப்பட்டது. அக்கம் பக்கத்திலுள்ள இருபது முப்பது பேர்களை அங்கத்தினர்களாகச் சேர்த்தான். வீடு கட்

டும் சங்கத்தின் தளவாடச் சாமான்கள் போடப்பட்டிருந்த அறையின் ஒரு பகுதியே முதலில் இலக்கிய மன்றமாகத் திகழ்ந்தது. திறப்பு விழாவன்று அநேகமாக அங்கத்தினர்கள் அனைவருமே மன்றத்தின் முக்கிய குறிக்கோள்கள் பற்றியும் அதன் அபிவிருத்தி பற்றியும் சொற்பொழிவாற்றினார்கள். அப்பொழுது அந்த மேடையில் உரை நிகழ்த்தாத உறுப்பினர் வேலாயுதம் ஒருவர்தான். பேச்சைவிட மன்றத்தின் முன்னேற்றத்துக்கான செயல்களில் மூழ்கியிருந்தார் அவர். ராஜாராமன் எல்லோருக்கும் நன்றி கூற ராம் நகர் இலக்கிய மன்றத் தொடக்க விழா அன்று இனிது முடிவுற்றது.

மன்றத்தின் முதலாவது ஆண்டு விழாவின் போது கடந்த ஒரு வருஷ காலத்தில் முப்பது கூட்டங்கள் சிறப்பாக நடைபெற்றதென்று ஆண்டறிக்கை வாசித்தான் ராஜாராமன். அங்கத்தினர்களில் ஒருவர் தலைவராகவும், மற்ற அங்கத்தினர்கள் பேச்சாளர்களாகவும் விளங்கினார்கள். அந்த முப்பது கூட்டங்களிலும். அதில் மனப்பாடம் செய்து கொண்டு வந்த சொற்பொழிவாளர்கள் பலர்; அதுவும் முடியாமல் எழுதி வாசித்த சொற்பொழி




வாளர்கள் சிலர். ராஜாராமன் மன்றத்தின் செயலாளராகப் பணியாற்றி வந்ததனால், நன்றியுரை கூறுவதில் அவன் நன்றாகப் பயிற்சி பெற்று வந்தான்.

எதிர்பாராத விதமாக ராஜாராமனுக்குப் பம்பாயில் ஓர் உயர்ந்த உத்தியோகம் கிடைத்துவிடவே, மன்றத்தின் சார்பில் சுப்பராயலு நாயுடு ஒரு பாராட்டுக் கூட்டம் நடத்தி அவனை வாயாரப் புகழ்ந்து பம்பாய்க்கு அனுப்பி வைத்தார். மன்றத்தின் பொறுப்பு முழுவதையும் நாயுடுகாருவிடமே விட்டுச் சென்றான் ராஜாராமன்.

நாயுடுவுக்குப் பத்திரிகைகள் படிப்பதில் ஆர்வம் அதிகம். எனவே அவர் செயலாளராக ஆனதும் மன்றத்தில் ஒரு வாசகசாலையை ஆரம்பித்து, ''ராம்நகர் இலக்கிய மன்ற வாசக சாலை'' என்று மன்றத்தின் பெயரையும் ஓரளவு நீட்டி அமைத்தார்.

வாசகசாலை நிறுவப்பட்டவுடன் மன்றத்தின் அங்கத்தினர்கள் தொகை ஓரளவு அதிகரித்தது. ஆனால் அங்கு இலக்கியச் சொற்பொழிவுகள் நடைபெறுவது அரிதாயிற்று. சொற்பச் செலவில் பல பத்திரிகைகளைப் படிக்கும் வசதி கிடைத்ததனால் அங்கத்தினர்கள் எல்லாரும் சுப்பராயலு நாயுடுவின் சேவையைப் பாராட்டி, வாசக சாலைக்குப் புத்தகங்களை நன்கொடையாக வழங்க முன் வந்தார்கள். வாசக சாலையில் மூன்று அலமாரிகள் நிறையப் புத்தகங்களும் சேர்ந்து விடவே, வாசக சாலை என்ற பெயரை நீக்கிவிட்டு, ''இலக்கிய மன்ற நூலகம்'' என்று ஏகமனதாக மறுநாமம் சூட்டினார்கள் அதன் அங்கத்தினர்கள்.

வீடு கட்டும் சங்கத்தினர் அமைத்திருந்த கீற்றுக் கொட்டகை பழுதடைந்து வந்ததனால் மழைத் தண்ணீரும் சூரிய ஒளியும் கூரை வழியாக உள்ளே பாய ஆரம்பித்தன. இதனால் சில புத்தகங்களும் பத்திரிகைகளும் நனைந்து கிழிவதை நாயுடுவினால் சகித்துக்கொள்ள முடியவில்லை. வீடு கட்டும் சங்கத்தாரிடம் இது பற்றிப் புகார் செய்வதற்கும் வழியில்லை. அவர்கள் அந்தக் கீற்றுக் கொட்டகையை இலவசமாகத்தான் இலக்கிய மன்றத்தாருக்கு உதவியிருந்தார்கள். இதைப் பற்றியெல்லாம் விரிவாக ஆலோசிப்பதற்காக இலக்கியமன்ற நூலகத்தில் விசேஷக் கமிட்டிக் கூட்டம் ஒன்று கூட்டப்பட்டது.

மன்றத்துக்கென்று சொந்தமாக ஒரு கட்டடம் தேவை என்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. ஆனால் கட்டடம் கட்டுவதற்கான பணத்தை எப்படிப் பெறுவது என்பதில் பல சர்ச்சைகள் தோன்றின. செல்வந்தர்கள் பலரிடம் சென்று பணம் வசூலிக்கலாம் என்ற கருத்தை ஒருவர் வெளியிட, ''நிதி உதவி கோரி வருபவர்கள் உள்ளே நுழையக் கூடாது'' என்ற போர்டுகள் பல பெரிய மனிதர்கள் வீட்டு வாசலில் தொங்குவதை நினைவுபடுத்தினார் அவருக்கு அடுத்தாற் போலிருந்தவர்.

ஹிந்துக்களின் மகத்தான லட்சியம் மன உலகைத் துறப்பது மட்டுமல்ல; வாழுலகையும் துறப்பதே அந்த லட்சியம். தீமையை விடுவது மட்டுமல்ல; நன்மையையும் விடுவதே நமது லட்சியம். எல்லாவற்றையும் கடந்து காண்கிற இந்தத் தோற்ற வாழ்வைக் கடந்து உண்மையாயும், அறிவாயும், ஆனந்தமாயும் உள்ள பரம்பொருளை அநுபவிப்பதே நமது மதத்தின் குறிக்கோள். — ஸ்வாமி விவேகானந்தர்

பவருடைய யோசனைகள் நன்றுபடி செய்யப்பட்டபின், குணசேகரப் பெருமாள் என்ற அங்கத்தினர் எழுந்து நின்று "மதிப்பிற்குரிய நமது மன்றத்துக்குக் கட்டடம் ஒன்று கட்டுவதற்கு ஏராளமான பணம் திரட்ட வேண்டுமானால் அதற்கு மிகவும் சுலபமான ஒரே வழி, பிரபல பாடகர்களை வரவழைத்து நிதிக் கச்சேரிகள் செய்விப்பதுதான்" என்று விளக்கினார். அந்த வழியைப் பெரிதும் பாராட்டி வரவேற்றனர் அங்கத்தினர்கள்.

திருவாளர் குணசேகரப் பெருமாளுக்கு, சங்கீதத்தில் அளவு கடந்த மோகம். பல சங்கீத வித்வான்களிடம் நெருங்கி சங்கீத வித்தையைக் கற்றுக்கொள்ள முயன்றார். சுருதி என்பதோடு அவர் இசைய முடியாத காரணத்தினாலும், அக்கம் பக்கத்தில் காது படைத்தவர்கள் பண்ணிய புண்ணியத்தின் பயனாகவும், தமது பயிற்சியையும் முயற்சியையும் நிறுத்திவிட்டார். பிரபல சங்கீத வித்வான்கள் சிலரை அவர் நேரில் தெரிந்து வைத்திருந்ததனால் அவரையே இலக்கிய மன்ற நூலகத்தின் செயலாளராகத் தேர்ந்தெடுத்தார்கள் அங்கத்தினர்கள்.

இலக்கிய மன்ற நூலகத்தின் புதிய செயலாளர் இசைக் கச்சேரிகள் ஏற்பாடு செய்வதில் தீவிரமாக இறங்கினார். ராம்நகரில் புதிதாக வீடு கட்டிக் கொண்டு குடியேறிய சங்கீத ரசிகர்களுக்கெல்லாம் அடிக்கடி நல்ல இசை விருந்து கிடைத்து வந்தது. காலனியில் புதிதாகத் தொடங்கிய ஆரம்பப் பாடசாலை விளையாட்டு மைதானத்தில் இதற்கென்றே ஓர் இசை மேடையையும் நிரந்தரமாக அமைத்து விட்டார்கள்.

மாதம் இரண்டு கச்சேரிகளுக்குக் குறைவில்லை. இடையிடையே பரத நாட்டியம், கதா காலட்சேபம் என்று இசை சம்பந்தப்பட்ட கதம்பக் கச்சேரிகளும் நடந்தன. இவற்றின் வழியாக நூலகத்துக்கு ஏராளமான நிதியும் வசூலாகி வந்தது.

இ. ம. நூலகம் சங்கீதத்துக்கே முக்கியத்துவம் கொடுத்து விட்டதினால், மன்றத்தின் பெயரில் மற்றுமொரு மாறுதல் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அங்கத்தினர்களின் அபிப்பிராயப்படி அதற்கு "ராம்நகர் இன்னிசை இலக்கிய மன்றம்" என்று புதுப் பெயர் சூட்டப்பட்டது.

போதுமான அளவு நிதி சேர்ந்துவிட்டதனால் மன்றத்துக்கென்று ஒரு தனி இன்னிசையரங்கு கட்டுவதென்று திட்டமிட்டார்கள் அதன் அங்கத்தினர்கள். முன்பு மன்றம் செயல்பட்டு வந்த இடத்தையே விலைக்கு வாங்கி அங்கு ஒரு சபா மண்டபத்தையும் உருவாக்கினார்கள்.

இன்னிசை இலக்கிய மன்றம் சிறந்த வித்வான்களின் கச்சேரிகளை நடத்தி வந்ததனால் சுற்றுப்புறங்களில் அதன் பெயர் பிரபலமாயிற்று. அதன் செயலாளர் குணசேகரப் பெருமாளின் வீட்டுக்கு இளம் வித்வான்களும் பிரபல நடன ராணிகளின் பெற்றோர்களும் படையெடுக்க ஆரம்பித்தார்கள். அவர்களது வேண்டுகோள்களையும் அவர்கள் கொண்டு வந்த சிபாரிசுக் கடிதங்களையும் தட்ட முடியாமல் இ. இ. மன்றத்தின் புதிய அரங்கில் பெரும்பாலும் இளம் வித்வான்களின் கச்சேரிகளையும் நடன அரங்கேற்றங்களையுமே அமைக்க ஆரம்பித்தார் செயலாளர். கூட்டம் குறைந்து கொண்டே வந்தது. ஆதரவாளர்களும் சிறிது சிறிதாக மன்றத்திலிருந்து விலகிக் கொண்டார்கள். இதனால் மன்றத்துக்கு ஏற்கனவே இருந்த தலைக் கடனோடு புதிய கடன்களும் ஏற ஆரம்பித்தன. தம்மை விட்டுவிட்டால் போதும் என்ற நிலைக்கு வந்துவிட்டார் அதன் செயலாளர் குணசேகரப் பெருமாள்.

ஆரம்பத்திலிருந்து மன்றத்தின் மாறுதல்களை உற்றுக் கவனித்து வந்தார் அதன் அங்கத்தினர்களில் ஒருவரான வேலாயுதம். இலக்கிய மன்றம் வாசகசாலையாக மாறியபோதும், நூலகமாக ஆனபோதும், பின்னர் இன்னிசை மன்றமாக உருவெடுத்தபோதும் ஸ்ரீமான் வேலாயுதம் அதற்குத் தமது பரிபூரண ஆதரவைக் கொடுத்து உதவினார்.

ராஜாராமன் ஆரம்பித்து வைத்த நல்லதொரு மன்றத்தின் பெயர் நீடூழி காலம் நிலைத்திருக்க வேண்டும் என்பது அவருடைய அந்தரங்க ஆவல்.

ராம்நகரின் நாலாவது குறுக்குத் தெருவின் பக்கம் மளிகைக் கடை அப்போது தோன்றவில்லை. ஆகவே கடனில் ஆழ்ந்திருக்கும் இன்னிசை இலக்கிய மன்றத்தைக் காப்பதற்காகப் புதிய இசைஅரங்கில் ஒரு மளிகை ஸ்டோரை ஆரம்பிக்கத் திட்டமிட்டுப் பங்குதாரர்களையும் சேர்த்தார் வேலாயுதம். அவர் நாணயத்தையும் நல்ல உழைப்பையும் அறிந்திருந்த அனைவரும் தாராளமாகப் பங்கு முதலீடு செய்ய முன்வந்தனர். ஒரு சுபதினத்தில் "ராம்நகர் இன்னிசை இலக்கிய மன்றக் கூட்டுறவு மளிகை ஸ்டோ"ரின் திறப்பு விழா நடைபெற்றது.

தூங்கும் நேரம் தவிர மற்ற எல்லா நேரங்களிலும் ஸ்டோரின் அபிவிருத்தியைப் பற்றியே சிந்தனை பண்ணினார் வேலாயுதம். அவரது தீவிர முயற்சியினால் இரண்டு வருஷ காலத்தில் மன்றத்தின் கடன்கள் அடைக்கப்பட்டு அமோக லாபமும் வந்தது. இலக்கிய மன்றம் இதற்கு மேல் மாறுதல் அடைய முடியாது என்ற நம்பிக்கையுடன் வியாபாரத்தை உற்சாகமாக நடத்தி வருகிறார், அதன் பூர்வீக அங்கத்தினர் வேலாயுதம். அதன் பூர்விகப் பெயரையும் மளிகை ஸ்டோருடன் சேர்த்திருப்பதனால் வெளியூர்களிலிருந்து வருபவர்களுக்கு அது இன்றும் ஒரு விந்தைப் பெயராக விளங்குகிறது!

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

ஹார்லிக்ஸ் செய்யும் நன்மைக்கு ஒரு உதாரணம்:

# எனக்கு அஷ்டமத்தில் சனி ஆறாம் இடத்தில் குரு—






டாக்டர் சொன்னார்: "உங்கள் உடம்பில் ஏதும் கோளாறு இல்லை; உடலுக்குத் தேவையான போஷாக்குக் கிடைப்பதில்லை என்பதின் அறிகுறிகள் தாம் சோர்வும் அசதியும். தினமும் ஹார்லிக்ஸ் பருகுங்கள்." அன்றிரவு இதைப் பற்றி ஜோஸ்யர் சர்மாவிடம் கேட்டேன். "டாக்டர் சொல்வதைச் செய்யும்," என்றார் அவர்



சந்தேகத்துடன்தான் அன்று முதல் ஹார்லிக்ஸ் அருந்த ஆரம்பித்தேன்; ஆனால் பலன் உடனுக்குடன் தெரிந்தது! இப்பொழுதெல்லாம் தெம்பும் சுறுசுறுப்புமாய் இருக்கிறேன். சம்பு சித்திக்கு ஒரே ஆனந்தம்! டாக்டர் என்னை ஹார்லிக்ஸ் பருகும்படி சொன்னது என் ஜாதக விசேஷம் தான்!




## ஹார்லிக்ஸ் அதிக சக்தி யளிக்கிறது!

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

